ஓம்.

பரப்ரம்மணேநம:.

# அத்வைதவிளக்கம்.

# ADVIATA VILAKKAM.

இது

துவிதமததிரஸ்காரி

என்பவரால்

இயற்றப்பட்டு,

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

விளம்பி௵.

இதன்விலை அணா ௬௨.

ஓம்.

பரப்ரம்மணேநம:.

# அத்வைதவிளக்கம்.

# ADVIATA VILAKKAM.

இது

துவிதமததிரஸ்காரி

என்பவரால்

இயற்றப்பட்டு,




சென்னை:

ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1898.

விளம்பி௵.

இதன்விலை அணா ௧௨.

சித்தாந்தமாய
இந்நூலின்கண்
யுள்ள பிரமம் ஏகமாய்
பஞ்சம் பாத புத்திக்கு
அநிர்வசனீயமா மென்
உலக கார
அம்முத்தி
வாரே ம
த்தில்
தலைட்
யென்
ன்று
மாக

வக்மா'

# இந்நூற்குப் பிரமாணமாகக் காட்டிய நூல்கள்.

---

ஆத்தமபோதோபநிஷத்
யோகசிகோபநிஷத்
பஞ்சப்பிரமோபநிஷத்
வராசோபநிஷத்து
சர்வசாரோபநிஷத்
நிராலம்போபநிஷத்
மைத்திராயண்ணியுபநிஷத்
முத்திகோபநிஷத்
கடோபநிஷத்
பைங்களோபநிஷத்
நாரதபரிவிராஜகோபநிஷத்
ருத்திரஇருதய உபநிஷத்
அத்வயதாரகோபநிஷத்
அமிர்தபிந்துபநிஷத்
மகோபநிஷத்
மைத்திரேயோபநிஷத்
கைவல்லியோபநிஷத்
தைத்திரியோபநிஷத்
ஆரீதஸ்மிருதி
வாயுசங்கிதை
சைவபுராணம்
சூதசங்கிதை
கூர்மபுராணம்
விஷ்ணுபுராணம்
ங்கரசங்கிதை
லிங்கபுராணம்
ரமகீதை
கவத்கீதை
ரிபுகீதை
ஈசுவரகீதை
ஞானவாசிட்டம்
திருக்குறள்
தேவாரம்
திருவாசகம்
திருமந்திரம்
தேவிகாலோத்தரம்
திருவிசைப்பா
பிரபோதசந்திரோதயம்
சிவஞானபோதம்
சிவஞானசித்தி
சிவவாக்கியர் பாடல்
அரதத்தர்
ஒழிவிலொடுக்கம்
நிஷ்டாநுபூதி
பாஷியஇருதயம்
வாசுதேவமநநம்
பஞ்சதசப்பிரகரணம்
கைவல்லியநவநீதம்
வேதாந்தசூளாமணி
பிரபுலிங்கலீலை
திருக்களிற்றுப்படிய ார்
வள்ளலார்சாத்திரம்
தண்டிஅலங்கா பாடல்
பட்டணத்தார்
தாயுமானவர்பாடல
சிவஞானதீபம்.

---

# முகவுரை.

ஞானைசுவரியமாதி திவ்யகுண விசிஷ்டனாகிய ஸ்ரீ பரமேசுவரனால் அநாதிமலபத்தராகிய சீவர்கள் உய்யுமாறு தரப்பட்ட வேதம் "பிரமசுவரூபத்திற்கு அந்நியமா யிருக்கிறதாயும், மாயாமயமான புத்தி இந்திரியாதிகளுக்கு விஷயமா யிருக்கிறதாயுமுள்ள ஜகத்தைச் சத்தியமென்கிற எண்ணம் கிரகிக்கத்தகாதது" என்றுகூறிய வண்ணம், ஆத்மாநாத்ம விசாரணையினால் அநாத்மாவைக் கழித்து ஆத்மா (பிரமம்) வாயிருக்க, கர்ம பத்தி ஞானங்களை முறையே அனுஷ்டிக்கும் அத்வைதிகளைச் சிலர்: அன்னியர்க் கறிவுருவாக்கங் கண்டு கேடுன்னி யுட்பொறாமையா முருவினராகி, மனப் புழுக்கமென்னும் மங்கையைப் புணர்ந்து வயிரனை மகனைப்பெற்று நித்தியாநித்திய வஸ்து விவேக மிலராயிருத்தலினால், காரணமின்றிச் சதா நிந்தித்து வருவாராயினர். இன்னோரில் ஒரு சாரார், வேதத்தையும், வேள்வியையும், வேதாந்தத்தையும், வேதியரையும் வெறுத்திகழ்வதே வேலையெனக் கொண்டவராய், புலி பசுத்தோல் போர்த்துக் கரந்துறைவதுபோல வைதிக சமயத்தைக் கஞ்சுகமாகக் கொண்டவராய் ஒழுகும் அவைதிக தாந்திரிகர்கள்: அத்வைத சித்தாந்தத்தின்மேற் செய்த பிரயோஜனமில்லா வீண் ஆட்சேபங்களெல்லாவற்றிற்கும் மற்றையர்கள் கண்டு மயங்கா வண்ணம் அத்வைதிகள் மறுப்பு எழுதி வெளியிட்ட எதிர் நூல்கள் எங்கும் உலாவுவது யாவரும் அறிந்த விஷயமேயாம். இஃதிங்ஙனமாக, சின்னாண்முன்னர் ம-ள-ள-ஸ்ரீ சதாசிவப்பிள்ளையென்பா ரொருவரும், ம-ள-ள-ஸ்ரீ சாமிநாதப்பிள்ளை யென்பா ரொருவரும் நாகைப் பிரம வாதியாராகிய அத்வைதியார் (நாகை நீலாயதாட்சியம்மையார் சந்நிதானத்தின் முன்னர் ம-ள-ள-ஸ்ரீ சோமசுந்தர நாயகரென்னும் தாந்திரிக ரொருவர் அத்துவிதசித்தாந்தத்திற்கும், தஞ் சித்தாந்தத்திற்கும் முரணுறச் சரியையாதிகளுக்குச் சாதன சதுஷ்டயங் கீழ்ப்பட்டதெனப் பிரசங்கித்ததை மறுத்தெழுதிய துண்டுப்பத்திரிகையின் மறுப்புக்கு மறுப்பாக) எழுதிய அத்வைத தூஷண நிக்ரக மென்னும் நூலைப் போலியாக மறுத்து "அத்வைத தூஷண நிக்ரக ஆபாசவினாவிடை" யென்றும், "அத்வைத தூஷண நிக்ரக மர்த்தனம்" என்றும் முறையே பெயரிட்டெழுதி வெளிப்படையாய் வேத சம்மதமான அத்வைத சித்தாந்தத்தை மறுத்தார்கள். அம்மறுப்பு அதற்கு மறுப்பாகா தென்பது நுண்ணறிவுடையார் துணிவாயினும், மந்தருங் கண்டு மயலுறா வண்ணம் அவ்விரு நூலையும் மறுத்து "அத்வைத விளக்கம்" எனப் பெயரீந்து இந்நூலை வெளிப்படுத்தினாம். அத்வைத சித்தாந்தம் சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களின் சித்தாந்தமாமென்பது இந்நூலை வாசிப்பதினால் நன்கு வெளியாம்.

இந்நூலின்கண் முக்கியமாக அமைந்த விஷயம் சச்சிதாநந்த வடிவாயுள்ள பிரமம் எகமாய்ப் பூரணமாயுள்ளதென்றும், ஏனைய ஜடாஜடப் பிரபஞ்சம் பாத புத்திக்கு எதுவாய கற்பிதம் அதாவது சதசத் விலட்சண அநிர்வசனீயமா மென்றும், மாயையென்ப தொன்று சத்தாயும் நித்தியமாயும் உலக காரணமாயும் இருப்பதோடு அம்மாயை முத்தியிலு முண்டென்றும் அம்முத்தியில் அம்மாயையினால் பிளவுபட்ட துவித முண்டென்றுங் கூறுவாரே மாயாவாதிகளென்றும், உமாபதி சிவாசாரியார் சங்கற்ப நிராகரணத்தில் "சைவவாதி சங்கற்பம்" "சைவவாதி சங்கற்ப நிராகரணம்" என்னும் தலைப் பெயர்களின்கீழ்க் கூறியவண்ணம் சைவ ரென்பார் அத்வைதிகளேயென்றும், பாகிய பூசையைக் காட்டிலும் அந்தர்ப் பூசை யுயர் வுள்ளதென்றும், சாதன சதுஷ்டயத்தை யடைவதற்குச் சரியை யாதிகள் சாதனமாக விருப்பதன்றிச் சரியையாதிகளை யடைவதற்குச் சாதன சதுஷ்டயம்

சாதனமாவ தின்றென்றும், வேதாந்த சாஸ்திரங்களிற் கூறும் “ஆ- என்னும் மொழி பிரமத்தைக் குறிப்ப தன்றிச் சீவனைக் குறிப்ப தின்றென் றும், நிமித்த காரணப் பொருள் அந்தர்யாமியாயிருக்கும் நோக்கத்தால் எல்லாப் பொருளுமாதல் பொருந்தாமையின் முதற்காரணப் பொருளே அந்தர்யாமியாயிருந்து எல்லாப் பொருளுமாதல் பொருந்து மென்றும், தாயுமானவர் மாயாரகிதமான அத்வைதியே யன்றி மாயாசகிதமான துவிதி யன்றென்றும், காரியம் என்பது அசத்தாவதன்றிச் சத்தாவது என்றும் இன்றென்றும், பிரமத்தை யுலகிற்கு அபின்ன நிமித்தோபாதான விவர்த்த காரணமென்று கூறுதல் பொருந்துமே யன்றி, கேவலம் நிமித்த காரண மென்று கூறுதல பொருந்தா தென்றும், சரியை கிரியை யோகங்கள் சரீரத் தின் தொழிலேயன்றி அறிவின் தொழி லன்றென்றும், சத்துப் பொருளிர ண்டு கலப்பால் ஒன்றுவதின்றென்றும், திரிபுடியுள்ள விட மெங்கும் மாயா சம்பந்த முண்டென்றும், பெண்டு பிள்ளைகள் வியாவகாரிக சத்தியமாவ தன்றிப் பாரமார்த்திக சத்தியமாவதின்றென்றும் உள்ளனவும் பிறவுமாம்.

இவ்வத்துவித விளக்கத்தில் ௸ ஆபாச வினாவிடையில் தப்பபிப்பிரா யத்தோடு வந்துள்ள தாயுமானவர் பாடலைப்பற்றிய விஷயத்திற்கும் திருக் குறளைப்பற்றியவிஷயத்திற்கும்மறுப்பெழுதாமைக்குக் காரணம்அரக்கோண வாசி வீரபத்திரமூர்த்தி யென்பவரும், தினகரன் வாயிலாக வெளிப்பட்ட சோமசுந்தர நாயகரென்பவரும் இதையே முன்னரெழுதி, இந்து என்பவ ரால் மாயாவாத சைவசண்டமாருதமென்னும் நூலின் 129, 130, 132, 133 வது பக்கங்களிலும், அவைதிக சைவசண்டமாருதம் என்னும் நூலின் 152, 153, 154-வது பக்கங்களிலும் மறுக்கப்பட்டிருக்கின்றமை பற்றியேயாம். அத்வைததூஷண நிக்ரகமென்னும் நூலின்மேல் மறுப்பாக வந்த ௸ இர ண்டு நூல்களில் சாமிநாதப்பிள்ளையென்பார் எழுதிய புஸ்தகம் ௸ ஆபாச வினாவிடையை யனுசரித்திருப்பதேயன்றி, வேறு முக்கிய விஷயம் அதில் இன்மையின், அதனை நேரே மறுக்காது விட்டனம். மற்றைய ஆபாச வினா விடையின் நடையானது சதாசிவப்பிள்ளையென்பார் எழுதும் பத்திரிகை நடைக்கு முற்றும் மாறாய், சோமசுந்தரநாயகர் நடைக்கு முற்றும் இணக்க மா யிருத்தலின், அது சதாசிவப்பிள்ளை யவர்களா லெழுதப்பபட்ட தென் பது சங்கைக் கிடனாம். மேலும் அது சதாசிவப்பிள்ளை யென்பார்க்கும் சாஸ் திர ஆராய்ச்சிக்கும் “எனக்கு மிக்கதைதனக்கு மெத்தனை தூரமாமால்” என்றவாறு வெகு தூர மென்பதினாலும் தெளிவாம். ஆபாச வினாவிடை யின் நடையினது போக்கால் அதற்கு ஆசிரியர் சோமசுந்தரநாயகர் என்றே துணியப்படுகின்றமையின், அவர் இவ்வத்துவித விளக்கத்தினாலும் மறுக்கப் பட்டாரென்பது திண்ணமாம். சோமசுந்தரநாயகர் மறைந்தொழுகினாலும் அவரது நடை அவரை வெளிப்படுத்திவிடுகின்றது; யாது செய்யலாம்! ஒரு சமயம் அவர் எழுதவில்லை யென்றாலும் அவர் அப்புத்தகத்தை யங்கீ கரித்துப் பிரசங்கஞ் செய்தமையின் அதுபற்றியேனும் அவர் இவ்வத்துவித விளக்கத்திற்கு எதிர்வாதியாகாது போகா ரென்பதாம்.

இவ்வத்துவித விளக்கத்தினால் துவித இருள் கெடுமாறு நூலெழுதியுப கரித்த சதாசிவப்பிள்ளை அவர்களுக்கும், சாமிநாதப் பிள்ளை அவர்களுக்கும், இம்முகவுரையால்வெளிப்பட்ட சோமசுந்தரநாயக ரவர்களுக்கும் மிக நன்றி கூறுகின்றாம். இன்னவரைப் போலவே மற்றையரும் வெளிப்பட்டு அத் வைத சித்தாந்தத்தை விளக்கிவைத்தற் கேதுவாய நற்செயல்களைப் புரியு மாறும் வேண்டுகின்றனம்.

---

# இந்நூலிலுள்ள விஷயங்கள்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௨௯ | கேடுகுடு | கேடு |
| ௨ | ௧௩ | தக்கத் | தக்க |
| ௫ | ௧௬ | தாந்திரிகள் | தாந்திரிகர்கள் |
| ,, | ௨௩ | கரதலாகமலம் | கரதலாமலகம் |
| ,, | ௨௫ | றின்றென்றும் | றின்றென்று |
| ,, | ௨௬ | கூறப்பாடாமை | கூறப்படாமை |
| ,, | ௩௨ | வாதிகடுளன்பது | வாதிகளென்பது |
| ௬ | ௨௬ | வ'வஞா | வ்வஞா |
| ,, | ௩௩ | ஜீவகவஞெ | ஜீவகவஞு |
| ,, | ,, | தயாஜெகுயா | தயாஜெகுயம் |
| ௭ | ௨௬ | அந்தக் | அந்த |
| ௮ | ௨௭ | தூஞகந நந்நியாயமா | தூஞகநநந்நியாயமா |
| ,, | ௩௩ | இன்மைபொருளி | இன்மைப்பொருளி |
| ௯ | ௧௪ | என்றதொடக் | என்றற்றொடக் |
| ௧௦ | ௨௪ | என்றதொட | என்றற்றொட |
| ௧௧ | ௯ | தமிழப் | தமிழ்ப் |
| ,, | ௩௪ | அத்வைதூஷண | அத்வைததூஷண |
| ௧௨ | ௧௨ | யிருப்பதற்கும் | யிருப்பதற்குப் |
| ,, | ௩௬ | அனிர்வனீய | அனிர்வசனீய |
| ௧௪ | ௧௪ | அத்வைதநிக்ரக | அத்வைததூஷணநிக்ரக |
| ,, | ௨௩ | மென்னும் | மென்றும் |
| ,, | ௩௨ | மைத்திரியோ | மைத்திரேயோ |
| ௧௫ | ௪ | புகல்வதாய் | புகல்வதாய்க் |
| ,, | ௨௨ | விக்கிர | விக்கிரக |
| ௧௬ | ௧௫ | பைபிலேயையும் | பைபிலேயும் |
| ௧௮ | ௬ | சிவலிங்கம் | சிவலிங்கப் |
| ,, | ௩௫ | காட்டியதைத் | காட்டியதையும் |
| ,, | ௩௩ | பூசைகளே | பூசையே |
| ,, | ௩௮ | செய்பவராயினரென்க | செய்வார்போலும் |
| ௧௯ | ௮, ௯ | உபநிடதம் உரைக்குமாறு | உபநிடதத்திலுள்ள |
| ,, | ௧௧ | நினைவிலர் | நினைவிலர்கள் |
| ,, | ௨௫ | யிருப்பன் | யிருப்பன்பன் |
| ௧௬ | ௩௬ | னூலுந் | னூலும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| உக | கரு | அத்நியாயத்தில் | அத்தியாயத்தில் |
| ,, | கக | விந்தை | வித்தை |
| ,, | ௩எ | தெய்வ | தெய்வம் |
| உஉ | ரு | வேதார்த்த | வேதாந்த |
| ,, | அ | (சிவரூபம் | (சிவரூபம்) |
| ,, | ௩உ | தெ டுதலும் | தொடுதலும் |
| ,, | ௩டு | பிராமணன் | ,(பிராமணன் |
| உ௩ | உக | பட்டதென்க | பட்டனவென்க |
| ,, | ௩அ | என்றுள்ள | என்றுமுள்ள |
| உச | கூ | வராகோப | "வராகோப |
| ,, | ௩ச | பிரிதலே | பிரிநிலே |
| உஅ | கச | நாட்டா | நட்டா |
| உகூ | ரு | சோமபத்தநி | சோமசம்புபத்ததி |
| ௩உ | கசு | தால் | தால்) |
| ௩கூ | உடு | திருவரசகம் | திருவாசகம் |
| ச0 | கசு | ஆராதார | ஆருதார |
| ,, | ௩ச | நீக்கிற் | நீக்கிக் |
| சஅ | ௩சு | உயர்த்தியம் | உயர்த்தியும் |
| டுக | கஎ | சாதுஷ்டயமே | சதுஷ்டயமே |
| டு௩ | உ | திபிகை | தீபிகை |
| ,, | கூ | சலக | சகல |
| ,, | உக | எது | ஏது |
| டுச | கசு | நித்தியா | நிதித்தியா |
| ,, | ககூ | அது | அவை |
| ,, | ,, | சானங்க | சாதனங்க |
| டுகூ | உஉ | நித்தியாசனமும் | நிதித்தியாசனமும் |
| ,, | உஎ | பிராதிப்தி | பிராப்தி |
| ,, | ௩சு | படுப்பொருள் | படுபொருள் |
| சு0 | க0 | நிக்கிர | நிக்கிரக |
| ,, | கடு | வறிஞர்கள் | வறிவிஞர்கள் |
| சுக | அ | இருகின்ற | இருக்கின்ற |
| சுஉ | க0 | நியும்புவது | நியம்புவது |
| ,, | உக | (பிரம) | (பிரமம்) |
| சு௩ | அ | தாசாங்கை | தாசங்கை |
| உ0 | உ | கடவுளருளால் | கடவுளரருளால் |
| ,, | ரு | தராவினல் | தராதலினல் |
| ,, | கசு | வழிசென்றோர் | வழிச்சென்றோர் |

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௬௮ | ௨௭ | பிராமணமா | பிரமாணமா |
| ௭௦ | ௮ | யுபஷத் | யுபநிஷத் |
| ௭௨ | ௧௪ | உ ம | உ - ம் |
| ,, | ௨௬ | வளைகுவிவு | வளைவுகுவிவு |
| ௭௮ | ௨௪ | (நியாயம) | (நியாயம்) |
| ௭௯ | ௩௪ | யாமியாமி | யாமி |
| ௮௦ | ௨௫ | மாயையினால் | மாயையால் |
| ௮௧ | ௭ | யோபநிடம் | யோபநிடதம் |
| ௮௨ | ௧௩ | எதமில்லா | ஏதமில்லா |
| ௮௩ | ௧௨ | றறுதுயர் | றருதுயர் |
| ௮௫ | ௩௭ | மடிக்கடிகை | மணிக்கடிகை |
| ௮௬ | ௩௪ | நிச்சம்பனாய் | நிச்சம்பன்னனாய் |
| ௮௮ | ௧௦ | யிருந்ததால் | யிருந்தால் |
| ,, | ௨௫ | அரசனில்லாவிடத்து | அரசனுள்ளவிடத்து |
| ௯௦ | ௨௨ | புயலே | புனலே |
| ,, | ௪௩ | நூலன | நூலின் |
| ௯௨ | ௨௧ | சீவேசபேச | சீவேசபேத |
| ,, | ௨௩ | படிப் | படி |
| ௯௩ | ௩௨ | மூலத்தாற் | மூலத்தால் |
| ௯௫ | ௧௫ | தோன்று | தோன்றும் |
| ௧௦௦ | ௧௪ | வருளச் | வருளத் |
| ,, | ௨௮ | உவமானமாக | உதாரணமாக |
| ,, | ௩௧ | யாணடாண்டோ | யாண்டாண்டோ |
| ௧௦௨ | ௩௧ | கண்னும் | கண்ணும் |
| ௧௦௩ | ௪௦ | நிர்க்குண | நிஷ்கள |
| ௧௨௧ | ௪௧ | யெழுதி | யெழுதிச் |
| ௧௨௨ | ௨௩ | உடநிடதம் | உபநிடதம் |
| ௧௨௪ | ௩௦ | எதும் | ஏதும் |
| ௧௨௭ | ௩௬ | ஈசுரவனுக்கும் | ஈசுவரனுக்கும் |
| ௧௩௬ | ௩௨ | ஜகதீசனை | ஜகதீசனைச் |

---

ஓம்.

பரப்ரம்மணேநம:

# அத்வைத விளக்கம்.

## பீடிகை.

கடல்புடைசூழ்ந்த காசினியின்கண் வேதப்பொருள் விளங்கப் பெருத தேயத்துப் பிறவாது, அது விளங்கப் பெற்ற தேயத்துப் பிறந்தும் அதினும் வைதிகர் கூட்டத்திற்பிறந்தும் வைதிகநெறியில் ஒழுகாத சிலர் பூர்வ தவக் குறைவால் வைதிக நெறியி லொழுகுகின்றவர்களையும், வேதத்தையும், வேத முடிவான சித்தாந்தத்தையும் இகழ்ந்து, தீ வினைப் பயனை யீட்டிக் கொள்வதோடு, இப்பிறவியினு லடையவேண்டிய பேறியாதோ அதனையும் இழந்து விடுகின்றார்கள். அந்தோ! இவர்கள் ஊழிருந்தவா றென்னை! அம்மம்ம !கொடிது! கொடிது !! மகா கொடிது !!!

இதுவேயு மன்றி யிவர்கள் "தான் கெட்டது மன்றிச் சந்திர புட்கரணி யையுங் கெடுத்தான்" என்னும் பழமொழிக் கிணங்கும் வண்ணம் தாங் கெடுவதன்றியும் பிறரையுங் கெடுக்குமாறு மூக்கறையன் கதைக்கு முற் பட்டே நிற்கின்றார்கள் பாவம் ! என்செய்வது !

சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் வேதநெறியை வெறுத்தொதுக்கிய வீணரா லெழுதப்பட்ட அவைதிக மத சித்தாந்தத்தைத் தற்காலத்திலுள்ள சிலர் வகக்கொண்டு, அதுவே உத்தம சித்தாந்தமென்றும், வேதமுடிவான அத்வைத சிந்தாந்தம் அதற்குக் கீழ்ப்பட்டதென்றும், வேத மார்க்கத்தால் மோட்ச மின்றென்றும், வேதம் சாமானிய நூல், வியபிசார நூல், உலக நூல், மோக நூல், பந்த நூல் என்றும் இன்னு மிவ்வாறு பலபேசியும் எழு தியும் வருவாராயினர். இவ்வாறு வருவதோடு வைதிகர்போல நடிக்கவுந் தொடங்கினர்.

இவர்கள் இவ்வாறு நடித்து வேதத்தையும், வேதத்தின் முடி பொரு ளான அத்துவித சித்தாந்தத்தையும் வெறுத் திகழ்ந்து பேசியும் எழுதியும் வருவதை வைதிகர்கள் அறிந்து, அந்தோ ! இவர்கள் ஞானங்கமான விபூதி முதலியவற்றைத் தரிக்கும் பாக்கியம் பெற்றும், வேத பாகியக் கொள்கை யை யனுசரித்து நின்று உலகத்திற்குக் கேடு சூடு சூழ்விக்கின்றார்களே யென் றிரக்கங் கொண்டு, அவர்கள் அத்தீய மார்க்கத்தி னின்றும விலகி வைதிக மார்க்கத்தை யனுசரித்து உய்யவும், அத்வைத சித்தாந்தத்தின் மகிமை மாசுகழிந்த மணிபோல் விளங்கவும் அவ்வேத பாகியர் எழுதியவற் றிற்கெல்லாம் சுருதி யுக்தி யனுபவ சகிதமாய் மறுப் பெழுதி வருவாராயி னர். அவைகளிற் சில தற்போது புத்தக வடிவாயும் நிலவுகின்றன.

நிற்க; வேத பாகிய மாயா வாத துவித சைவ கண்டன புத்தகங்களி லொன்றாயும் நாகையிலுள்ள ஓர் பிரம வாதி யென்பவரா லெழுதப்பட்ட தாயுமுள்ள "அத்வைத தூஷண நிக்கிரகம்" என்னும் நூலுக்கு மறுப்பும்

போல ம-ா-ா-ஸ்ரீ ஜி. சதாசிவம் பிள்ளை யென்பா ரொருவர் எழுதிய "அத்வைத தூஷண நிக்ரகாபாச வினு விடை" என்னும் ஓர் சிறு புத்தகத்தைக் கண்ணுற்றனம்.

அது: வித்தியா ஸ்தானமென்று கூர்ம புராணம் விஷ்ணு புராணம் பாரதம் முதலியவற்றிற் சொல்லப்பட்டுள்ள வேத முதலிய பதினான்கு வித்தைகளையும் நிந்திப்பதாயும், யுக்தி யனுபவ விருத்தமாயும், வெற்றெனத் தொடுத்ததாயும், முன்னர் "மாயா வாத சைவ சண்டமாருதம்" "அவைதிக சைவசண்டமாருதம்" "பஞ்சதசப் பிரகரணபாசவிளக்கச் சண்டமாருதம்" "அத்வைத தூஷணபரிகாரம்" "அத்வைத வுண்மை" முதலிய புத்தகங்களில் வந்துள்ள மறுப்புகளைப்பற்றி யேதும் பேசாது, குருட்டுப் பாடமாய் (எழுதி மறுக்கப்பட்டதையே) எழுதியதாயும், முன்னொடு பின் முரணுவதாயும், அறிவுடையோர் பலருங் கண்டு அருவருத் தொதுக்கத் தக்கத் தூஷண வாக்கியங்களை நிரம்பப் பெற்றதாயும், தமது சித்தாந்தத்திற்கு உடன்பாடாகாத விஷயங்களைக் கொண்டதாயும் இருக்கிறது. இப்புத்தகம் பிரமவாதியாரா லெழுதப்பட்டுள்ள "அத்வைத தூஷண நிக்கிரகம்' என்னும் நூலுக்கு மறுப்பாக மாட்டாதென்பது நுண்ணுணர் வுடையாரது துணிபேனும் மந்த சிஞ்ஞாசுகள் மயங்காவண்ண மதற்கொரு மறுப்பெழுதத் தொடங்கினமென்க.

## பேர்வைத்ததற்குக் காரணம்.

'அத்வைததூஷண நிக்ரகாபாச வினுவிடை" என்னும் நூலுக்கு நாம் மறுப்பாக வெழுதும் நூல்: மாயாவாதப் பசாசங்கள் நிறைந்துள்ள தவிதாந்தகாரத்தைக் கெடுத்து, நிரதிசயாநந்த மென்னும் துரியப் பொருளை யடையமுயலும் சிஞ்ஞாசுகளுக்கு விளக்காயிருத்தலின் இதற்கு "அத்வைத விளக்க" மென்று பேர்வைக்கப்பட்டதென்பதாம்.

## மறுப்பெழுதும் நூல் வினு விடையா யிருத்தல் தகாதென்பது.

பூர்வபட்சியார், அத்வைத தூஷண நிக்கிரகமென்னும் நூலினின்றும் விஷயங்களைப் பத்திப் பத்தியாக வெடுத்துக் கண்டிக்காது, அதிலுள்ள விஷயங்களைத் தமக் கேற்றவாறு வினுவாக்கிக் கொண்டு, அதற்கு மறுப்பு விடையாக வெழுதி யிருக்கின்றனர். இவ்வாறு இவர் வினு விடையாக வெழுதியதினுலேயே அப்புத்தகத்தைப் பத்திப் பத்தியாக வெடுத்துக் கண்டிக்க இவரால் முடியவில்லை யென்பது நன்கு விளங்கிற்று.

ஒரு விஷயத்தில் மாறுபட்ட கருத்துடைய இருவர்: தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை நிறுத்துவதற்குத் தம்மின் மாறுபட்டவர் கூறும் நியாயங்களை வேறு நியாயங்களால் பிரபல பிரமாண மூலமாகக் கண்டித்து, தமக்குள்ள நியாயங்களை முன்கொணர்ந்து, தங் கட்சியை நிலை நிறுத்தலே உசிதமாம். அங்ஙனமின்றி மறுப்பை வினுவிடையாக வெழுதும் பட்சத்தில் ஒரு பகுதியாரே வினுவையும் விடையையும் எழுதவேண்டும். அவ்வா றெழுதுங்கால் தம் வினுவிற்கு எதிரியின் விடையை யசம்பாவிதமாகவும், தம் விடைக்கு எதிரியின் வினுவைப் பொருந்துமா றமைத் தெழுதவுங் கூடுமன்றோ! இங்ஙனஞ் செய்வதால் உள்ளதை யில்லதாகவும் இல்லதை யுள்ளதாகவும்அமைத் தெழுதிக் காட்ட லெளிதேயாம். இங்ஙனமாகப் பூர்வபட்சி

யார் எழுதிய வினு விடை மணம் பெறுத லெவ்வாறும் ? இலக்கண முத வியவற்றை வினுவிடையாக வெழுதுகின்றவர்கள்: விடை யிறுக்கத் தெரி யாத விஷயங்களுக்கு வினு வுண்டாக்காமற் போவதை யிவர் அறிந்திலர் போலும் !

வினு விடையாக ஓர் விஷயத்தை எழுதுகின்றவர், தங் கட்சிக் கேற்ற வாறு வரைவார்க ளென்பதை யோருதாரண முகத்தால் விளக்குகின்றும். அது வருமாறு:—

சாத்தன் : கொற்றனை நோக்கி : ஐயா ! இவ்வுலகப் பொருள்கள் கட் புலனுக்கு விஷயமாதற்கு அப்பொருள்களின்கண் அமைந்துள்ள தர்மம் யாது ?

கொற்றன்: அப்பொருர்களிலுள்ள உருவமாம்.

சா: உருவமென்றுல் என்னை ?

கொ: கண்ணினுல் மாத்திரம் கிரகிக்கப்படும் குணமாம்.

சா : அங்ஙனமாயின், இதோ நமக்கு முன் னின்று கரையும் காகம் என்ன நிறம் ?

கொ: கறுப்பு நிறம்.

சா: ஆம், அங்ஙனந்தான் தோன்றும்; ஆனுல் உள்ளபடி அதன் நிறம் கறுப்பன்று, வெண்மையாம்.

கொ: என் ஐயா முழுமோசமா யிருக்கிறது; காகம் வெண்மையென்று எந்தக் குருடன் சொல்லுவான் ?

சா: ஆம் ஐயா, உம்மைப்போன்ற குருடன்தான் அதைக் கறுப்பென் பான். எப்பொருள்களையும் ஆராய்ச்சிசெய்து உண்மையை விளக்கும் என் னைப் போன்றவர் அதனை வெண்மை யென்பார். உம்மைப்போலத் தோற்ற மெல்லா முண்மை யென்று கொள்ளும் அறிவிலிக்குக் காகம் கறுப்புத் தான்.

கொ: ஆனுல், நீர் ஆராய்ச்சி மேற்றுன் காகம் வெண்மை யென்று கூறுகின்றீரோ? அங்ஙனமாயின், அது எவ்வித ஆராய்ச்சி? இப்புதுமை யைச் சிறிது விரித்துக் கூறும் பார்ப்போம்.

சா: கூறுகின்றேன், சற்றுக் கவனியும், நமது கண் எந்த நிறத்தை யும் கிரகிக்கத்தக்க பல வேறு நீர்களையுடைய ஓர் கோளம். இக்கோளத்தின் வெளிப்புறம் கண்ணுடியைப்போன்று ஊடுருவிப் பார்க்கத்தக்க தசைச் சுவர். இதனை யொப்பினீரா?

கொ: ஆம், இது சரிதான்.

சா: ஆகவே, இதனை யோர் கண்ணுடியென்றே சொல்லலாம். இங்ஙன மிருக்க, நாம் மூக்குக் கண்ணுடி போட்டுப் பார்க்குங்கால் அக்கண்ணுடி யில்லை என்ன நிறமோ, அந்நிறமாகவே வெள்ளை நிறப்பொருள்கள் தோற்று கின்றன. பச்சைக் கண்ணுடி வழியாய்ப் பார்த்தால் வெண் பொருள்கள் பச்சையாகவும், சிவப்புக் கண்ணுடி வழியாய்ப் பார்த்தால் சிவப்பாகவும், மற்றெந்நிறக் கண்ணுடி வழியாய்ப் பார்த்தாலும் அவ்வந்நிறமாகவும் வெண் பொருள்கள் தோற்றுகின்றன. ஆனுல், அப்படித் தோற்றும் பொருள்கள் வாஸ்தவத்திலே அந்நிறந்தானே ?

கொ: அல்ல, வெண்பொருள்கள்தான்.

சா: ஆகவே, நமது கண்ணின் வெளிப்புறக்கோளம் கண்ணாடிபோன்ற தென்று முன்னரே கூறினோம். இக்கோளத்தின் ஒரு பாகத்தில் கண்மணி அமைந்திருக்கின்றது. இம்மணி கருநிறமானது. ஆகையால் அப்பாகம் கருங் கண்ணாடி யென்னலாம். ஆகவே, முற்கூறிய வண்ணம் எந்நிறக் கண்ணாடி வழியாய்ப் பார்த்தாலும் அந்நிறமாகவே வெண் பொருள்கள் தோற்றுகின் றன வாகையாலும், இக் கண் மணியாகிய கருங் கண்ணாடி வழியாய் நமது முன்னுள்ள இக்காகத்தைப் பார்க்கின்றோ மாகையாலும் இக்காகம் கறுப் பாகத் தோற்றுகிறது. கண்ணாடிக்குத் தக்கபடி பல வேறு நிறமாகத் தோற் றும் பொருள்கள் வெண்ணிறமுடைய வாகையால், இக்காகம் வெண் ணிற முடையதே யாம். இதனை விசாரித் துணராத பாவிகள் எதனை யுணர வல்லார்?

கொ: ஐயா, இதனை இவ்வண்ணம்பரிசீலித்துத் தங்களைப்போல் அறி விக்கும் வன்மை யுள்ளவர்கள் எனக்குக் கிடைக்காமையாற்றான், இது காறும் காகத்தைக் கறுப்பென் றிருந்தேன். இப்போது காகம் வெள்ளை யென்று தாங்கள் நியாயவாயிலாய்க் காட்டிவிட்டபடியால் இனி அங்ஙனம் சொல்லேன். ஐயா, இவ்வரிய உண்மையை எனக்கு விளக்கி என்னறியா மையைப் போக்கியதற்காக மிக்க நன்றி யுள்ளவனா யிருக்கிறேன். ஆனால் கொக்கு வெண்மையாய்த் தோற்றுகின்றதே; அதன் வாஸ்தவ நிறம் யாது?

சா: என்ன ஐயா, நீரிதனை யூகித்தறியக் கூடாதா? கொக்குக் கறுப்பு நிறம்.

கொ: அதெப்படி?

சா: கருமையும் வெண்மையும் எதிரிடையான குணங்களன்றோ?

கொ: ஆம்.

சா: கருமையாய்த் தோற்றிய காகம் ஆராய்ச்சியில் கருமைக்கு மாறான வெண்மையானால் வெண்மையாகத் தோற்றும் கொக்கு ஆராய்ச்சியில் வெண்மைக்கு மாறான கருமையாதல் தர்க்க நியாயத்திற் கொத்ததுதானே. இதனைக் கண்டு கூறல் சுலபமென்பதற் கையமேன்?

கொ: ஐயா, தங்களைப்போன்ற நுண்ணிய அறிவுங் கல்வியும் எனக் கில்லாமையாற்றான் எனக்கு உண்மை தெரிய வில்லை. நான் தங்களைத் சத்துவ ஆராய்ச்சியில் எனது குருவாக ஒப்பித் தங்களைச் சிவசொரூபமாய்க் காணுகிறேன். தங்கள் வாய்ச்சொல் எதுவும் மறுக்கத்தக்கதன்று. ஆகையால் தங்களை மறுக்கிறவர்களை அறிவிலிகளென்று ஒதுக்குவேன். என் சிரத்திற் றங்கள் பாதாரவிந்தத்தை ஸ்பரிசிக்கவேண்டும்.

இங்ஙனமாகச் சம்வாத நூலைத் "தட்டிப்பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப் பிரசண்டன்" என்றவா றெழுதிக் காக்கையை வெண்மையாகவும் கொக்கைக் கறுப்பாகவும் கற்பிக்கலாமே. பூர்வபட்சியாரெழுதிய 'அத்வைத தூஷண நிக்ரகாபாச வினாவிடை' மேற்காட்டிய வினாவிடைக்கு இனமாய் நிற்றலின், "அவளும் அறியாள், நானும் பொய் சொல்லேன்" என்னும் பழமொழிக் கினப்பட்டு, ஆபாச வினா விடையாயே முடிந்த தென்க."

## மாயாவாதி யார்? பிரமவாதி யார்?

பூர்வபட்சியார் ஆபாசவினுவிடைப் புஸ்தகத்தில் வைதிகரான அத்வைதிகளை மாயாவாதி யென்றும், அவைதிகத் தன்மை யமைந்துள்ள துவைதியான தமயினத்தார்க்குப் பிரமவாதி யென்றும் பேர்இட்டு, மாயாவாதி வினுவுவதாயும், பிரமவாதி விடை கொடுப்பதாயும் எழுதியிருக்கின்றனா. அவைதிக துவிததாந்திரிக சைவ பாஷண்டிகளே மாயாவாதிகளென்பதற்குரிய நியாயம் "துவித சைவரே மாயாவாதிகள்" "துவித சைவ மறுப்பு" முதலிய புத்தகங்களி லெழுதி யிருப்பதற்குப் பதில் கூற இடமின்றி ஓடி யொளித்து, கிறிஸ்தவர்கள் ஆரியர்களை யாதோர் நியாயமுமின்றி "அஞ்ஞானிகளே! அஞ்ஞானிகளே!" என்று விளிப்பதுபோன்று, அவைதிகர்கள் அத்வைதிகளை "மாயாவாதி, மாயாவாதி" என்று விளிப்பது சந்திரனை நோக்கிச் சாரமேயன் குரைப்பதற்கினமன்றி மற்றென்னும்!

அத்வைதிகள் மாயையை யில் பொருள் என்கிறார்கள்; துவிதிகளாகிய இவரினத்தார்களோ அம்மாயையை யுள் பொருள் என்கிறார்கள். மாயையை யுள் பொருளென்று கூறும் இவரினத்தவர்களான தாந்திரிகள், மாயாவாதிகளென்பது நியாயமேயன்றி, அதனை யில் பொருள் என்று கூறும் அத்வைதிகளை மாயா வாதிகளெனல் நியாய முறைமைக் கொவ்வமோ? பணமுள்ள வொருவனைப் பணக்காரன் என்றும், குடி யுள்ள வொருவனைக் குடியன் என்றும், கபடுள்ள வொருவனைக் கபடியென்றும், பொய் யுள்ள வொருவனைப் பொய்யன் என்றும் கூறுவதுபோல, மாயை யுள்ளதென்று கூறுந் தாந்திரிகர்களை மாயாவாதிக ளென்பதற்கு யாதோர் ஆசங்கையு மின்றென்பது கரதலாமலகம்போல் விளங்க வில்லையா? மாயையை இல் பொருளென்று கூறும் அத்வைதிகளைத்தான் மாயாவாதிக ளென்று புகல்கின்றோம் எனின், அது பொருந்தாது; கடவுள் என்பதொன் றின்றென்றும் கூறும் நாஸ்திகளை ஆஸ்திகனென்று கூறப்பாடாமைபோ லென்க. கடவுள் உண்டென்பவனை யாஸ்திக னென்றும் கடவு ளில்லை யென்பவனை நாஸ்திகனென்றும் கூறுவதுபோன்று, மாயையை யுள்பொருளென்று சுருதி விரோதமாகக் கூறும் துவித தாந்திரிகர்கள் மாயாவாதிகளென்றும், சுருதி சம்மதமாக மாயையை யில் பொருள் என்று கூறும் அத்வைதிகள் மாயாரகிதவாதிக ளென்றும் பெறப்பட்டமையின், அவைதிக துவிததாந்திரிக அசைவர்களே மாயாவாதிகளென்பது வச்சிரப்பூச்சாயிற் றென்க.

இவ்வுலகிற்குக் காலத்தை முதற் காரணமாகக் கொண்டவன் காலவாதி, பூதத்தை முதற் காரணமாகக் கொண்டவன் பூத வாதி, அணுவை முதற் காரணமாகக் கொண்டவன் அணுவாதி, சூனியத்தை முதற் காரணமாகக் கொண்டவன் சூனியவாதி யென்று பெயர் பெறுதல்போல இவ்வுலகிற்கு மாயையை முதற்காரணங் கூறுவோர் மாயாவாதிகளும், பிரமத்தை முதற்காரணங் கூறுவோர் பிரம வாதிகளு மாதல் திண்ணம். இங்ஙனமாக, பூர்வபக்ஷியார் விஷய மறியாது, அத்வைதிகளை மாயாவாதிக ளென்றும், துவிதிகளான தம்மவர்களைப் பிரமவாதிகளென்றும் எழுதியது தீபப் பிரபையைக் கண்டு மணியென்று நாடும் விசம்வாதிப் பிரமைக் கொப்பென்று விடுக்க. அற்றன்று: நாங்கள் (துவிதிகள்) உலகிற்கு முதற்காரணங் கூறும் மாயையை நீங்கள் (அத்வைதிகள்) பிரமமென்று கூறி, முதற் காரணம் புகல்வதால் யாங்கள் (துவிதிகள்) கூறும் மாயையைத்தான் நீங்கள் (அத்வைதிகள்) பிரமமென்கிறீர்கள்; அதனாற்றான் உங்களை (அத்வைதிகளை)

மாயாவாதிகளென்று நாங்கள் (துவிதிகள்) புகல்கின்றோமெனின், இது பொருந்தாது; என் பொருந்தாதெனின், துவிதிகள் உலகிற்கு முதற் காரணங் கூறும் மாயைக்கு இலக்கணம்

சிவஞானசித்தி உம் சூத்திரம்.

நித்தமாயருவாயேகநிலையதாயுலகத்திற்கோர்
வித்துமாயசித்தாயெங்கும்வியாபியாய்விமலனுக்கோர்
சத்தியாய்ப்புவனபோகந்தனுகரணமுமுயிர்க்காய்
வைத்ததோர்மலமாய்மாயைமயக்கமுஞ்செய்யுமன்றே. (௫௬)

என்று கூறுகின்றார்கள்; அத்வைதிகளோ உலகத்திற்கு முதற்காரணங் கூறும் பிரமத்திற்கு இலக்கணம்.

பிரபோதசந்திரோதயம் உற்பத்திச்சருக்கம்.

அத்துவிதம்வாசாமகோசரமனோதீதமசலமூலம்
தத்துவமப்பிரமேயஞ்சர்வசமம்சச்சிதாநந்தம்சாந்தம்
சுத்தமவியத்தமவிகாரமனுபவந்துரியம்சுயம்பிரகாசம்
நித்தியநிர்க்குணமனந்தநிரதிசயம்பிரமமெனநின்றதொன்றே. (௬)

கைவல்லியம் தத்துவவிளக்கப் படலம்.

இப்படியாகநாமரூபங்களிரண்டுமின்றி
ஒப்பிலாதிரண்டற்றொன்றாயுணர்வொளிநிறைவாய்நிற்கும்
அப்பிரமத்திற்றோன்றும்ஐம்பூதவிகாரமெல்லாம்
செப்புகற்பனையினாலேசெனித்தவென்றறிந்துகொள்ளே. (உ௮)

என்று கூறுகின்றார்கள்.

இதற் கியையச் சுருதியாதிப் பொதுப் பிரமாணமும் காட்டுகின்றாம்.

ஆத்மபோதோபநிஷத்.

𑌸𑌰𑍍𑌪𑌾𑌦𑍌 𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌤𑍍𑌤𑍈𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌸𑌤𑍍𑌤𑍈𑌵 𑌕𑍇𑌵𑌲𑌂 |
𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌾𑌧𑌾𑌰𑌰𑍂𑌪𑍇𑌣 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇𑌤𑍋 𑌜𑌗𑌨𑍍𑌨 𑌹𑌿 ||

பழுதையில் பாம்பு முதலியனபோல் (பழுதையில் பாம்பு என்கிற பிரமைக்குக் காரணம் பழுதைபோல) பிரபஞ்சத்திற் காதார ரூபமாய்ப் பிரமசத்து மாத்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது.

யோகசிகோபநிஷத்.

௪-ம் அத்தியாயம்.

𑌓𑌂. [illegible] | 𑌜𑍀𑌵𑌤𑍍𑌵𑌞𑍍𑌚 𑌤𑌥𑌾 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑌾𑌂 𑌸𑌰𑍍𑌪𑌗𑍍𑌰𑌹𑍋 𑌯𑌥𑌾 | 𑌰𑌜𑍍𑌜𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌕𑍍𑌷𑌣𑍇𑌨𑍈𑌵 𑌯𑌦𑍍𑌵𑌦𑍍𑌰𑌜𑍍𑌜𑍁𑌰𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌪𑌿𑌣𑍀 | 𑌭𑌾𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌚𑍍𑌚𑌿𑌤𑌿𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌕𑍇𑌵𑌲𑌾 | 𑌉𑌪𑌾𑌦𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋𑌽𑌨𑍍𑌯𑌨𑍍𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 | 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋𑌽𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌚𑍇𑌤𑌰𑌤𑍍 ||

ஓம். சைதன்னியம் ஒரே ரூபமானதினாலே பேதமானது ஒருபோதும் யுக்தமல்ல; கயிற்றிற் பாம்பென்கிற தன்மைபோல் ஜீவதத்துவத்தை யறிய வேண்டியது. கயிறு என்கிற ஞானமில்லாததினாலே ஒரு க்ஷணத்திற்குள் கயிறு சர்ப்பமாய்க் காண்கின்றது. அதுபோலக் கேவலம் சித்தானது தானே பிரபஞ்சமாக விளங்குகின்றது. பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் ப்ரம்மத்தைத் தவிர வேறில்லை. ஆகையால் இந்தச் சகலமான பிரபஞ்சமும் ப்ரம்மமாகவே யிருக்கிறது, வேறே யில்லை.

## பஞ்சப்ரஹ்மோபநிஷத்.

𑌯𑌥𑍈𑌕𑍇𑌨 𑌮𑍃𑌤𑍍𑌪𑌿𑌣𑍍𑌡𑍇𑌨 𑌮𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌯𑌾𑌶𑍍𑌚𑌗𑍌𑌤𑌮| 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾
𑌤𑌂𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌂𑌸𑌰𑍍𑌵𑌂𑌮𑍃𑌦𑌭𑌿𑌨𑍍𑌨𑌂𑌹𑌿𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌮𑍍 | 𑌯𑌥𑍈𑌕𑍇𑌨𑌲𑍋𑌹
𑌮𑌣𑌿𑌨𑌾𑌸𑌰𑍍𑌵𑌂𑌲𑍋𑌹𑌮𑌯𑌂𑌯𑌥𑌾 | 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂𑌸𑍍𑌯𑌾𑌦𑌥𑍈𑌕𑍇𑌨𑌨
𑌖𑌾𑌨𑌾𑌂 𑌕𑍃𑌨𑍍𑌤𑌨𑍇𑌨𑌚 | 𑌸𑌰𑍍𑌵𑌂𑌕𑌾𑌰𑍍𑌷𑍍𑌣𑌾𑌯𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌤𑌦𑌭𑌿
𑌨𑍍𑌨𑌂𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 | 𑌕𑌾𑌰𑌣𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌰𑍂𑌪𑍇𑌣𑌕𑌾𑌰𑍍𑌯𑌂𑌕𑌾𑌰𑌣𑌮𑍇𑌵
𑌹𑌿 | 𑌤𑌦𑍍𑌰𑍂𑌪𑍇𑌣𑌸𑌦𑌾𑌸𑌤𑍍𑌯𑌂𑌭𑍇𑌦𑍇𑌨𑍋𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌮𑍃𑌷𑌾𑌖𑌲𑍁 |
𑌤𑌚𑍍𑌚𑌕𑌾𑌰𑌣𑌮𑍇𑌕𑌂𑌹𑌿𑌨𑌭𑌿𑌨𑍍𑌨𑌂𑌨𑍋𑌭𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑍍 | 𑌭𑍇𑌦𑌃𑌸𑌰𑍍𑌵
𑌤𑍍𑌰 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌦𑍇𑌰𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌤𑍍 | 𑌅𑌤𑌶𑍍𑌚𑌕𑌾𑌰𑌣𑌂𑌨𑌿𑌤𑍍𑌯
𑌮𑍇𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌯𑌂𑌖𑌲𑍁 | 𑌅𑌤𑍍𑌰 𑌕𑌾𑌰𑌣𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌚𑍈𑌤
𑌨𑍍𑌯𑌮𑍇𑌵𑌹𑌿 ||

ஓ கௌதமா! ஒரே மண்கட்டியினா லுண்டாகிற மண் பாத்திர முதலானவை மண்ணைக் காட்டிலும் அன்னிய மல்ல வென்று எப்படி அறியப்படுகின்றதோ, ஒரே தங்கத்திலிருந் துண்டான ஆபரணங்களெல்லாம் தங்கமயமென் றெப்படி அறியப்படுகின்றதோ, இரும்பிலிருந் துண்டான நகம்வாங்கி முதலிய யாவும் இரும்பைத் தவிர வேறல்ல வென்று எப்படி அறியப்படுகின்றதோ, காரணத்தைக் காட்டிலும் வேறல்லாத காரியமானது காரணமே யல்லவா? அந்தக் (காரண) ரூபமாய் எப்போதும் இருப்பதுதான் சத்தியம். அதற்குப் பேதமாய்ச் சொல்வது பொய்யே யாகிறது. அக்காரணமொன்றே காரியம், வேறல்ல, உபயாத்தமகமு மல்ல. எவ் விடத்திலும் பேதமென்பது பொய்யே. எனெனின் அதற்கு இன்ன தருமமென்று விதிக்கப்படாததனாலேதான். அக்காரணமானது நித்தியமாயும், ஒன்றாயும், இரண்டாவ தற்றதாயு மிருக்கிறது. அந்தக் காரணமானது இரண்டாவதில்லாத சுத்த சைதன்னியமே யல்லவா?

சூதசங்கிதை சாந்தோக்கிய உபநிஷத்.

*சகத்துக் கொரு காரணமாகித் தயங்குமந்தப் பிரமம்.* (எ)

ஷை தைத்திரீயோபநிஷத்.

*மாயையொடுவிரவுமந்தச்சிவத்தினின் றும்பழுதைமாசுணமேபோல*
*வாயவபஞ்சிகிருதசூக்குமவாகாயமுமற்றதினிருந்து*
*வாயுவுமற்றதினழலுமதிற்சலமுமதினிருந்தவயங்குமண்ணும்*
*ப்ரயவபஞ்சிகிருதமாகவேயம்மாவுற்பத்தியான.* (கூ)

துவித சைவர்கள் கூறுகின்ற மாயையை அத்வைதிகள் பிரமமாகக் கொண்டால், அந்தத் துவித சைவர்கள் மாயைக்குக் கூறும் அசித்து, மலம் முதலிய இலக்கணத்தை யன்றோ பிரமத்திற்குக் கூற வேண்டும். அவ்வா றின்றி; சத்து, சித்து, ஆநந்தம், அவிகாரம், துரியம், அசலம், நிர்க்குணம் முதலிய இலக்கணங்களைக் கூறுவதால், துவிதிகள் கொண்ட மாயையை அத்வைதிகள் பிரமமாகக் கொண்டார்க ளென்பது தப்பறையிலும் தப்பறை யென்று கூறி மறுக்க. கிழங்கிற் றோன்றிய தாமரையைச் சேற்றிற் றோன்றியதென் றுரைப்பதுபோல, மாயையிற் றோன்றிய உலகைப் பிரமத்திற் றோன்றியதென் றுரைக்கின்றாமெனின், இதற்கு மறுப்பு "பதி பசு பாச வாதம்" 52 ம் பக்கத்தில் "நிலம் வித்து அங்குர உபமானம்" என்னும் மகுடத்தின்கீழ்க் காண்க.

இன்னும் தாங்கள் கூறும் மாயை ஸ்தானத்தில் அத்வைதிகள் பிரமத்தை வைப்பதால். அத்வைதிகள்தான் மாயாவாதிகளென்று கூறுகின்றவர்கள்: சூனியவாதிகள் உலகத்திற்கு முதற்காரணம் சூனியம் என்றதால் அந்தச் சூனிய ஸ்தானத்தில் மாயையை வைத்துப் பேசுவதுபற்றி இவர்கள் சூனியவாதிக ளென்பதற்கு ஆசங்கை யென்னை? மேலும், காலவாதி கொண்ட கால ஸ்தானத்திலும் பூத வாதி கொண்ட பூத ஸ்தானத்திலும் மாயையை வைப்பதால் இவர்களே காலவாதியும் பூதவாதியு மாகலாமே.

இங்காறும் பேசிவந்த விஷயத்தால் அத்வைதிகள் பிரமவாதிக ளென்பதும், இவர்கள் மாயாவாதிக ளென்பதும் பசுமரத்தாணியாய் நின்றன வென்க.

## தொடங்கும்போதே திட்டென்பது.

ஷை ஆபாச வினாவிடை நூலின் ஆரம்பத்திலேயே அதாவது கடவுள் வணக்கத்திலேயே துவித சைவர்கள் திட்டுவதிலும் அபராத மிறுப்பதிலும் முதற்றரமான பரீட்சை கொடுத்தவர்கள் என்று அத்வைதிக ளெழுதி யிருப்பதைத் தானாக நர்நியாயமாக நிலைப்படுத்துமாறு

"அத்துவிதமென்றழைத் துமாயாவாதர் தம்மையகந்தைபேசி
வத்துநிலையறியா துவம்பளக்குமூடர்தலை வளைக்க."

என்று கூறி அத்வைதிகளை மூடர் என்றார். "இறங்கும்போதே நீச்சு" என்றவாறு இவரது பாவகர்மம்: நல்வழிப்படுமாறு செய்யும் கடவுள் வணக்கத்திலேயே திட்டு மாறு பிரேரேபிக்கின்றது. என்செய்யா தொழியும் தீயூழ்!! இத்திட்டினால் அடி யுண்டவன் அலறுவது போன்று விஷய பலமில்லாதவர்கள் திட்டுவதையே விஷயமாகக் கொள்வார்க ளென்பது நன்கு புலப்படுகின்றது.

## அத்துவிதம்.

ப்ரம்ம வித்தியா பத்திராதிபர் "அத்துவிதம்" என்னுஞ் சொல்லின் முதலிலுள்ள அகரம் அல்லது நகரம் அன்மைப் பொருளிலும் மறுதலைப் பொருளிலும் வாராதென்றும், இன்மை பொருளிற்றான் வருமென்றும் வடமொழி யிலக்கணங்கொண்டு வகுத்துரைத்த "அத்துவிதவிசாரம்" என்னும் விஷயத்திற்குப் பதில் கூற இடமின்றி (அக்கினி ஸ்தம்பத்தைக் கண்டஞ்சா தகன் றோடிய ஈக்கள்போல்) அசன் றோடிய துவித ஈக்கள் யாதோர் நியாயமு மின்றி அத்துவித மென்றழைத்து................... தலை வளைக்க என வரைதல் தோல்வியினுந் தோல்வி, மிகுந்தோல்வியாமென்க.

## தம்மினத்தார்குற்றந்தெரியாது தமோறிஞரென்பது.

அத்துவிதி துவிதியை நோக்கி: அத்வைத தூஷண நிக்ரக நூலில் "சைவமதத்தை எங் குமில்லாமற் செய்திருப்பதுதான்." என்றுரைத்ததாக வொரு தொட ரெழுதினர். அத்வைத தூஷண நிக்ரகநூல்: வேத விரோத மாயும் சித்தாந்த சைவமென்று பொருந்தாப் பெயரைப் பூண்டதாயுமுள்ள அவைதிக சைவத்தை மறுத்ததேயன்றி, வைதிக சம்மதமாயுள்ளசைவத்தை மறுக்கவில்லை. அது வேத சம்மதமான சைவத்தை ஸ்தாபித்து, வேதபாகிய அசைவத்தை மறுத்ததென் றுரைக்காது, பொதுவாய்ச் சைவ மதத்தை எங்குமில்லாமற் செய்ததுதான் என்று பேசி, உள்ளதை யில்லதாகப் புரட் டல் நியாயமாகா தென்க.

சுத்த சைவம், வீர சைவம், காபால சைவம், வைதிக சைவம், வாம சைவம்,காளாமுகசைவம், மாவிரதசைவம், பாசுபதசைவம் என்ற தொடக் கத்தனவாயுள்ள சைவங்களில் இன்னசைவமென்று கூறுது "எல்லு செட்டி லக்க ஏகலக்க" என்றவாறு உமாபதி சிவாசாரியார் "சைவ வாதி சங்கற் பம்" "சைவவாதி சங்கற்ப நிராகரணம்" என்று யோசனையின்றிக் கூறியது போல, இப்பூர்வ பட்சியாரும் 'சைவமதத்தை' எனப் பொதுப்படப் புகலு தல் பொருந்தாது! பொருந்தாது!! ஏன் பொருந்தா தென்னின், அடை யில்லாத சைவ மதமே இவர் சைவமாயின், அடையில்லாத சைவ மதத்தை மறுத்த உமாபதி சிவாசாரியார் இவர் மதத்திற்கு விரோதியாக வேண்டும். விரோதியல்லரெனின் அவ்வுமாபதி சிவாசாரியார் சைவவாதி சங்கற்பத்தை மறுத்தது தவருகின்றது. தவறன்றெனின், அப்போது அவர் இப்பூர்வபட்சி யார்க்கு விரோதியேயாம். விரோதியாகிய உமாபதிசிவாசாரியரைக் குருவாக வும், சைவத்தை மறுத்த அவரது சங்கற்ப நிராகரண நூலைப் பிரமாணமாக வுங் கொண்டுள்ள இப்பூர்வபட்சியார் அத்வைதிகள் சைவமதத்தை யிகழ் ந்தார்களென்று கூறல் தகுதியன்றென்க.

இதுகாறும் எழுதி வந்த விஷயத்தினுல் சைவத்தை யிகழ்ந்தவர்கள் உமாபதி சிவாசாரியாரும், அவரைக் குருவாய்க்கொண்டுள்ள இப்பூர்வ பட்சி யாரும் என்றும், சைவத்தை யிகழாதவர்கள் அத்வைதிகளென்றும் பெற ப்பட்டன வென்க. உமாபதி சிவாசாரியார் மறுத்துக் கூறிய கூ சைவ வாதி சங்கற்பத்தை வாசித்துப் பார்க்கின் அது அத்துவித பக்ஷ மென்ப தினிது விளங்கும். இதனுல் உமாபதி சிவனுர் கூற்றின்படி சைவமென்பது அத்துவிதத்தில் அடங்கியதா மென்க.

## பெயரைக்காட்டாதெழுதுவது தப்பன்றென்பது.

"வழியே போகின்ற அநாமதேயர்களுக்கெல்லாம் அவர் (சோம. நாய கர்) விடை யிறுத்தல் ஆவசியகமோ?" "அநாமதேயரது ஆபாசம் எழுதிய யாமே அதைச் சுலபமாய்ப் பரிகரிக்க முடியுங் கண்டீர்" என்ருர் அத்வைதி களோடு சுருதி யுக்தி யனுபவமாய்ப் பேசி வாதிட முடியாதென்று கருதி முடிவுரை கூறிப் பதுங்கிப் பின்னர் "அத்வைததூஷணபரிகாரம்" என்னும் நூலொன்றினைப் பற்றி மாத்திரம் பேச எழுந்து, அதிலும் இரண் டொரு

விஷயத்தினைச் சுட்டித் தினகரனைப் பின்பற்றி வெளிவந்த "அவைதிக சைவ சண்டமாருத" மென்னும் நூலால் ம-ா-ா-ஸ்ரீ சோமசுந்தர நாயகர் முறிபட்டுப்போனமை பற்றியாக்கும் அத்வைதிகளது வினாக்களுக்கு விடையிறுக்குந் திறமில்லாரெனக் காட்டற்கே பூர்வபட்சியார் அவர் விடையிறுத்தல் ஆவசியகமோ? என்று "கூடவிருந்து பார், கூட்டுப் பயிரிட்டுப் பார்" என்னும் பழமொழிக் கிணங்கக் கூறினார்போலும். "பழகினவர்க் கன்றோ பண்டவாளந் தெரியும்?" என்பதற்கியையப் பல்கால் பழகியுள்ள இவர்க் கன்றி வேறு யார்க்கு அவரது மாட்டாமை நன்கு புலப்படும்? அவர் தமது மதத்தை ஸ்தாபிக்கும் திறமுடையராயிருந்தால் இவர் விடைகூறல் ஆவசியகமோ என்று கூறுவரா? கூறார்! கூறார் !!

இது நிற்க; நீலலோசனி யென்னும் பத்திரிகைக்கு அதிபராயிருக்கும் பூர்வபட்சியார் வேறுபேரிட்டெழுதிய ஒருவரை அநாமதேயரென்று நாட்டுப் புறத்தாட்களைப் போலும், சோம. நாயகரைப்போலும் 'வழியே போகின்ற அநாமதேயர்களுக் கெல்லாம் அவர் விடை யிறுத்தல் ஆவசியகமோ' என்று கூறுதல் எவ்வளவுநாகரிகமின்மையைக் காட்டுகின்றது பாருங்கள்!

இவரது பத்திரிகைக்குத் தினகரனென்றும், முருகவேள் என்றும், அரக்கோணவாசியென்றும், அரதத்தனென்றும் வேறுபேரிட்டெழுதுகின்றவர்களுக்கெல்லாம் இவர் இடங்கொடுப்பது என்னையோ? அவர்க ளெல்லாம் இவர் தோற்றத்திற்கு நாமதேயர்க ளாகத் தோற்றுகின்றார்கள் போலும். 'அநாமதேயர்களுக் கெல்லாம் அவர் விடை யிறுத்தல் ஆவசியகமோ' என்ற பூர்வபட்சியார், இவர் கூற்றின்படி அநாமதேயரான பிரமவாதிக்கு விடையிறுக்க வந்ததேனோ? அநாமதேயர்களுக் கெல்லாம் விடையிறுத்தல் சோ. நாயகர்க்கு ஆவசியகமன்றாயின் இந்து, ஓர் நண்பன், ஆரியன், என்ற தொடக்கத்தவாயபெயரிட்டெழுதிய அத்வைதிகளுக்கு அவர் சிலநாள் பதிலெழுதி வந்தது என்? அப்போது சோ. நாயகர்க்கு அநாமதேயர்களுக் கெல்லாம் விடையிறுத்தல் ஆவசியக மன்று என்கிற ஞானம் உண்டாகவில்லைபோலும்! "சப்பாணிக்குச் சறுக்கினது சாக்கு" என்றபடி ஓடி யொளிகின்றவர்க்கு அத்வைதிகள் பேர் மாற்றி யெழுதுவதும் ஓர் சாக்கா யிருக்கின்றது போலும்! இவ்விஷயத்தை யின்னும் செவ்வையாக வுணர வேண்டுமாயின், 1895-ம் வருஷம் வெளியான "மாயாவாத சைவசண்டமாருதம்" என்னும் நூலில் "பெயரைக்காட்டாதெழுதுவது குற்றமன்றென்பது" என்னுந் தலைச்சாத்தின் கீழும், "அவைதிக சைவசண்டமாருதம்" என்னும் நூலின் 33-ம் பக்கத்தின் கீழுமுள்ள விஷயங்களைக் கண்டு உணர்க.

## வாதத்திற்கு வராது பயந்தொளிந்தவர் இவரே என்பது.

"உங்கள் நிக்ரக நூலாரை எம்மோடு விவகரிக்கச் செய்கின்றீரா? உமது அநாமதேயரை எம்மிடம் அழைத்துவருகின்றீரா?' என்றார். குதிரை குருடானாலும் கொள்ளுத்தின்பதிற் குறை வில்லை" என்ற வாறு பிரம வாதி யென்பாரை, எம்மோடு விவகரிக்கச் செய்கின்றீரா? என்றுகூறி வாதுக்கழைத்த இவர்: அப்பிரமவாதியார் உடன்பட்டு, இப்பூர்வபட்சியாரிருக்கும் நாகபட்டணத்திற் பிரசுரமாகும் ஸஜ்ஜன பத்திரிகையில்,

## "அத்வைததூஷணவிவகாரம்.

"ஸஜ்ஜனபத்திரிகா" அதிபரவர்கட்கு,

ஐய,

சொற்ப மாதங்களுக்கு முந்தி நாம் "அத்வைத தூஷண நிக்ரகம்" என்னு மொரு சிறு நூலெழுதி வெளியிட்டோம். இந் நூலுக்கு மறுப்புப்போன்ற "அத்வைத தூஷண நிக்ரகாபாச வினவிடை" என்னும் பிறிதொரு சிறுநூல் நாகை நீலலோசனிப்பத்திராதிபரும் ஷெ யூர் ஐஸ்கூல் தமிழப் பண்டிதரும், ஷெ யூர் சைவ சித்தாந்தசபையடியவர்களி லொருவருமாகிய ஜி. சதாசிவம் பிள்ளை யவர்களாலியற்றப்பட்டதாய் வெளிவந்திருக்கிறது. இவ்வினவிடையில், 4-வது வினவிற்கு எழுதி யுள்ள விடையில், "உங்கள் நிக்ரக நூலாரை எம்மோடு விவகரிக்கச் செய்கின்றீரா" என்று குறிப்பித்திருப்பதாலும், நாமே அந்நிக்ரக நூலாராகையாலும், நாம் ஷெ பிள்ளையவர்களோடு விவகரிக்கச் சர்வசித்தமாயிருக்கின்றோமாகையாலும், தாங்கள் தயை கூர்ந்து தமது கருத்தைத் தங்கள் பத்திரிகை வாயிலாக ஷெ பிள்ளை யவர்களுக்குத் தெரிவித்துப் பூர்த்தி பண்ணி வைப்பீர்களென்ற முழு நம்பிக்கையோடு இக்கடிதம் தங்களுக்கு எழுதினோம். ஷெ பண்டிதரவர்களுக்கும் நமக்கும் நடக்கும் விவகாரத்தின் நியாயவன்மை மென்மைகளைத் தீர்மானிக்கத் தக்க கல்வி யறிவு நடுநிலைமைகளை யுடைய சில விவேகிகளை நாம் மத்தியஸ்தர்களாகத் தெரிந்துகொண்டிருக்கின்றோம். அங்ஙனமே ஷெ பண்டிதரவர்களும் அவர் மனதிற் கியைந்த சிலரைத் தெரிந்துகொண்டு இடத்தையுங் காலத்தையுந் தங்களுக்குக் குறிப்பித்தால், அதனைத் தங்கள் வாயிலாக நாம் தெரிந்துகொண்டு அக்காலத்தில் ஒரு இடத்தில் அவர்களைச் சந்தித்து நாங்க ளிருவரும் வேண்டிக்கொண்ட மத்தியஸ்தர்கள் முன்னிலையில் சம்வாதிக்கத் தடைப்படோம். இக்கடிதத்திற்கு வரும் பதிலைத் தங்கள் பத்திரிகை வாயிலாகவே எமக்குத் தெரிவிக்கப் பிரார்த்திக்கின்றோம். இதுவிஷயத்தில் எமக்குள்ளகருத்தையும் அவாவையும் பூர்த்தி செய்து வைப்பீர்களானால் தங்களுக்கு என்றும் நன்றி செலுத்துவோம்.

1896ஸ்ரீ செப்டம்பர்மீ 5௳ } இங்ஙனம்: அத்வைதூஷண நிக்ரகநூலார்."

என்றெழுதியதற்கும், அப்பத்திரிகையின் அதிபர் அவர் வாதுக் கழைத்ததைப்பற்றி

"[☞ நமது நிருபரின் வேண்டுகோள் மிகவும் யுத்தமான தென்றே நமக்குத் தோன்றுகின்றது. சாஸ்திரவிஷயமாய் வாதம்புரியும் பண்டிதர்கள் புத்தகங்களின் மூலமாயும் பத்திரிகைகளின் மூலமாயும் கால வரையின்றி

வாதித்துக்கொண்டே யிருத்தலை விட, தக்க மத்தியஸ்தர்களின் முன்னிலை யில் நின்று முகாமுகமாய்த் தர்க்கித்துத் தெளிவது மிக வுசிதம். "வினவிடை" நூலார் அங்ஙனம் செய்யச்சித்தமாயிருக்கிறார் என்பது அவர் நூலில் 4-வது வினவிற்கு எழுதியுள்ள விடையினால் நன்கு விளங்குகின்றது. அவரின் பிரதிவாதியாகிய நம் நிருபரும் அவ்வண்ணமே சித்தமுள்ளவரா யிருக்கின்றனர். ஆகவே, சீக்கிரம் தேதியும் காலமும் குறிப்பிக்கத் தடை யிராதென்று நினைக்கிறோம். ஸம்வாத நேரம் வருந்தனையும் நம் நிருபர் தம் பேரை வெளியிட இஷ்டப்படாததால், இதவிஷயமாய் அவருக்குத்தெரிவிக்க ப்படவேண்டிய யாவும் நமது விலாஸத்துக்கு அனுப்பப்படின் அவற்றை நாம் அவருக்கு அறிவிக்கச் சித்தமாயிருக்கின்றோம். பத் ]"

இவ்வாறு பேசி யிருப்பதற்கும் பதில் மாற்றம் பேசாது போயது என்னே! இது பெண்களுக்குமுன் பலவாறு தனது வீரத்தைப்பற்றிப் பேசி, கௌரவரைக் கருவறுத்துவிடுவேனென் றுறுதி மொழி கூறி, போருக்குப் போய், அக்கௌரவரைக்கண்டு, கண்சுழன்று நாவுலர்ந்து மனங்கலங்கி இரதத்தை விட்டுக் குதித்தோடின உத்தரகுமாரன் சரிதத்திற் கினமாயன்றோ விருக்கின்றது? இதனையிவர் உணராது போயது விந்தையினும் விந்தையே!

இதுபற்றியன்றோ

> "சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாம்
> சொல்லியவண்ணஞ் செயல்"

என நாயனார் திருவாய் மலர்ந்தருளினர்?

## முன்னுக்குப்பின் முரணிப்பேசுதலென்பது.

அத்வைதியார்: "நிக்ரக நூலார் தம்மைப் பிரமவாதி யென்று கூறிக்கொள்ளவும், ஈண்டு நீர் பிரமவாதி யென்று வெளிவந்தது யாங்ஙனம்?" என்று கூறியதாக வினவெழுதி அதற்கு விடை: "பிரமம் ஒன்று என்பதும் இரண்டாவது பொருளில்லை யென்பதும் உமக்கும் அவருக்கும் சம்மதம். இரண்டாவது பொருளில்லாதபோது பிரமத்தை வாதிப்பவர் யாவர்? வாதிப்பவரே இல்லாதபோது அவ்வாதிக்கு முன்னிலைப் புருடரொருவ ரிருப்பது யாங்ஙனம்" என்றும், "பிரமம் ஒன்றுளது. அதனை யாசிரயித்துவாழும் சீவர்கள் பலர். அவருள் யாமொரு சீவன். எம்மைப் பந்தித்துள்ள பாசநிவிர்த்தியின் பொருட்டு அந்தப்பாச மாகாமலும், எம்மைப்போ லொரு பசுவாகாமலும் விளங்கும் பதியாகிய பிரமத்தி னுண்மையை யங்கீகரித்து யாம் வாதித்துப் பிழைத்தலால், பிரமவாதி யென்பது எமக்குத் தக்க தாயிற்று" என்றும் பூர்வபட்சியார் வரைந்தார்.

இது விஷயமாக 'மாயாவாத சைவ சண்ட மாருதம்' என்னும் நூலில் "பிரம ருத்திராதியர் பொய்யன்று, அநிர்வனீய மென்பது" "பிரமத்திற்குச் சீவன் போலியாய் வேறென்பது" 'பிரமம் சத்தும், சீவன் சத்துப்போலியுமாமென்பது"என்று மகுடங்கொடுத் தெழுதிய விஷயங்களையும், வேதாந்த சங்கைநிவாரணம் 15, 16, 17 வது பக்கங்களிலுள்ள விஷயங்களையும் அனுவதித்துப்பேசித் தஞ் சித்தாந்தத்தைக் கூறாது முரட்டுத்தனமாய் முன்னர் மறுக்கப்பட்டதையே மீண்டும் எழுதி வெற்றிகொள்ளக் கருதுதல், கைம்மையும் முதுமையும் தனிமையுமுள்ள ஓர் பார்ப்பினி வீட்டில் இரவில் பூசனிக்காயைத் திருடச் சென்ற அவ்வீட்டுப் பண்ணையாள், அரவமறிந்து

வெளிவந்த அப்பார்ப்பினிக்குப் பயங் காட்டுமாறு, அப்பூசனிப் புதரினின் றும் "இதுதானு பூலோகம்?" என்றுரைத்துக் கிளம்பிய செய்கைக்கு இன மாய் நின்றதென்க.

'பிரமம் ஒன்று என்பதும், இரண்டாவது பொருளில்லை யென்பதும் உமக்கும் அவர்க்கும் சம்மதம்' என்ருர். (அத்வைதிகள்: பிரமம் ஒன்றே சத்தா யுள்ளதென்றும் சீவர்கள் சத்துப் போலியா யிருக்கிருர்கள் என்றும் சொல்லுபவர்கள்.) இவ்வாறு கூறியவர், உடனே அதை மறந்து, அதையே ஸ்தாபிக்குமாறு, "ஏகஏவருத்ரோ" என்று தொடக்கமாயுள்ள சுருதிவாக்கி யத்தை யெழுதி, அதன் அர்த்தத்தில் "பிரமம் ஒன்றே யுள்ளது இரண்டா வது இல்லை" என்ருர். பிரமம் ஒன்றென்பதும், இரண்டாவது பொருளி ல்லையென்பதும் உமக்கும் அவர்க்கும் சம்மதம் என்றெழுதி, அது விஷயத் தில் தமது சம்மத மின்மையைக் காட்டினவர்: பின்னர் அதனையே ஸ்தாபி த்து, அத்துவிதிகளின் பக்ஷமாகச் சுருதி வாக்கியத்தை யெழுதிக் காட் டல்: முன்பின் மாறின்றித் தொடர்பறிந்தெழுதத் தெரியாதவ ரென்பதைப் புலப்படுத்துகின்றது. பிரமம் ஒன்றே யுள்ளது இரண்டாவது இல்லை என்று ஒப்பினவர்: அதனை யாசிரயித்துவாழும் சீவர்கள் பலர் என்று முன்ன ரெழு தியது மாறுபாடன்ருே? இரண்டாவது இல்லாத சத்தாகிய பிரமத்தை (இவர் சித்தாந்தப்படி பிரமத்தைப்போலச் சத்தாயுள்ள) சீவர்கள் ஆசிரயிப்பது எவ்வாறு? பரிபூரணமாயும் இரண்டாவது இல்லாததாயுமுள்ள பிரமத்தைச் (சத்துப்போலியாகவன்றி) சீவர்கள் சத்தா யிருந்து ஆசிரயிக்கும்போது, பிர மம் பரிபூரணமான ஒன்றென்பது பொய்த்துப்போக வில்லையா? பொய்த்து ப்போகவே, இவர்கொண்ட பிரமம் அபரிபூரணப் பிரமம் என்றேற்படுகின் றது. பிரமம் பரிபூரணர்தா னென்னின், ஆசிரயிக்கும் சீவர்களும், ஆசரிக் கப்படும் பொருளான பிரமமும் சத்தென்று இவர் பகுதியினர் கூறுகின்ற மையின், இரண்டு சத்துப் பொருள்கள் ஓரிடத்தி லிராவென்ற நியாயப் பிர மாணப்படி பிரம சீவர்கள் ஓரிடத்தி லிருக்க முடியாவென்க. பிரமத்திற்குப் பூரணமுஞ் சொல்லி, சீவர்களும் அதை யாசிரயித்திருக்கிருர்க ளென்றுங் கூறவேண்டுமாயின், பிரமத்தைச் சத்தாகவும், சீவர்களைப் போலியாகவும் கூறவேண்டும்.

இனிச் சீவர்கள் பிரமத்தை யாசிரயித்து வாழ்தல் பொருளாகவா, குணமாகவா, தொழிலாகவா என்று விசாரிப்பாம். பிரமம் பரிபூரணமான வொன்றென்பது பூர்வ பட்சியார்க்கும் உடன்பாடானமையின். பிரம பரி பூரணத்தில் சீவர்கள் பொருளாக விருத்தல் முடியாது. பொருளாக விரு க்க முடியாதாகவே, தொழிலாகவாவது குணமாகவாவது இருக்கவேண்டும். தொழிலும் குணமும் தனித்திராவென்பது யாவருக்கும் உடன்பாடாகலின், அவை ஒருபொருளையே பற்றி யிருக்கவேண்டுமென்பது நியாயமாம். ஆக வே, அது பிரமமே என்று ஏற்பட்டது ஏற்படவே, பூர்வ பட்சிகள் சீவர் களைப் பிரமமென் றுரைக்கின்ருரகளென்பது பசுமரத்தாணியாய் நிலையா யிற்று. ஆகவே, சீவர்கள் படும் பிறப்பிறப்புத் துன்பங்களைப் பிரமமே படு கின்றதென்றும், ஓயாது இருவினையின் பயனை அதுவே அனுபவிக்கின்ற தென்றும் பெறப்பட்டன. அத்வைதிகள் கூறுகின்றபடி சீவர்களைக் கற்பித மாகக் கொள்ளின் சீவர்கள் படுகின்ற பிறவி முதலிய துன்பங்கள் பிரமத் தைச் சாராவென்ருகின்றது. ஜீவர்கள் படுந் துன்பம் பிரமத்தைச் சாரா தென்று சொல்வாரேல் அப்போது "சுற்றிச்சுற்றி வந்து சுங்கச் சாவடியில் நின்ருன்" என்ற முது மொழிக் கிணங்க அத்வைதிகளுடைய விவர்த்த திருட்டாந்தத்திலேயே வந்து சேர்கின்றவராகின்ருர்.

இதுகாறுங் கூறிவந்த விஷயங்களினால் பூர்வபட்சியார், முன்னுக்குப் பின் முரணிப் பேசினா ரென்றும், அத்வைதிகளுக்குரிய பிரமாணத்தைத் தமக் குரியதாய்க் காட்டி அதனாலே தாம் மறுக்கப்பட்டா ரென்றும், அத்வைதிகள் கூறுகிறபடி கூறாவிடில் கண்டப் பிரம வாதியாய்ப் போவதோடு சுருதி விரோதியா யாகின்றாரென்றும், பிரம பரிபூரணத்தில் கற்பிதமாயிருக்கிற ஜீவர்கள் வேதாந்த சங்கை நிவாரணம் 15, 16, 17 வது பக்கங்களில் பேசித் தீர்மானித்த வண்ணம்) வாதிக்க முடியுமென்றும், அச்சீவர்கள் பந்தத்தினின்று நீங்கப் பிரம விசாரணை செய்யக் கூடுமென்றும் பெறப்பட்டமையின், இப் பூர்வபட்சியார் வீணே அத்வைதிகளோடு வாதிட வந்தா ரென்பது சிறார்க்கும் நன்கு விளங்கியதென்க.

## விக்கிரகாராதனத்தைப்பற்றி வீணாய்ப்பேசினாரென்பது.

அத்வைத நிக்ரக நூலார்: முத்தி யடைவதற்குரிய சாதனம் இரண்டென்றும், அதில் ஒன்று பரம்பரா சாதன மென்றும், மற்றொன்று நேர் சாதன மென்றும்; பரம்பரா சாதனமாயுள்ளது சரியை, கிரியை, யோகம் என்றும்; நேர் சாதனமா யுள்ளது நித்தியாநித்திய வஸ்து விவேகம், இகபர போக விராகம், சமாதி சட்க சம்பத்தி, முமூட்சுத்துவங்களான சாதன சதுஷ்டய மென்றும், சரியை யாதிகளில் நின்றோர்க்குப் பிறவி யுண்டென்றும், ஷை சாதன சதுஷ்டயத்தை யடைந்து ஆன்மானான்ம விவேகத்தோடு சற்குருவை யடைந்து சிரவணஞ் செய்து, அதனைப் பின்னர் மனன நிதித்தியாசனங்கள் செய்து அதனால் உண்மை ஞானம் வாய்க்கப் பெற்றவர்களுக்கே வீடு கூடுமென்னும் பொருள் விளங்குமாறு கூறி, அதற்கு நூற் பிரமாணமுங் காட்டி இருப்பதோடு அந்தப் பிரமாணங்களுக்கியைய யுத்தி யனுபவமு மெழுதி விக்கிரகாராதனையை மறந்துங் குறை கூறாது அதனைச் சாதனமாய்க் கூறி அதற்குப் பிரமாணமுங் காட்டியிருக்க, பூர்வபட்சியார்: விக்ரகாராதனையைப் பற்றிப் பிரமவாதியார் குறை கூறினாரென்று கூறல் தகுதியாமோ? அதுவேயுமன்றி, அத்வைதிகள் விக்கிரகாராதனையை நிந்திக்கின்றார்களென்று கூறி, அச்சிட்டு வெளிப்பட்டுள்ள புத்தகத்தின் விஷயத்தையே புரட்டிப் பேசல் குணமுள்ளார்க் கழகாமோ? இவர் அப்படிப் பேசுகின்றமையும் அதன் மறுப்பும் வருமாறு:—

அத்வைதியார்: "மைத்திரி யோபநிஷத்து பாஷாணம் - உலோகம் - மணி - மண் இந்த ரூபமான விக்ரகங்களிலே செய்யும் பூசையானது, புனர் சன்மத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது. எதியானவன் இதயார்ச்சனையே செய்யவேண்டியது" என்றும், "சரியையாதிகளைத் தூஷித்த வேதக் கருத்தை உமக்குத் தெரிவித்ததேயாம்" என்றும் கூறினதாக வரைந்து, பின்னர் விடையில் "நீர்காட்டிய வாக்கியம் அவ்வளவு உசிதமானதா?" 'பிள்ளைகளே நீங்கள் விக்ரகங்களுக்கு விலகி யுங்களைக் காத்துக் கொள்ளுங்கள் ........... என்று பெறப்பட்ட விவிலிய வசனங்களோடினப்பட்டது உமது பிரமாணம்" என்றார். மைத்திரேயோபநிஷத்து: விக்கிரக பூசையான பாகிய பூசையைக் காட்டிலும் அந்தர்ப் பூசையான இதயார்ச்சனை யுயர்வென்றும், பாகிய பூசை புனர் ஜன்மத்தைக் கொடுக்குமென்றும், அந்தர்ப்பூசை முத்தியைத் தருமென்றும், பாகிய பூசையிலுள்ளவொருவன் அந்தர்ப் பூசைசெய்ய முயல வேண்டுமென்றும் கூறியதேயன்றி விக்கிரகாராதனை செய்யவே வேண்டா மென்று கூற வில்லையே! "புண்

ணியஞ் செய்வதும் பிறப்பிற் கேது வாதலின், பிறப் பொழியு மாறு பிரம ஞானத்தை யடைய விரும்பவேண்டும்'' என்று ஒருநூல் கூறினால் அந்நூல் "புண்ணியமாய நற்கருமங்களைச் செய்ய வேண்டாம்" என்று புகல்வதாய் கூறுவது நன்னெறியி லொழுகும் நல்லிணக்கமுடையார்க்குத் தகுதியாமா?

"சோமயாகம் சுவர்க்கத்தைத் தரும் ஞான யாகம் முத்தியைத் தரும்" என்றால் சோமயாகஞ் செய்யப்படாதென்பது கருத்தாமோ? அற்றாக: மைத்திரேயோபநிஷத்து வாக்கியத்தைப் 'பிள்ளைகளே! நீங்கள் விக்ரகங்களுக்கு விலகி யுங்களைக் காத்துக்கொள்ளுங்க ளென்றும், விக்கிரக ஆராதனையை யொருபோதுஞ் செய்ய வேண்டா மென்றும், செய்தால் நித்திய நரகமென்றுங் கூறும் விவிலிய வசனத்தோடு ஒப்பிட் டிகழுதல் வைதிகரது இலக்கணமாமா? இதனால் இவர் வேதபாகிய ரென்பது நன்கு வெளியாய தென்க. அவ்வுபநிஷத் வாக்கியத்தில் விக்கிரக ஆராதனையைப் பற்றித் தூஷித்ததாக வோரெழுத்தாவது இல்லை யென்று இன்னு மொரு முறை அதை இவ்விடத்திற் காண்பிக்கிறோம். புத்திமான்களே கவனியுங்கள்.

'மோட்ச இச்சையுள்ளவனுக்குப் பாஷாணம். உலோகம், மணி, மண் இந்த ரூபமான விக்ரகங்களிலே செய்யும் பூசையானது புனர் சன்மத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது; ஆதலால் யதியானவன் மறுபடியும் சனனத்தை யடையாம லிருக்கும் பொருட்டு இத யார்ச்சனையே செய்ய வேண்டியது.'

இவ்வாக்கியம் இவர் கூற்றின்படி விவிலிய வாக்கியத்தோடினமாயிருந்தால், விக்கிர பூசை நரகத்திற் கேது என்றன்றோ கூறவேண்டும்? அவ்வாறின்றிப் 'புனர் சன்மத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது' என்று கூறுகின்றமையின், இவர்கூற்றுப் பொய்யினும் பொய்யாய் மிகுபொய்யாய் முடிந்ததென்க. கிரியையினை யடைவதற்குச் சரியை சாதனமாயும், கிரியையினைப் பார்க்கிலும் சரியை குறைந்ததாயும், கிரியையா லடையும் பயனிலும் சரியையா லடையும் பயன் குறைவாயு மிருந்தும், எப்படிச் சரியை இகழப்படாமல் உயர்வாகவே கொள்ளப்படுகின்றதோ, அப்படியே அந்தர்ப் பூசைக்குப் பாகிய பூசை சாதனமாயும், அந்தர்ப் பூசையிலும் பாகிய பூசை குறைந்ததாயும், அந்தர்ப் பூசையால் அடையும் பயனிலும் பாகிய பூசையால் அடையும் பயன் குறைந்ததாயு மிருக்கின்றனவென்பதைப் பூர்வபட்சியார் இறையும் அறியாது பெரிதும் மயங்கிப் போனார் பாவம்! பாவம்!!

மைத்திரேயோபநிஷத்து: விக்கிரக ஆராதனையை யிகழ்ந்தது என்கிற குருட்டபிப்பிராயத்தி லிருக்கும் இப்பூர்வபட்சி:

சிவஞானசித்தி அ-ம் சூத்திரம் கக-ம் செய்யுளில்

(1) "சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்"

என்றும்,

ஷை ஷை 24-ம் செய்யுளில்

(2) "ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன் றாளே"

என்றும்,

ஷை ஷை 27 ம் செய்யுளில்

(3) "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண நல்ல வாகமஞ் சொல்ல"

என்றும்,

ஷை 9 ம் சூத்திரம் 10 வது செய்யுளில்

(4) ''சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனை ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க வந்திடு மவ்வொளிபோல மருவி யரனுளத்தே வர வர வந்திடுவன் பின்மலமானதறுமே''

என்றும் உள்ளவைகளில் முறையே (1) ஞானத்தால் வீடுண்டாமெ ன்றதால் ஞானமல்லாத சரியை முதலியவற்றால் பந்தமுண்டாமென்றும், (2) ஞான நிஷ்டையை யடைந்தவர் நாதன் றாளை யடைவார் என்றதால் ஞானநிஷ்டை யாகாத சரியை முதலியவற்றால் பிறப் புண்டாகுமென்றும், (3) ஞானத்தால் வீடென்பதால் மற்றையவற்றால் வீடில்லை யென்றும், (4) அந்தர்ப் பூசை செய்யின் மலமறப் பெறுவாரென்றதால் அந்தர்ப்பூசை யாகாத சரியை முதலியவற்றைச் செய்தவர் மல மறப் பெறாரென்றும் இருப் பனவற்றிற்கு யாது செய்வரோ! இவர் கூற்றின்படி இச்சிவஞானசித்தியும் விக்கிரக பூசையை யிகழ்வதாகக்கொண்டு அதனையும் பைபிலையையும் ஒப் பாக்குவர்போலும்!

ஆரூர ரிங்கிருக்க அவ்வூர்த் திருநாளென்
றூரூர்கடோறு முழலுவீர் - நேரே
உளக்குறிப்பை நாடாத ஊமர்காள் நீவீர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.

என்ற பட்டினத்தடிகள் வாக்கையும் 'பிள்ளைகளே! நீங்கள் விக்கிர கங்களுக்கு விலகியுங்களைக் காத்துக் கொள்ளுங்கள்' என்று இவர் காட்டிய பைபில் வசனத்தோ டொப்பிட்டுச் சுகமே கிறிஸ்தவராய் வாழ்வாராக!

மைத்திரேயோபநிஷத்து: பாகிய பூசையைப் பார்க்கிலும் அந்தர்ப் பூசை சிறந்த தென்று கூறியதுபோல மற்றப் பிரமாணங்களுங் கூறுகின் றன. அது வருமாறு:—

வாயுசங்கிதை சிவபிரான் உமாதேவிக்கருளிய அத்தியாயம்.

புறத்தினிற்பூசைசெய்துபொற்புறத்தெளிந்துநம்மைத்
திறப்படவுணர்ந்துநெஞ்சிற்செம்பொனேடிணையாவெண்ணி
நெறிப்படவியற்றுகின்றசருமங்கள்யாவுநீத்துச்
சிறப்புடையோகஞ்செய்வோர்சிவகதிசேர்குவாரே. (18)

ஷை பஞ்சாக்கரமான்மியம் உரைத்த அத்தியாயம்.

வகைப்படப்புறத்திற்பூசையாசறப்புரிந்தானெஞ்
சகத்தினுட்பூசைசெய்யவேண்டுமோலதனின்வேறு
மிகத்தனிபுயர்ந்ததில்லைவிரித்துநாமெடுத்துக்கொண்டு
பகுத்திடுபூசைவேண்டாபரமஞானிகட்குத்தானே. (49)

சைவபுராணம் ஞானஸம்மிதை

26 ம் அத்தியாயம்.

க்ரியாயஜ்ஞஸஹஸ்ரேப்ய ஸ்வாத்யாயயஜ்ஞோ விஶிஷ்யதே॥ அ॥
ஸ்வாத்யாயயஜ்ஞஸஹஸ்ரேப்யோ ஜபயஜ்ஞோ விஶிஷ்யதே।
ஜபயஜ்ஞஸஹஸ்ரேப்யோ த்யாநயஜ்ஞோ விஶிஷ்யதே॥ கூ॥

ध्यानयज्ञात्परं नास्ति ध्यानं ज्ञानस्य साधनम् ।
परानन्दकरं लिङ्गं विशुद्धं शिवमक्षरम् ।
निष्कलं सर्वगं ज्ञेयं योगिनां हृदि संस्थितम् ॥ கச ॥
लिङ्गं तद्द्विविधं प्रोक्तं बाह्यमाभ्यन्तरं द्विजाः ।
बाह्यः स्थूलो मुनिश्रेष्ठाः सूक्ष्ममाभ्यन्तरं मतम् ॥
कर्मयज्ञरताश्चैव स्थूललिङ्गार्चने रताः ।
असतां भावनार्थाय सूक्ष्मे स्थूलविग्रहम् ॥ கசு ॥
आध्यात्मिकं तु यल्लिङ्गं प्रत्यक्षं यस्य नो भवेत् ।
तस्य लिङ्गे तथा स्थूले कल्पयेच्च न चान्यथा ॥ கஎ ॥
ज्ञानिनां सूक्ष्ममलं भवेत्प्रत्यक्षमव्ययम् ।
यथा स्थूलमयुक्तानां मृत्काष्ठाद्यैः प्रकल्पितम् ॥ கஅ ॥
अर्थो विचारतो नास्ति मृन्मये तत्त्ववादिनः ।
निष्कलं सकलं चित्ते सर्वं शिवमयं जगत् ॥ ககூ ॥
अतिविज्ञानयुक्तस्य किं तस्य प्रतिमादिभिः ।
अतिविज्ञानहीनस्य प्रतिमाकल्पनार्हा ॥ உகூ ॥
[illegible] स्मृतम् ।
[illegible] ॥ உஎ ॥
निर्गुणध्यानयुक्तानां प्रतिमापूजनं स्मृतम् ।
सगुणा निर्गुणध्याने हेतुभूतेति निश्चितम् ॥ உஅ ॥

கர்மயாகங்கள் பல்லாயிரஞ் செய்வதைக் காட்டிலும் தீர்த்தயாத்திரை முதலிய தபோ யாகஞ் சிறந்தது; தபோ யாகங்கள் பல்லாயிரத்திலும் ஜப யாகஞ் சிறந்தது; அந்த ஜப யாகங்கள் பல்லா யிரத்திலும் மானசிக தியான யாகஞ் சிறந்தது; தியான யாகத்திலுஞ் சிறந்தது பிறிதொன்றில்லை......... பரமானந்தத்தை யுண்டுபண்ணுவதும், பரிசுத்தமானதும், நாசமில்லாததும், நிஷ்களமானதும், ஸர்வபரிபூரணமாயுள்ளதுமான சிவலிங்கத்தை இதயத்திலிருப்பதாக அவன் எண்ணுகிறான். இந்த லிங்கம் பாஹ்ய லிங்கம் ஆந்தர லிங்கம்என இருவகைப்படும். அவற்றுள் பாஹ்யம் ஸ்தூலமாகக் கண்ணுக்குப் புலப்படுவது; ஆந்தரம் இருதயத்தில் சூட்சுமமா யுள்ளது. கர்ம யாகத்திலிருக்கும் எல்லோரும் பாஹ்ய லிங்கார்ச்சனை செய்யவேண்டும். ஏனெனில், அஞ்ஞானிகட்கெல்லாம் பக்தியுண்டாகும் நிமித்தமாய் ஸ்தூலத்தில் சூட்சுமத்தைப் பாவனைசெய்து பூஜிக்கவேண்டியது. ஞானிகட்குத் தோஷரகிதமான சூட்சும லிங்கம் பிரத்தியட்சமாக விருக்கும். அஞ்ஞானிகள் யாவரும் மண், மரம் இவற்றுற் செய்யப்பட்ட லிங்கங்களைப் பூஜிக்கவேண்டியது. தத்வார்த்தங்களை யுணர்ந்தவர்கள் இம்மிருத்து லிங்கமுதலியவற்றுற் பயனின்றி, சகலமும் சிவ மயமென்று பாவித்து, அகண்ட பரிபூரணராக

விளங்குகிறவர்கள் சிவபெருமானென்று தெரிந்திருப்பார்கள். ஞானிக்கு விக்கிரக ஆராதனம் வேண்டுவதில்லை. இத்தகைய ஞானம் இல்லாதவனுக்குப் பிரதிமா கல்பனஞ் செய்துகொள்ளவேண்டுவது அவசியம். உயர்விடத்திற் செல்ல வேண்டியவனுக்குச் சோபானம் (படி) இன்றியமையாததுபோல, நிர்க்குணமான சிவலிங்கம் பிராப்தியை யடையவேண்டிய அஞ்ஞானிக்குப் பிரதிமாபூசை சொல்லப்பட்டிருக்கிறது. ஸகுணபூசையால் நிர்க்குணமான சிவப்பிராப்தி யுண்டாகும்.

பகவத்கீதை 18-ம் அத்தியாயம்.

𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌯𑍇𑌨𑍈𑌕𑌂 𑌭𑌾𑌵𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇।
𑌅𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑌂𑌵𑌿𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍁 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌵𑌿𑌦𑍍𑌧𑌿𑌸𑌾𑌤𑍍𑌵𑌿𑌕𑌂॥ ௨௦॥

வெவ்வேறாயிருக்கிற சகல வஸ்துக்களிலேயும் இடைவிடாமல் தொடர்ந்திருக்கிறதாயும் ஒன்றாயும் விகாரமற்றதாயுமிருக்கிற பரமாத்மஸ்வரூபத்தை எதினால் பார்க்கிறானோ, அந்த ஞானத்தைச் சாத்துவிக மென்று அறி. (௨௦)

𑌯𑌤𑍍𑌤𑍁𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌵𑌦𑍇𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌕𑌾𑌰𑍍𑌯𑍇𑌸𑌕𑍍𑌤𑌮𑌹𑍈𑌤𑍁𑌕𑌂।
𑌅𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌵𑌦𑌲𑍍𑌪𑌂𑌚 𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌂॥ ௨௨॥

யாதொரு காரியத்தில் (தேகத்தில் அல்லது பிரதிமாதிகளில்) பரிபூரணம்போல (ஜீவனாவது ஈசுவரனாவது இவ்வளவுதான் என்கிற அபிப்பிராயத்தோடு) கூடினதும், யுக்தியற்றதும், உண்மையான வஸ்துவைத் தெரியாததும், அற்பவிஷயமாயிருக்கிறதுமான ஞானம் எதுவோ, அது தாமசமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (௨௨)

சிவரகசியம் ரிபுகீதை 3-ம் அத்தியாயம்.

ஓதிய இப்பூசனையைச் செய்வதற்கிங் குரித்தான வுணர்வில்லோர் மூர்த்தி யாதி, மீது பரசிவன்றனை நல்லன்பினோடே மேவியிடு வாகியமாமுபசாரத்தால், நீதியதாப் பூசனை செய்திடினு மீச னிகரிலாக் கருணையினலன்னோருக்கும், போதமுடன் மோட்சத்தை மெல்ல மெல்லப் பொருந்தியிடச் செய்திடுவன் புரையற்றோனே. (௪௨)

சூதசங்கிதைமானதயாகம்.

கரைசெய்தியானம் புரிதற் கசக்கிய மாதலினனிட் களத்தைவிட்டுத், தரைபுகழுஞ் சகளதியானம்புரிய வேண்டும். (௫)

இத்தியாதிப். பிரமாணங்களைக் கொண்டு முமுட்சுக்களுக்கு ஆந்தர பூசைகளேநேர்சாதனமென்றும், பாகியபூசையானது பரம்பராசாதனமென்றும், அவ்வாந்தர பூசையாலிச்சன்மத்திலேயே முத்தி சித்திக்குமென்றும், பாகிய பூசையால் காலாந்தரத்தில் சித்திக்கு மென்றும் காட்டியதைத் துவேஷபுத்தியாலோ அல்லது மாயையின் வலியாலோ கிறிஸ்தவர், மகம்மதியர், பிரமசமாஜிகள் முதலிய புறமத வாதிகளைப்போல இப்பூர்வ பக்ஷியாரும் தப்புப் பொருள்கொண்டு வேத நிந்தை செய்பவராயினரென்க.

## வேதாகமவிசாரம்.

"பூசைகளில் வைதிகபூசை சிவாகமபூசை என இருவகை யுண்டு. இவற்றுள், வைதிகத்தின்படி பாஷாணம் உலோகம் மணி மண் முதலிய

ரூபமான விக்கிரகங்களைப் பூசிப்பதன் பயனாகவே புனர் ஜன்மத்தையும், போகப் பிராப்தியையும் நீர் தேடிய உபநிஷத்து ஒப்பியது. அவ்வளவே யன்றிச் சிவாகமத்தின்படி யமைந்த பூசையை நிஷேதிக்க அதற்கு அதிகாரங் கிடையாது'' என்றார்.

வைதிக பூசைவேறு, சிவாகமபூசைவேறு என்று இவர் பிரித்தலினால் சிவாகமபூசை வைதிகத்திற்கு வேறுபட்ட பூசை யென்றாகிறது; அதாவது அவைதிகபூசை யென்றாகின்றது. ஆகவே பிரமகீதை ஐதரேய உபநிடதம் உரைக்குமாறு ''தத்த மாலான பெத்த வாதியர்கள்'' ''வேதஞ் சொனபடி யொழிய வேறுஞ் சில கலைகளினை, யோதுந் திற மருவி மறை யோதுஞ் சிவனிருகமலப் பாதந்தொழ நினைவிலர் பாஷண்டிகளென வறிக'' என்ற செய்யுள்களின் பிரகாரம் அவைதிக பூஜையைக் கைக்கொள்ளும் அவைதிக பாஷண்டிகள் வைதிகத்தையும் வைதிக பூசையையும் இகழுவார்க ளென்பதற்கு ஆட்சேப மென்னை?

வைதிகத்தின்படி பாஷாணம் உலோகம் மணி மண் முதலியவற்றைப் பூசிப்பவர்க்கே பிறவி யுண்டா மாயின், வாயு சங்கிதையில் அவைதிக மென்று கூறப்பட்டுள்ள காமிகாதி ஆகமத்தின்படி பூசிப்போர்க்குப் பிறவி யுண்டாகாமற்போமோ? இது ''கட்டப்பாறையே காற்றிற் பறக்கும்போது எச்சிற்கலையெனக் கென்னபுத்தி?'' என்றுள்ளமுதுமொழிக்கினமாயன்றோ இருக்கிறது?

## சூதசங்கிதை பிரமாணிய விசாரம்.

விளம்பினோர்பெயர்களவ்வந்நூலுள்ளும்விளங்கிடுமாலவ்வந்நூல்க
ளளர்ந்தபக்குவபேதங்களாலம்மவரவர்க்கேற்புறவிருக்கும்
வளங்கொணீர்ப்பிரவாகங்களுக்கொலிவாரிதிமுடிவாயிருப்பதுபோ
விளம்பிறைமுடித்தோனொருவனேமுடிவாயிருப்பன்மார்க்கங்களுக்கும். (ரு)

கறைகொள்புத்தாதிமார்க்கங்களுந்தான்கண்டிக்கப்படுமெனவல்ல
வறைதருக்கத்தாலொருவனோர்மார்க்கமனுட்டிக்கினவனம்மார்க்கத்திற்
குறையனுகுணமாவதிற்றிடமாகவுரைத்திடப்பட்டநம்பரமன்
மறைவருமருளான்முறைமுறையுயர்ந்துமறைநலமார்க்கநன்கடைவான். (சு)

வேதமார்க்கத்தின்முக்கியமாகவிளம்பிடப்பட்டநஞ்சிவனே
தீதகன்முத்திகொடுப்பவன்கருமகாண்டத்திற்செப்பிடப்பட்ட
நாதனுஞ்சிவனன்ஞானத்திற்பத்திநல்குவான்ஞானகாண்டத்தி
லோதிடப்பட்டசிவன்ஞானமூலமாகவொண்முத்தியைக்கொடுப்பான். (எ)

முத்திதானேகமாயிருப்பதனுன்முயல்பலமார்க்கங்களாலும்
சித்தியாதுயர்வேதாந்தநன்மார்க்கந்திகழ்நிராகாரமாயபேத
மொத்தியல்சிவனையேசொலுமதனாலுரைத்தவிம்மார்க்கத்தினாலுந்
பத்தியாஞானம்வித்தையாமென்பர்பத்திநூல்வழிச்செலீஇயுயர்ந்தோர். (அ)

வேறுமார்க்கங்களாலெழுஞானம்வினைதவாவவித்தையேயென்று
கூறுவரறிந்தோர்மாதவப்பெரியீர்குறைந்தவிம்மார்க்கங்களுக்குத்
தேறுபிராமாணியமெனப்படுதெறிகழ்முத்திவிடயத்திலில்லை
மாறுருவதனுன்மறையந்தமார்க்கம்மற்றிம்மார்க்கஞ்செலல்பழுதே. (கூ)

ஆரணமார்க்கமொன்றினாலேயுண்டாகிடும்புத்திமுத்திகளும். (௧0)

என்று கூறியதற்கும், அவைதிக நெறியில் நிற்பவர் வைதிக நெறியில் வரும் நிமித்தம் பிரமகீதை

"காதலால் தத்தங்கடவுளருளால் காலபாகத்தினல் அறத்தால், பேர தராவினல் வேதவாதத்தைப் பொருந்துவர்"

என்று பல வேதுக்கள் கூறியதற்கும் மாருக அவைதிக பூசையை யுயர்த்திக்கூறுதல் போகூழின் பயனென்றுணர்க.

இப்பூர்வபட்சியார் அவைதிக பூசையால்முத்தியுண்டாமென்றுகூறின் அது அவைதிக முத்தியாகுமே யன்றி வைதிக முத்தி யாகாது. அவ்வவை திக முத்தி வைதிகர்களுக்குப் பந்த மாதலின், வைதிகர்கள் பந்த மென்று கொண்டதையே அவைதிகர்கள் முத்தியென்று கொண்டு மயங்கிப் போன ர்களென்க. 'சிவாகமத்தின்படி யமைந்த பூசையை நிஷேதிக்க * அதற்கு அதிகாரங் கிடையாது' என்றது பெரிதும் வியப்பாயிருக்கிறது! இதற்குப் பிரமாணம் யாது? இது "சிற்றரசனை விலக்க ஏக சக்கிராதிபதிக்கு அதி காரங்கிடையாது" என்று சொல்வதற்கினமாமென்க.

இப்படிப்பட்டவர்களைக் குறித்தன்றே கூர்மபுராணம்

வேதவொழுக்கமிகழ்ந்துபுல்லர்விரகின்றம்போற்றனிபுனையும்
தீதுநூலின்வழிசென்றோர்செல்வர்நரகர்க்கதிதிகளாய்
ஆதறன்ஞற்புன்சமயங்கற்றோர்முகத்தினருமறைகள்
ஓதியுணர்ந்த முதுக்குறை வினரவோர் சிறிது நோக்காரால்

என்று கூறிற்று?

அத்வைதியார் "வேதந் தன்னைத் தாழ்த்திக் கூறிக் கொள்ளுமா?" என்று வினவினதாகப்பூர்வபட்சியார்வரைந்து அதற்குவிடை "பிராமணன் சந்நிதியில் சூத்திரன் தன்னைத் தாழ்த்திக் கூறுதல் குற்றமோ?" என்று வரைந்தார். ஆகமத்தைப் பிராமணனகவும் வேதத்தைச்சூத்திரனகவும் வை த்து முரண்படப் பேசியது கலிகால விந்தையி லொன்றன்றி மற்றென்னை? சிவாகமத்தில் வேதத்திற்குவிருத்தமாகாத பாகமேபிரமாணமென்று"துவித சைவரே மாயாவாதிகள்" என்னும் நூலில் "வேதாகமங்களைப் பிரமாண மாகக் கொள்ளுதல்" என்னும் மகுடத்தின் கீழும் "பதிபசுபாசவாதம்' என் னும் நூலில் "வைதிக சைவர் தாந்திரிக சைவர்" என்னும் மகுடத்தின் கீழும் சுருதி ஸ்மிருதி புராணேதிகாசப் பிரமாணங்களுடன் எழுதியவற்றி ற்கெல்லாம் யாதும் பதில் கூற விடமில்லா தொளித்திருந்து "பழய குருடி கதவைத்திறவடி" என்றவாறு மறுக்கப்பட்டுப்போனதையேமீண்டும் மீண் டும் எழுதுதல் அறிவுடைமையாமா? சூத்திரனைப்பார்க்கிலும் பிராமணன் உயர்ந்திருப்பதுபோல், வேதத்தைப் பார்க்கிலும் சிவாகமம் உயர்ந்திருக்கு மாயின், புராண இதிகாசங்கள்: சிவாகமத்தை இகழ்ந்ததுபோல வேதத்தை யிகழாது புகழ்வதற்கு ஏது என்னை?

சூதசங்கிதை புராணவரலாற்றில்

அறையுமெந்நூற்குமறைபிரதானமாகியபெரும்பிரமாணம் (௬௧)

என்றும்,

மோசகணையுரைத்த அத்தியாயத்தில்

எல்லாப்பிரமாணங்களுக்குமியைமுக்கியமாம்பிரமாணம்
வல்லாருரைக்கும்வேதமே (அ)

என்றும்,

---

* அதற்கு=வேதத்திற்கு. [கிரந்தகர்த்தர்.]

விசிட்டதருமமுரைத்த அத்தியாயத்தில்

முன்னதுகாபாலாதிப்பேதத்தான்மொழிபலவிதப்பமேதனில்
பின்னதுகாமிகாதிப்பேதத்தாற்பேசிடுமிருபத்தெண்வகையாய்
மன்னிடுமீதுவிசேடமாமிதனின்வைதிகதருமமுத்தமமாம் (கச)

என்றும்

வேதத்தைப் பெரும் பிரமாணமென்றும் முக்கியப் பிரமாணமென்றும் காமிகாதியாகமங்கட்கு மேற்பட்ட உத்தமப் பிரமாணமென்றும் கூறி,

வேதாவிரோதமுரைத்த அத்தியாயத்தில்

உம்பர்தம்மை, வரமுறு மாதேவனுக்குச் சமமென்றுரைத்தல் மறைக் கொப்புக்கூறல், விரவுமிவையனைத்துமாபா வியர்க்கேயுண்டாகும் (உ0)

என்றும்,

பாவபரிபாகமுரைத்த அத்தியாயத்தில்

வேதம் வேதாந்தம் வேதஞானத்தை நிந்தை செய்தோன், போதமில் புலையனுவான் (சு)

என்றும்

உரைத்தலால் வேதத்தைச் சூத்திரனுக்குச் சமமென்றும் வேதத்திற்குக் கீழ்ப்பட்ட பிரமாணமான சிவாகமத்தைப் பிராமணனுக்குச் சமமென்றுங் கூறி, வேதநிந்தைசெய்த இப்பூர்வபட்சியார்: பதினன்கு விந்தைகட் குட்பட்ட ஷை புராணத்தின் பிரமாணப்படி மாபாவியர்வகுப்பிலும் புலையர் வகுப்பிலும் சேர்கின்றனரேயென மிக விசனமுறுகின்ருேம்!

இன்னோரன்னர் கூற்றைக்குறித்தன்ரு

விஷ்ணுபுராணம் 6 ம் அம்சம் கலிதருமத்தில்

இப்படியாக வருணுசிரம தருமங்கள் கெட்டு வேதமார்க்கமே யொளித்துப்போகப் பாஷண்டமதங்களைக் கைக்கொண்டு ஜனங்கள் நடப்பதினுல் அதருமம் விருத்தியாவதுபற்றி ஆயுள் குறைந்துவிடும............எப்போது பாஷண்டர் விருத்தியாகின்ருர்களோ, எப்போது வேதமார்க்கத்தையனுசரித்த சற்புருஷருக்குத் தீங்குண்டாகின்றதோ, எப்போது தருமவான்களுடைய எத்தனங் கெட்டுப்போகின்றதோ, அப்போது கலி முதிர்ந்து நிற்கிறதென்றறிந்து கொள்ளவேண்டும்.........எப்போது வேதஞ் சொல்லுகிற காரியங்களிலே பிரீதியில்லாமல் பாஷண்ட வாக்கியங்களிற் பிரீதியுண்டாகின்றதோ, அப்போது கலி மகாபலம் பொருந்தி யிருக்கிருனென்றறியவேண்டும்.

என்று கூறியது?

"வேதம் சிவாகமத்துக் கடக்கமென்பது எதனுல் விளங்கியது?" என்று அத்வைதியார் வினவியதாக வரைந்து, பின்னர் அதற்குவிடை

தெளிதருமாகமவிதியிற்பதிட்டைசெய்யப்படுந்தெய்வ
ஒளிமிகுவைதிகன்பூசித்துறவணங்கத்தக்கதே
அளியுடையீரெப்போதுமமைதருபண்ணவரூபம்
விளிதலிலாச்சுத்தமாயிருப்பதன்றிவேறுளதோ.

என்னுஞ் சூதசங்கிதையால் விளங்கிய தறியக்கடவீர்" என்ருர்.

'தெளிதரு மாகமவிதி' என்ற தலைப்பினையுடைய ஷ செய்யுள்: சூத சங்கிதை சூதகீதை சருவவேதார்த்த சங்கிரகமுரைத்த அத்தியாயம் 20 ம் எண்ணிலுள்ளது. அது ஷ அத்தியாயம் 14 வது செய்யுளில் "வைதிகற்கு வேதவிதி மாண்பூசையல்லாது, வைதலிறந்திர விதியினற்பூசை கூடாது" என்றுகூறி, பின்னர் 20 வது செய்யுளில் ஆகமவிதிப்படிப் பிரதிஷ்டைசெய்த தெய்வத்தை வைதிகன் பூசிப்பது தனதுயர்ந்த நிலைமைக்குத் தக்கதன்றாயினும் பண்ணவருபம் (சிவரூபம்) சுத்தமானமையின், அது: அவைதிகர்களான ஆகமிகர்களால் பிரதிஷ்டை செய்யப்படுவதின் காரணமாக அசுத்தமாகாதாகலின், 'ஆகமவிதியிற் பிரதிஷ்டைசெய்யப்படும் தெய்வத்தை வைதிகன் பூசிக்கத்தக்கதே' என்னுங் கருத்துறத் 'தெளிதருமாகம விதியிற் பதிட்டை செய்யப்படுந் தெய்வம், ஒளிமிகு வைதிகன் பூசித்துற வணங்கத்தக்கதே' என்று கூறியதை யொட்டிப்பார்க்குந் திறமின்றி 'வேதம் சிவாகமத்திற் கடக்க மென்பது எதனால் விளங்கியது' என்ற கேள்விக்கு 'தெளிதருமாகம விதியின்' என்றசெய்யுளைவிடையாகவெழுதி மருண்டாரென்க.

"ஞானியானவன் ஞானமுதல் நான்கினுக்கு முரியன். யோகியானவன் யோகமுதல் மூன்றினுக்கு முரியன். கிரியாவான் கிரியைமுத லிரண்டினுக்கு முரியன். சரியையாவான் அச்சரியை யொன்றினுக்கே யுரியன். இப்படியே ஆகமிகன் ஆகமத்தையும் வேதத்தையு மனுசரிப்பான். வைதிகன் வேத மொன்றினையே அனுசரிப்பான்." என்றார். இவர் 'வேதம் சிவாகமத்திற் கடக்கமென்று எந்நூலைப் பிரமாணமாகக் காட்டினரோ, அந்நூல் அவ்வத்தியாயம் அதாவது சூதசங்கிதை சூதகீதை சருவ வேதாந்த சங்கிரகமுரைத்த அத்தியாயத்தின்

இத்தருவைதிகமார்க்கப்பிரவிர்த்தியில்லாருக்
கத்தனுரணத்தில்வன்னந்தருமமாச்சிரமநல
மொத்தபூசாதியெல்லாமுரைத்தபடியேபற்பல்
சித்தநிலவாகமத்துஞ்செப்பியிருக்கின்றனனால். (கஉ)

இச் செய்யுளில் வைதிகமார்க்கப் பிரவிர்த்தியில்லாத அனதிகாரிகளுக்காக ஆகமஞ் சொல்லப்பட்டிருக்கிறதென்றும்,

ஆகமிகர் வைதிகர்க் கவ்வப்பூசையே தகுதி
யாகமிகர் வைதிகரைத் தொடுதேலும் வைதிகரானோர்
ஆகமிகரைத் தொடுதேலுங் கூடாதவிராசன்
ஆகமிகன் வைதிகன் வேறாவிருக்கச் செயல்வேண்டும். (உக)

இச் செய்யுளில், ஆகமிகர்க்கும் வைதிகர்க்கும் அவரவர்க்குரிய பூசையே தகுதி (பிராமணன் சூத்திரனையும் சூத்திரன் பிராமணனையும் தொடா திருப்பது போன்று) ஆகமிகரும் வைதிகரும் ஒருவர்க் கொருவர் தொடக் கூடாது, அரசன் அவ்விருவரையும் பிரித்து வைக்க வேண்டும் என்றும்,

22 வது 23 வது செய்யுட்களில், சிவனுக்கொப்பான தேவனும், சிவஞானத்திற் கொத்த ஞானமும், கங்கைக்கொப்பான நதியும், பஞ்சாக்கரத்துக் கொப்பான மந்திரமும், காசிக் கொப்பான நகரும், அன்னத்திற் கொப்பான வுணவும் எவ்வாறின்றோ, அவ்வாறே வைதிகர்கட் கொப்பானவ ரில்லையென்னும் பொருள்தருமாறுகூறி, பின்னர்

உலகினுக்கு வைதிகன் செங்கதிரோனை யொத்தொளிர்வான்
அலர்புகழ் மற்றவன் சிவன்போல் யாவரும் போற்றத்தக்கான்
மலமிலவன் மான்மியம் யான் சொல்லுதற்கு வல்லேனோ
பலமறைகள் மிருதிபுராணாதிகளே பகருமால். (உசு)

என்ற இச்செய்யுளில் "உலகத்திற்கு வைதிகன் சூரியனை யொத்து விளங்குவான், அவன் சிவனைப்போல் யாவராலும் துதிக்கத்தக்கான், மாயா சம்பந்தமற்றவன், சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களால் துதிக்கத் தக்க வன் என்றும் கூறி யுள்ளதால், வைதிகன் உயர்ந்தவ னென்றும் வேதாதி காரியென்றும் பெறப்பட்டதோடு ஆகமிகன் தாழ்ந்தவ னென்றும் அனதி காரியென்றும் பெறப்பட்டன. பெறப்படவே, ஞானி ஸ்தானத்தி லிருப்ப வன் யாவன்? ஏனைய ஸ்தானத்தி லிருப்பவன் யாவன்? புத்திமான்களே சிறிது தயைகூர்ந்து யோசித்துப் பாருங்கள்.

வைதிகன் ஆகம நெறியாற் பிரதிட்டை செய்த தெய்வத்தை வணங்கு வது கூடாதாயினும் சிவன் சுத்தனாயிருப்பதால், அவனுக்கு (வைதிகனுக்கு) அச்சிவனைப் பூசிப்பதால் தோஷ முண்டாகாதென்று முன்னர்க் கூறினு மாதலின்,அதுபற்றி வைதிகன் வேதத்திற்கு அதிகாரியாவதோடு ஆகம மார் க்கத்தால் ஸ்தாபிக்கப்பட்ட சிவனைப் பூசிப்பதற்கும் அதிகாரி யென்றும், ஆகமிகன் ஆகமத்திற்கு மாத்திர மதிகாரியன்றி வேதத்திற்கு அதிகாரி யன் றென்றும் இவர்காட்டிய சூதசங்கிதையின்படி பசுமரத்தாணியாக நாட்டப் பட்ட தென்க. இது காறும் பேசிவந்ததில் ஆகமிகன் உயர்ந்தவனென்றும் வைதிகன் தாழ்ந்தவனென்றும் பூர்வபட்சியார் கூறிய விஷயம் செவ்வனே மறுக்கப்பட்டது.

"சைவ சமஸ்காரம் பெருதவர்கள் வைதிக தருமத்தை யன்றிச் சைவ தருமத்தைத் தழுவி வாழ்தற் கிடமின்று" என்ருர்.

இது வாஸ்தவமே.

சூதசங்கிதை பிராமாணிய விசாரத்தில்

வேத மார்க்கத்தில் முக்கியமாக விளம்பிடப்பட்ட நஞ்சிவனே, தீதகல் முத்தி கொடுப்பவன் (எ)

என்றும்,

ஆரணமார்க்க மொன்றினனே யுண்டாகிடும் புத்தி முத்திகளும் (கO)

என்றும்,

கூர்மபுராணம் திருக்கலியாணம்.

வேதநூல்கள் அவற்றின் வழிவிராட்டாஞ்சுவாயம்பூமனுமன்
ஓதுநூல்கள் வியாதமுனியுரைத்த நூல்களவற்றின்வழி
தீதிலருமாமறைக் கிழவர்செப்பு நூல்களனைத்துமே
நீதிநூல்களிவற்றின்வழி நின்ருேர் நெறியினின்ருேரே.

என்றுள்ள பிரமாணங்களைக் கைக்கொண்டுள்ள வைதிகர்கள்,

"மந்தமார்புத்தியுடையராய் வல்லமாயையால்மூடிடப்பட்ட
பந்தராயினருக் கனுகுணமாகப்பகர்ந்த"

ஆகமதீட்சை பெற்று வாழ்தற்கிடமின்றுதான். வைதிகன் ஞானியை ப்போல் யாவற்றிற்கும் அதிகாரியென்று முன்னர்க் கூறியுள்ளே மாதலின் அதுபற்றி மீண்டுப்பேசாது விட்டாமென்க.

## சாதனசதுஷ்டயங்களுக்குச் சரியையாதிகள் கீழென்பது.

இனி மற்றொருவிஷயம் தொடக்கின்றார். அது முன்னர் வேதாந்திகள் விக்கிரகபூசையை நிந்திக்கின்றார்களென்றும், வேதத்தைப்பார்க்கிலும் ஆகமம் உயர்ந்ததென்றும் முன்னோடு பின்னுதைத்துக் கொள்ளப் பேசியது போன்று சரியையாதிகளுக்குச் சாதனசதுஷ்டயங் கீழென்று தொடுத்த மற்றொரு போலிவிஷயமேயாம். அதுவருமாறு:—

வராகோபநிஷத்து: சாதன சதுஷ்டயமாகிய நித்தியா நித்திய வஸ்து விவேக முதலியவைகள் முமுக்ஷுவால் அடையத்தக்கனவே.'அதுவே மோட்சமுயற்சி' என்று அத்வைதியார் கூறியதாக வெழுதி அதற்கு விடை: "நீர் முதலிற்போட்டுக்கொண்ட அஸ்திபாரத்திற்கு இந்த வசனம் இணங்கவில்லை. எங்ஙனமெனின், 'அத்வைத ஞானத்தை யடைதற்குரிய சாதனங்கள் சரியை முதலியன அன்று, என்று தீட்டியதற்கு இந்த வசனம் எங்கே ஒத்திருக்கின்றது? என்றும், சாதன சதுஷ்டயம் முமுட்சுவாலடையத்தக்கது' 'அதுவே மோட்ச முயற்சி யென றுங் கூறியிருக்கின்றது. அவ்வளவேயன்றி, அத்வைத ஞானத்தை யடைதற்குரிய உபாயம் சாதன சதுஷ்டயம்' என்று எங்கே கூறியிருக்கின்றது?" என்றார்.

வராகோபநிஷத்தில் அதுவே மோட்சமுயற்சி என்பதில் 'அதுவே' என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப்பொருளினின்று ஏனைய சாதனைகளை விலக்க 'அத்வைத ஞானத்தை யடைதற்குரிய சாதனங்கள் சரியைமுதலியன அன்று என்று தீட்டிய இந்த வசனம் எங்கே ஒத்திருக்கின்றது' என்றது' என்னை? அதுவே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப்பொருளில் வந்ததென்பது எவ்வாறெனில் வராகோபநிஷத்து ஞான காண்டமாதலினாலும், ஞானகாண்டத்தில் சீவான்ம பரமான்ம விசாரணைசெய்து வீடுபெற விரும்புவோன் முமுட்சுவாதலினானும்

அவ்வராகோபநிஷத்து 2-வது அத்தியாயத்தில்

*தன்னுடைய வருணாசிரம தருமத்தினாலும், தபசினாலும் குருவைச் சந்தோஷப்படுத்துவதினாலும் புருஷர்களுக்கு வைராக்கிய முதலிய சாதன சதுஷ்டயம் உண்டாகின்றது*

என்று கூறுதலின் அவனுக்குக் கீழிட்ட சாதனமாகிய சரியையாதிகளைக் கூறல் அநாவசியமாதலினாலும், 'அதுவே' என்பது சாதன சதுஷ்டயமென்றும் சரியை முதலியன அன்றென்றும் கொண்டு ஏகாரத்திற்குப் பிரிநிலைப்பொருள்கொண்டாமென்க.

"மோட்சமுயற்சி என்றதும் அத்வைத ஞானத்தை யடைதற்குரிய உபாயம் என்றதும் ஒன்றாகாதோ" என்று அத்வைதி கேட்பதாகக் கேட்டு அதற்கு விடை "மோட்சம் அத்வைதம் என்பவைகளுக்கு எல்லாச் சமயிகளும் ஒரே விதமான பொருள் கொண்டிருந்தால் நீர் தடுமாறிப் பேசியது ஒருவாறு ஒக்கும்" என்று பகர்ந்தார்.

மோட்சமுயற்சி என்பதும் அத்வைத ஞானத்தை யடைதற்குரிய உபாயம் என்பதும் ஒன்றென்பதை 'அதுவே மோக்ஷமுயற்சி' என்று எவ்வுபநிஷத்துக் கூறிற்றோ அவ்வுபநிஷத்தைக் கொண்டே சித்தாந்தப் படுத்துவாம். ஷ உபநிஷத்து இரண்டாவது அத்தியாயத்தில்

"என்னுடைய பூர்ணாத்மாவைத்தவிர ஜகத் ஜீவன் மாயைமுதலியவைகளில்லை; அவைகளுக்கு நான் விலட்சணன்."

என்றும்,

"சர்வ சாட்சியாயும் வருணாசிரம மற்றதாயு மிருக்கிற (தன்) ஆத்துமாவைப் பிரமசொரூபமாகவே பார்க்கிறவன் பிரமமே யாகிறான்."

என்றும்,

"ஆநந்தமாயும், இருமை யற்றதாயும், குணங்க ளற்றதாயும், சத்தியமானதாயும், சித் கனமாயும் இருக்கிற அந்தப் பிரமத்தைத் தன் ஆத்துமசொரூபமாக அறிந்தவன், ஒன்றி லிருந்தும் பயமடைகிறதில்லை."

என்றும்,

"அதைத் (பிரமத்தை)தவிர வேறொன்றுமில்லை யென்பதுதான் பிரமஞானிகளுடைய இருப்பு."

என்றும்

உள்ள வாக்கியங்களால் 'மோட்ச முயற்சி' என்பதும் 'அத்வைத ஞானத்தை யடைதற் குரிய உபாயம்' என்பதும் ஒன்றாய் நின்றமையின், மோட்சம் என்பதும் அத்வைத ஞானம் என்பதும் ஒன்றேயெனப் பசுமரத்தாணியாய் நாட்டப்பட்டதென்க. இதனால் மோட்சம், அத்வைதம் என்பவைகளுக்கு அத்வைதிகள் கொண்ட பொருளே சரியா மன்றி, வேற்றுச் சமயிகள் கொண்ட பொருள் தவறென்பது திண்ணமா மென்க. வேற்றுச் சமயிகளில் தற்போது எமக்கு வாதியாய் நிற்பவர் துவித சைவரே யாதலின் அவர் கொண்ட பொருளையே இவ்விடத்தில் மறுப்பாம்.

ஷ வராகோபநிஷத்து 2 வது அந்தியாயம்.

"உண்மையான அத்வைதம் அறியப்பட்டதானால் (விஷய) வாசனை போய்விடுகிறது. (வாசனை யற்றால்) பிராரப்தம் போனபின் தேகம் வருகிறதில்லை. இவ்விதமாய் மாயை நசித்துப்போகிறது நிச்சயம். சகத்திருக்கிறதென்றால் (அப்படி) இருக்கிற தென்பது சத்ரூபமான பிரமமே. ஜகத் விளங்குகிற தென்றால், அப்படி விளங்குகிறது பிரமந்தான். பாலை நிலத்தின் தோற்றமான ஜலம் முழுதும் பாலைப்(கானல்) பூமியே யன்றி வேறில்லை."

பஞ்சப் பிரமோபநிஷத்.

"அக்காரணம் ஒன்றே, காரியம் வேறல்ல, உபயாத்மகமுமல்ல, எவ்விடத்தும் பேத மென்பது பொய்யே...........அக்காரணமானது நித்தியமாயும் ஒன்றாயும் இரண்டாவ தற்றதாயு மிருக்கின்றது. அக்காரணமாவது இரண்டாவது இல்லாத சுத்த சைதன்னியமல்லவா?"

இப்பிரமாணங்களினால் அத்வைதம் என்பது இரண்டாவது பொருளின்றி யேகமாய் விளங்கும் பிரமம் என்றும், பேதம் என்பதும் காரியம் என்பதும் பொய்யென்றும், உலகம் இருக்கிறதென்றால் அது கானல் நீர் போல் பிரமத்தில் கற்பிதமா யிருக்கிறதென்றும் ஏற்பட்டு அத்வைதமென்பது கற்பிதமின்றி விளங்கும் பிரமமே என்று விளங்குகிறது. இதனை அத்வைதிகள் தங்கள் சித்தாந்தமாகக் கொண்டிருக்கிறார்க ளென்பது அவர்கள் இயற்றி யுள்ள நூற்களினால் இனிது விளங்கும். இத் துவித சைவர்களோ அத்வைதம் என்பதற்குப் பொருள்

"அத்துவித மாவது பேதப் பொரு ளிரண்டுந் தம்முள் அபேத மாதற் குரிய சம்பந்த விசேடம்"

என்கிறார்கள்.

(இது சிவஞான போதம் பதினோராஞ் சூத்திரம் சிவஞான சுவாமிகள் உரையி லிருக்கிறது.)

பேதப் பொருள் இரண்டு கூடி யொன்றாமா? இரண்டு இரண்டாமே யன்றி யொன்றாவது எங்ஙனம்? இதுபற்றிய மறுப்பு "துவித சைவரே மாயாவாதிகள்" என்னும் நூலில் 43, 44, 45 வது பக்கங்களில் விரிவாய் வந்திருக்கின்றமையைக் காண்க.

இரண்டாம் பொருளின்றிச் சத்தா மாத்திரமா யிருப்பதுதான் அத்வைதம் என்று கூறிய உபநிஷத்து வாக்கியங்களுக்கு முன் யாதோர் பிரமாணமுமின்றி 'அத்துவிதமாவது பேதப்பொருளிரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம்' என்று கூறிய வெறுஞ் சொல், பிரமாணமாய் நிற்றல் யாங்ஙனமென்று வினவி மறுக்க.

அத்வைதிகள்: மோட்ச மென்பது பந்த மற்ற நிலைமை அதாவது கீழ் வரும் உபநிஷத்துகள் கூறுகிறபடி

சர்வசாரோபநிஷத்.

"மோட்சம் எப்படிப்பட்டது?"

"அதின் (பந்தத்தின்) நிவர்த்தியே மோட்சம் எனப்படுவது"

நிராலம்போபநிஷத்.

"நித்தியாநித்திய வஸ்து விசாரத்தினாலே அநித்தியமாகிய சமுசார சுக துக்க விஷய சகல க்ஷேத்திராபிமானம் முதலிய சகல மனோவியாபார மில்லாம லிருக்கிற ஸ்திதியே மோட்சம்"

என்ன, இவர் பகுதியினர் "பரமுத்தியில் உயிர் சிவாநந்தானுபூதியை விடயித்தலுண்டு" என்கின்றனர். (இது சிவஞானபோதம் பதினோராஞ் சூத்திர வுரையிலுள்ளது.)

அத்வைதிகள்: ஷை உபநிஷத்து வாக்கியங்களின்படி மனோ வியாபாரமில்லாம லிருக்கிற ஸ்திதியை (பந்தமற்ற நிலையை) மோட்சமென்று கூறினால், இத்துவிதிகள் 'விடயித்த லுண்டு' என்று மனோ வியாபாரமுள்ள நிலையை (பந்தமான நிலையை) மோட்சமென்கிறார்கள். அத்வைதிகள் கூறுவதற்கோ வேதாதி சகலப் பிரமாணங்களு மிருக்கின்றன; இவர்களுக்கோ அஃதின்று. விடயித்த லுள்ளபோது விடயீகரிக்கும் பொருளும் விடயித்தலையுள்ள புருடனும் இருக்க வேண்டுதலின், இத்துவிதிகள் கூறும் காண்பான்காட்சி காணப்படும் பொருளோடு கூடின திரிபுடியுள்ளமுத்தி பதமுத்தியாமே யன்றிப் பரமுத்தி யாகாதென்க. எங்கே திரிபுடியுண்டோ அங்கே மாயையுண்டு, எங்கே மாயை யுண்டோ அங்கே பந்தமுண்டு, எங்கே பந்த முண்டோ அங்கே துக்க முண்டு என்பதும்; எங்கே திரிபுடி யில்லையோ அங்கே மாயையில்லை. எங்கே மாயை யில்லையோ அங்கே பந்தமில்லை, எங்கே பந்த மில்லையோ அங்கே துக்கமில்லை யென்பதும்

சிவஞானபோதம்.

"அவனேதானேயாகியவந்நெறி
யேகனாகியிறைபணிநிற்க
மலமாயைதன்னொடுவல்வினையின்றே" (௧௦)

என்பதனுனும்,

வாயுசங்கிதை ஞானநிலைமை.

"ஆன்மாவைமுறையிலந்தமாயைதான்மூடும்மலமாயைகெட
வுறைவதுவேசிவமென்னவுரைப்பராலெனவுரைத்தான்" (௧0)

என்பதனுனும்,

சூதசங்கிதை வேதாவிரோதம்.

மருவுமுத்திகாலத்தில்வந்தசமத்தன்மைமருவலும்போமாற்ருல்
ஒருவின்முத்தியநித்தியமாமாதலினந்தக்கரணவுபாதியாலே
வருசீவபாவமாய்த்தோன்றியவான்மாபரமாஞானத்தாலே
யருமாயைநிவர்த்தியுற்றுப்பூரணமெய்ச்சிவரூபமாயிருப்பான். (௧௫)

சிவரகசியம் ரிபுகீதை அத்துவிதவுண்மை.

ஞாதருஞாஞதிகளோரணுவுமில்லை
ஈனமிலாச்சன்மயமாயிலங்குஞ்சித்தாய்
இன்புருவாயுளதுபரப்பிரமமொன்றே. (௧௧)

பிரபுலிங்கலீலை கதலிவன கதி.

"ஞேயஞானஞாதருவெனுமிவைபலநிற்கும்
ஆயின்வேறறுமுத்தியன்றதுசகமாமென்
றேயுமாறிதுவதுவெனுஞ்சுட்டிலாவியல்பை
மாயைமாறியதேவிபாலருளினன்வள்ளல்." (௧௪)

என்பதனுனும் உணரக் கிடத்தலின், இத்துவிதிகள் திரிபுடியுள்ள பந்த நிலையினையே மோட்சமென்று பிறழ வுணர்ந்து பெரிதும் மயங்கிப் போனுர்க ளென்பதாம். அவ்வாறு மயங்கிப் போயதோடு அத்வைதிகள் வேதாதிப் பிரமாணங் கொண்டும், யுக்தி யனுபவங் கொண்டும் அத்துவிதம் யதார்த்த மென்றும், துவிதம் கற்பிதம் என்றும் கூறுவதற்கு மாருக அத்துவிதம் கற்பிதம் என்றும் துவிதம் யதார்த்தம் என்றும் கூறி வேதபாகியராயும் நின்ருர்கள். இப்படிப்பட்ட இவர்கள் மோட்சம் அத்வைதம் என்பவைகளைப் பற்றி அத்துவிதிகள் தடுமாறிக் கூறிஞர்களெனல், சீதையின் கற்பைப் பழித்துச் சூர்ப்பநகை குறைகூறியதற்கினமாயதென்க.

'மோட்சம் அத்வைதம் என்பவைகளுக்கு எல்லாச் சமயிகளும் ஒரே விதமான பொருள் கொண்டிருந்தால் நீர் தடுமாறிப் பேசியது ஒருவாறு ஒக்கும்' என்று பூர்வபட்சியார் கூறிய கூற்றை யின்னம் ஆராய்வாம். மோட்சம் அத்துவிதம் என்பவைகளைப் பற்றி யிப்பூர்வபட்சியாரெழுதுங்கால் எல்லாச் சமயிகளுங் கூறும் பொருளை யனுசரித்துத்தான் இவர் கூறுவார்போலும். அவ்வாருயின்,

சிவஞானசுவாமிகள் சிவஞானபோதம் உம் சூத்திரத்தில்

"அத்துவிதமென்ற சொல்லால் ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு"

என்றெடுத்துக் காட்டி, பத்தாஞ் சூத்திரத்தில்

"ஈண்டொற்றுமைப் படுதலாவது குடமுடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும்போலஒருபொருளாய்ஒற்றுமைப்படுதலோ,அன்றிச்குற்றியைமக

னென்பதுபோலத்திரிவுகாட்சியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடமென்பதுபோல ஒன்று திரிந்தொன்றாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றி வெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித் தன்மையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தீயுமிரும்பும்போல ஒன்றிஞென்று விரவுதலா ஞெற்றுமைப் படுதலோ, அன்றிப் பாலும் நீரும் போலப் பிரிக்கப்படாத் சையோகத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் கருடனும் மாந்திரீகனும்போலப் பாவனைமாத்திரையான் ஒற்றுமைப் படுதலோ, அன்றிக் காய்ந்த இரும்பின் நீர்போல ஒன்றிஞென்றில் இலயமாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப்பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி இந்தனத்தின் எரிபோல விளங்காமையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஞாயிற்றின் ஒளியின் விளக்கொளிபோலச் சத்திகெட்டு நிற்றலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தலைவனுந் தலைவியும்போல இன்பநுகர்ச்சி மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி நாட்டா ரிருவர்போல நட்பு மிகுதியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும்போல ஒப்புமை மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ என்று அவ்வச்சமயவாதிகள் மதம்பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப்பாடுகளை யெல்லாம் நீக்குதற்பொருட்டு, அவனேதானேயாகிய அந்நெறியென உவமையெடுத்துக் காட்டியோதினர்''

என்று கூறி, முறையே அத்வைதத்தைப்பற்றியும் மோட்சத்தைப்பற்றியும் எல்லாச் சமயிகளும் கொண்ட பொருளைக் கொள்ளாது தடுமாறிக் கூறியதேனோ? இதுவேயுமன்றி இப் பூர்வபட்சியார்: தாமெழுதிய ஆபாச வினு விடைப்புத்தகத்தின் 31-வது பக்கத்தில் ''துவைதாத்வைதம் என்பன சித்தாந்திகளது சொத்தாயின. இவற்றுள் ஒவ்வொன்றினைக் களவாடித்திரிவாராயினர், ஏனைய சமயிகள்...... .. அவற்றிற்குத் தனித்தனிப் பொருள்கூறுங்கால் ஒருவரோடொருவர் பிணங்கிப் பேதையராயினர்'' என்று தடுமாறிக் கூறியதும் என்னோ? சிவஞானசுவாமிகளது தடுமாற்றத்தையும், முன்வரைந்ததற்கு மாறாகப் பின்வரையும் தம்முடைய தடுமாற்றத்தையும் வெளிப்படுத்தத்தான் 'நீர்தடுமாறிப்பேசியது ஒருவாறு ஒக்கும்' என்று பூர்வபட்சியார் எழுதினர் போலும்! இத்தகைய நாவடக்க மில்லாதவரைப் பற்றித்தான் நாயனர்

''யாகாவா ராயினும் நாகாச்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு''

என்று கூறினராக்கும்!

''நித்தியா நித்தியவஸ்துவிவேகம்...இந்த நான்குசாதனமும் கைகூடிய பிறகே ஒருவனுக்கு ஒரு தெய்வவழிபாடு சித்திக்கும் அந்தத் தெய்வம் வேதத்திற்கூறிய எதுவாயிருந்தாலு மிருக்கலாம். சரியையாதிகள் தெய்வ வழிபாடாம். அந்தத்தெய்வம்சிவபரஞ்சுடரொன்றேயாம். சிவனை வழிபடும் பரிபாகிகளுள், உயர்வு தாழ்வுகளைக் காட்டவே ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் வியவஸ்தை யுண்டாகியது.......வேதத்திற்கூறிய சாதன சதுட்டயங்களையடைந்து, அவற்றால்பலதெய்வங்களை வணங்கி, மிறிய உத்தம பரிபாகிக்கு முடிவாகப் பிராப்தமாகத் தக்க சிவோபாசனையினது பேதமாக வெளிப்படும் சரியையாதிகளின் முன்னர்ச் சாதன சதுஷ்டயம் ஒரு கன்னிகையினது கலியாணத்துக்குப்பூர்வம்நடத்தியதேகபோஷணைபோல்வதாம்.''

என்றார். சரியை, கிரியை, யோகம் என்னுமூன்று கர்மங்களு முற்றிய பின்னர்த்தான் சாதன சதுஷ்டய முண்டாமென்று இவரினத்தவரான சிவ

ஞானசுவாமிகள் சிவஞானபோதம் சிறப்புப்பாயிர வுரையில் "சரியைமுத லியமூன்றுபாதப்பொருளை ஆராயும் நூல்களான சோமபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞான போதமெனவே, அந்நூல்க ளுணர்ந்த பின்னர் இந்நூல் கேட்கற்பாற் றென்பது பெறப்பட்டது; படவே, முன் னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களையோதி, அதன்பின்னர்ச் சரியாபாத முத லியவற்றை ஆராயு நூல்களை முறையேகேட்டு, அவ்வாறொழுகி மனந் தூய ராய் நித்தியாநித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக் கஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூல் உணர்த்துக வென்பது போந்ததெனக் கொள்க."

என்று கூறி யிருக்கிறார். இப் பூர்வ பட்சியாரோ சாதன சதுஷ்டயம் வந்த பிறகே சரியையாதிக ளுண்டா மென்று கூறி, சிவஞான சுவாமிகள், நித்தியாநித்திய வுணர்வு (நித்தியா நித்திய வஸ்து விவேகம்) யோகபாதத் திற்கு மேற்பட்டதென்று கூறியதை மறுத்து, தமது முன்னோர் நெறியை முரண்படச் செய்து அவர்களை முதுக்குறை வில்லாதவராக்கி விட்டனர். இது இவர்க்கும் இவர் இனத்தவர்க்கும் பழிப்பா மென்க. நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய சாதன சதுஷ்டயங்கள் ஞானபாதத்திற் பேசப் படுகின்றனவே யன்றி, சரியாபாத முதலியவற்றில் பேசப்பட வில்லை. அதற்கு மாறாகப் பேசும் இவர் கூற்றின்படி நித்தியா நித்திய வஸ்து விவேக முதல் முமூட்சுத்துவம் ஈறாயுள்ள சாதன சதுஷ்டயங்க ளுண்டாய பிறகே சரியை யாதிகளுண்டாமாயின், சரியாபாதமுதலியவைகளுக்கு மேற் பட்டுள்ள ஞான பாதத்தில் நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய சாதன சதுஷ்டயத்தைப்பற்றி யேதும் பேசாதிருக்கவேண்டும். ஏன் பேசாதிருக்க வேண்டிய தெனின், கர்ம காண்டத்திற் கூறிய நித்திய, நைமித்திய கரும முதலியவற்றைப் பற்றி ஞானகாண்டத்திற் கூறாமைபோலவென்க. அவ்வா றின்றிச் சரியாபாத முதலியவற்றிற் பேசாது ஞான பாதமான

சிவஞானபோதம் முதற்சூத்திரத்தில்

"சங்கார காரணனா யுள்ள முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம்."

என்றும்,

ஷை இரண்டாஞ்சூத்திரத்தில்

"புனருற் பவம் வருமா றுணர்த்துத னுதலிற்று"

என்றும்,

ஷை மூன்றாஞ்சூத்திரத்தில்

"ஆன்மப் பிரகாசமுணர்த்துத னுதலிற்று"

என்றும்,

ஷை நான்காஞ்சூத்திரத்தில்

"ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தமென் னுநான்கனுள் ஒன்றன்றாயினும் நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவ ராகிய அமைச்சரோடு கூடிநின்று தன்றொழி னடாத்தும் அரசன் போல"

என்றும்,

ஷை ஐந்தாவதுசூத்திரத்தில்

"இவ்வான்மாக்க ளிடத்துத் தமது முதல்(கடவுள்,உபகார முணர்த்து தனுதலிற்று"

என்றும்,

ஷை ஆறஞ்சூத்திரத்தில்

"சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துதனுதலிற்று"

என்றும்

உரைகாரர் கூறியதேனோ? ஷை சிவஞானபோதம் ஆறும் சூத்திரத்தில் "உணருரு அசத்து, உணராது இன்மை" என்று கூறியதை நித்தியாநித்திய வஸ்து விவேகமென்றுணராமல் போனதினாற்றான் பூர்வபட்சியார்பெரிதும் மயங்கிப் பேசலானார் பாவம்! நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய சாதன சதுஷ்டய முற்ற பின்னரே சரியையாதிகள் உண்டாவதாயின், நித்தியப் பொருளையும் அநித்தியப் பொருளையும் ஞான பாதத்திற் கூறாமல் இருக்கவேண்டும். (கூறியிருப்பின் இவர் கூற்றின்படி "நின்றுபயனின்மை" என்னும் குற்றத்திற்கிடனாம்.) இருந்தாலும்

"உணருரு அசத்தெனின் உணராதின்மையின்"

என்றும்,

"யாவையுஞ்சூனியஞ்சத்தெதிராகலின்
சத்தேயறியாதசத்திலது"

என்றும்,

"உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவ"

என்றும்

உள்ள சூத்திரங்களும் இவைபோன்ற விஷயங்களு மமைந்த சூத்திரங்களும் அந்த ஞானபாதத்தில் இல்லாமல் இருக்க வேண்டும். அவ்வாறின்றி நித்தியாநித்திய வஸ்து விவேக முதலியவைகளைப் பற்றிய விஷயம் ஞான பாதத்திலேயே இருப்பதானும் சரியாபாத முதலியவைகளில் இல்லாமையானும் சரியை முதலிய பகிர்முக கர்மங்கள் முதிர்ந்த பிறகே நித்தியா நித்திய வஸ்து விவேகம்,இகபரபோக விராகம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னும் சாதன சதுஷ்டய முண்டாமென்றும், அதின் பிறகே ஞானஞ் சித்திக்குமென்றும் பெற்றாமென்க. சாதனசதுஷ்டயம் சரியையாதிகளுக்கு மேற்பட்டதினா லன்றா

கூர்மபுராணம் ஈசுவரகீதை யோக அத்தியாயம்.

"கருத்திலாமூடர் காட்டமாதிகளிற் காண்பர்"

என்று கூறிற்று? ஈண்டுக் 'கருத்து' என்பது சாதன சதுஷ்டய மன்றா? இதன் பிறகு "சாதன சதுஷ்டயத்தி னளவை யாமளந்து காட்டியதால் நீர் வருந்திய தெற்றிற்கு? அதற்கும் உமது விவர்த்த முடிவுக்கும் ஒரு சம்பந்தமு மில்லையே"என்றார். எந்த உபநிஷத்துச் "சாதன சதுஷ்டயமாகிய நித்தியாநித்திய வஸ்து விவேக முதலியவைகள் முமுட்சுவால் அடையத் தக்கனவே; அதுவே மோட்ச முயற்சி" என்று கூறிற்றோ, அந்த வராகோபநிஷத்தே

2 வது அத்தியாயத்தில்

"தம்முடைய வருணாசிரம தருமத்தினாலும் தபசினாலும் குருவைச் சந்தோஷப் படுத்துவதினாலும் புருஷர்களுக்கு வைராக்கிய முதலிய சாதன சதுஷ்டய முண்டாகின்றது"

என்று சாதன சதுஷ்டய முண்டாவதற்கு ஏது கூறி,

மூன்றவது அத்தியாயத்தில்

"ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரணமாயுமிருக்கிற தெதுவோ,அந்தச் சித் நான் என்று ஆசிரயஞ் செய்"

என்று அப்பியாசமும், பின்னர்க் "கிளிஞ்சலில் வெள்ளி எப்படிக் (அக்கியானத்தினுல்) கற்பிக்கப்பட்டிருக்கிறதோ, அப்படியே, என்னிடத்திலேயே மாயாமயமான ஜகத்தானது மாயையினுலே கற்பிக்கப்பட் டிருக்கிறது"

என்று அனுபவமுங் கூறினமையின், சாதன சதுஷ்டயத்திற்கும், விவர்த்த முடிவுக்கும் சம்பந்தம் உளதெனப் பெறும். ஆகலின் பிரமாணமின்றிக் குளறுபடையாக 'அதற்கும் உமது விவர்த்தமுடிவுக்கும் ஒரு சம்பந்தமு மில்லையே' என்று இப்பூாவபட்சி கூறிய கூற்று வைதிகக் கூற்றிற்கு மாறுபடுதலின், இவருரை அவைதிக வுரையென விடுத்தாமென்க.

"உமது மாயாவாத குரு (வித்தியாரண்யர்) ஞானிகளுக்குச் சகல இச்சையுமுண்டாயிருக்கலாமென்று பஞ்சதசப் பிரகரணத்தில்சொல்லியிருப்பதால், மிச்சாவாதிகளாகிய நும்மதத்தினர் சாதன சதுஷ்டயங்களைத் தழுவ வேண்டுவது அநாவசியகமாம்"

என்றுர். இவ்வாறு அரதத்த ரென்னும் ஓர் வேத பாகிய தாந்திரிகர் பேசி,அத்வைதி யென்பவரால் மறுக்கப்பட்டு வாளா போனுர். அம்மறுப்புப் "பஞ்ச தசப் பிரகரணுபாச விளக்கச் சண்ட மாருதம்" எனனும் பெயரிய நூலின் 23, 24, 25, 26 வது பக்கங்களில் இருத்தலின், அது பற்றி இங்கு யாதும் பேசாதுவிட்டா மென்க. யார் மாயாவாதி? என்றவிஷயமாய் இர்து என்பவர்க்கும், சோ. நாயகருக்கும் வாதம் நடந்து, அதில் சோ. நாயகர் தோல்வி யடைந்து, அதனுல் தாம் மாயாவாதியாய் நின்றமையையும், இது விஷயமாய் ஆரியன் என்பவரும் ம-ா-ா-ஸ்ரீ செந்திநாதையரும் வாதம் புரிந்து செந்திநாதையர் அபஜயப்பட்டு வாளா சென்றமையையும் இவர் அறியாதுபோலப் பகட்டுத்தனஞ் செய்து, பின்னும் அத்வைதிகளை மாயாவாதிக ளென்கிருர். இனியேனும் தயை புரிந்து "துவித சைவரே மாயாவாதிகள்" "துவிதசைவமறுப்பு" இவ்விரண்டு நூல்களையும், "மாயாவாத சைவ சண்டமாருதம்" "அவைதிக சைவ சண்ட மாருதம்" என்ற இரண்டு நூல்களையும் வாசித்துப் பார்த்து, நியாயத்தைக் கடைப்பிடித் தொழுகுவாராக. நியாயத்தைக் கடந்து துன்மார்க்கத்தனமாய்வீண்வாதம்புரியாதிருப்பாராக.

"அத்வைத ஞானத்திற்குச் சாதன சதுஷ்டயம் உபகாரமென்று பெறப்பட்டதில்லை அன்றியும், நித்தியாநித்திய வஸ்து விவேகத்தினுலே அகம் பிரம ஞானம் சித்திக்க வேண்டுமென்றும் பெறப்பட்டதில்லை. பிரமத்தையறிவதற்கும் மனே வியாபார மில்லாமலிருக்கிற மோக்ஷ நிலை யெய்துதற்கும் சாதன சதுஷ்டயம் உபகாரமென்று கூறுவது எம்மதத்துக்கும் ஒப்பே. உமக்குத்தான் அது சொந்தம்போல (கில்டு வியாபாரஞ் செய்யும்) நீர் தடுமாறுவது கேவலம் அசப்பியங் கண்டீர்."

என்றுர். திரிபுடியற்ற அத்வைதஞானத்திற்குத் தான் சாதன சதுஷ்டயம் அத்தியந்த வுபகாரமா யுள்ள தென்று மேலெழுதிய விஷயத்தாலும், பிரமவாதியார் "அத்வைத தூஷண நிக்கிரகம்" 4 ம் பக்கத்திற் காட்டிய

சாதனமாகும்சதுட்டயங்கள்சமைந்தஅத்தன்மையோர்க்கு
நீதியாகஅருமறைதானின்றேயிவர்களறியும்வணம்
பூதமாயும்புவனங்கள்பிறவுமாகியிருந்ததுவும்
ஏதமில்லாதொன்றாயபரமேயென்றேயியம்பினதால். (௭௭)

என்றுள்ள பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடதச் செய்யுளானும் கொள்ளக்கிடத்தலின், அவைதிக துவிததாந்திரிகர்கட்கும் சாதன சதுஷ்டயத்திற்கும் யாதுஞ் சம்பந்த மின்றாமென்க. இன்றாக, சம்பந்த முளதுபோல் பேசுதல் அயலாள் நாயகனைத் தன்னாயகனென் றலமரும் மகளிர் கூற்றிற் கினமென்று விடுக்க. நித்தியாநித்திய வஸ்து விவேகத்தினாற்றான் அகம் பிரமஞானஞ் சித்திக்கு மன்றி, அதற்குக் கீழிட்ட மற்றென்றினாலும் சித்திக்காது. நித்திய வஸ்து விவேகத்தினால் அகம் பிரமஞானம் எவ்வாறு சித்திக்குமெனின், அதத்துவா விருத்தி லட்சணையின்படி (நேதி நேதி வாக்கியத்தால் யதார்த்த விசாரஞ் செய்யுங்கால்,

சூதசங்கிதை நித்தியவஸ்து விசாரம்.

"சுத்தமாய் நிரஞ்சனமா யவிகார மாயொளிர்சிற் சொரூபமேயாய்
உத்தமமாய்ச் சருவசான் றாய்விளங்கு பரமசிவ மொன்றே யென்றும்
எத்தகையோ ரும்புகழும் நித்தியவஸ்து உயர்மறையு மிவ்வாறோதும்
ஒத்தசட மநித்தியமல் லாதுசித்துக் கநித்தியம்வந் துறுதலின்றே." (௨)

கூர்மபுராணம் சாங்கியயோகம்.

"ஆதலால் பிரமமொன்றே நித்தியம்." (௨௫)

என்றபிரமாணப்படி பிரமந்தான் நித்தியமென்றும், அநித்திய வஸ்து விவேகத்தினால்

சூதசங்கிதை அநித்தியவஸ்துவிசாரம்.

" ஆன்மா (பிரமம்) வல்லாத சடவத்துக்களான கடாதிகளாராயின், மான்மாறவுயர்தவத்தீர் அநித்தியமே யாயிருக்கும்." (௩)

" ஒப்போதற்கரிய பிராற்கயல் யாவும் அநித்தியம். (௩௫)

ஷை உணத்தகாப் போருளுரைத்தது.

சொற்ற சத் (சிவம்) தைக்கு அயல்யாவும் சூனிய மாகையினாலும்."(௬)

என்ற பிரமாணப்படி சித்சட பேதமான வுலகு அநித்தியமும் சூனியமுமாமென்றும் பெறப்பட்டன வென்க.

மேற்காட்டிய சூதசங்கிதை செய்யுட்களொன்றில் 'சித்துக் கநித்தியம் வந்துறுதலின்றே'என்றுரைத்திருக்க, நீர் சித்சடபேதமானவுலகு என்றதில் சித்தையும் அசித்தென் றுரைத்தது என்னெனின், ஈண்டுச் சித்தென்றது சீவனைபடியாலும், வெளிப்பொருள்களை நோக்க ஞானேந்திரியங்கள் சித்தானாலும் அவை மனத்தை நோக்கச் சடமும், அம்மனமும் சீவனை நோக்கச் சடமுமா யிருப்பதுபோல, அச்சீவனும் பிரமத்தை நோக்கச் சட மென்பதற்கு யாதோ ராசங்கையு மின்றாதலாலும், இவரினத்தவரான சிவ ஞான சுவாமிகள்: சிவ ஞான சித்தி பதினோராஞ் சூத்திரம் 11 வது செய்யுளில் "இது வசித்தென்றிடி லவனுக்கிவனு மசித்தாமே''என்றதற்குப் "புத்தி தத்துவம் சடமென்றிடின் எனைத்தத்துவங்களை நோக்க உயிர் சித்தேயாயினும்

முதல்வனை நோக்க உயிர் அசித்தேயாம்''என் றுரைகூறுதலானும், இவரது சோ.நாயகர்எழுதிய "ஆபாசஞான நிரோதம்" 51வது பக்கத்தில் சீவர்களைச் சடமென்று கூறுதலானும் சித்சட பேதமான வுலகு என்பதிலுள்ள சித்து வாஸ்தவத்தில் சடமேயா மென்க. "ஒத்த சட மசித்திய மல்லாது சித்துக் கசித்தியம்வந்துறுதலின்றே" என்று சூதசங்கிதை கூறியபடி சீவன் அசித்து அதாவது சடமானபடியினலல்லவா

மைத்திராயண்ணியுபநிஷத் 6 வது பிரபாடகம்.

"பூமியில் புதைத்து வைத்திருந்த இரும்புக் குண்டானது சீக்கிரத்தில் மண்ணுய்ப்போய் மறுபடி நெருப்புக்கும் கருமான் முதலானவர்களுடைய செய்கைக்கும் உபயோக மாகாததுபோல, அந்தக் கரண பிரதி பிம்பனுன சிதாபாசன் (ஜீவன்) அந்தக்கரணத்துடன் நசித்துப்போகிருன்."

என்றும்,

யோகசிகோபநிஷத் 4 ம் அத்தியாயம்.

"கயிற்றிற் பாம்பென்கிற தன்மைபோல்சீவத்துவத்தை யறியவேண்டியது............மண்ணிலே குடமென்கிற பிராந்தியும் கிளிஞ்சலில் வெள்ளியென்கிற இருப்பும் எப்படியோ, அப்படியே பிரமத்தில் ஜீவத்துவமும்"

என்றுங்கூறின? கூறவே,பிரமம் பூரணமாதலால் அதில் சித்சட வுலகு உண்மையா யிருக்க முடியாதென் றுணரப்பட்டு, அப்பால் பிரமத்தின்கண் உலகு கிளிஞ்சலின்கண் வெள்ளிபோல் அல்லது கயிற்றின்கண் அரவு போல் விவர்த்தத் தோற்றமா யிருக்கவேண்டுமென் றாகித் துணரப்படும்; படவே, கிளிஞ்சலைத்தவிர வெள்ளியும், கயிற்றைத்தவிரப் பாம்பும் எவ்வாறின்றே, அவ்வாறே பிரமத்தைத்தவிரச் சித்சட பேதமான வுலகு இல்லையென்று துணிவாகப்பெறப்படும்; படவே, கிளிஞ்சலே வெள்ளியென்றும், கயிறே பாம்பென்றும் கொள்ளுவதுபோல் பிரமமே சித்சடபேதமான வுலகென்று கொள்ளுவதற்கு யாதோ ரிழுக்குமின்று. இன்றாக, சித்சட பேதமான விவர்த்தவுலகில் சித்தாகிய அகத்தைப் பிரமமென் றுரைப்பதில் ஆட்சேபம் என்னும் ? அதிலும் வாச்சியார்த்தமான அகத்தைப் (சீவனை) பிரமமென்னுது, இலக்கியார்த்தமாய்ச் சீவ சாட்சியாயுள்ள அகத்தைப் (கூடஸ்தனை) பிரமமென்பதில் யாது மாட்சேப மின்று மென்க. இன்றாகவே, நித்தியா நித்திய வஸ்து விசாரத்தினுற்றுன் அகம் பிரம ஞான முண்டாமென்று பசுமரத்தாணியாய் நாட்டப் பட்டதென்க. இந்நுட்பங்களைக் கூர்ந்தறியும் விரகில்லாமையால் ' நித்தியாநித்திய வஸ்து விசாரத்தினலே அகம் பிரம ஞானம் சித்திக்க வேண்டு மென்றும் பெறப்பட்ட தில்லை' என்று வரைந்தன ரென்க. இதனுல் பூர்வ பட்சியார்க்கு நித்தியாநித்திய வஸ்து விவேகத்தி னிலக்கணம் விளங்க வில்லையென் றினிது விளங்குகின்றது. இது விஷயமாக "மாயாவாத சைவ சண்டமாருதம்" என்னும் நூலில் "அகம்பிரமவாதம்வேதசம்மதமென்பது" "மகாவாக்கியம்" என்னுமகுடங்களின்கீழும் விரிவாய் அறிக. நாகையில் ஓர் பிரம வாதியால் எழுதப்பட்ட 'அத்வைத தூஷண நிக்கிரக'த்தின் 3ம்பக்கத்தில் "பாலைநிலத்திற் றேற்றுஞ் சலமுழுதும் பாலைநிலமேதவிர வேறில்லை. மூன்றுலகமும் சகலப்பிரபஞ்சமும் விசாரணையினுல் சின்மாத்திரந்தானே" என் றுள்ள மகோபநிஷத் வாக்கியத்தை இவர் நன்கு கவனித்திருந்தால் ' அகம் பிரம ஞானம் சித்திக்க வேண்டு மென்றும் பெறப்பட்டதில்லை' என்று ஒருபோதும் கூறுர் ! கூறுர்! !

சிவஞானசுவாமிகள்: சிவஞானபோதம் 11 ம் சூத்திரவுரையில் "பரமுத்தியில் உயிர் சிவாநந்தானுபூதியை விடயித்தலுண்டு"? என்றும்,

"பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவமாதல் செல்லாமையானும்"

என்றும், இவரினத்தவரி லொருவரான உமாபதி சிவாசாரியார்

உண்மை விளக்கத்தில்

"முத்திதனில்மூன் றுமுதலுமொழியக்கேள்
சுத்தவநுபோகத்தைத்துய்த்தலணு - மெத்தவே
யின்பங்கொடுத்தலிறையித்தைவிளைவித்தல்மல
மன்புடனேகண்டுகொளப்பா."

என்றுங் கூறி, பரமுத்தியில் மனோவியாபார முண்டென்று ஒப்பினார்கள். இப்பூர்வபட்சியார், தம்மத சித்தாந்தம் மோட்சத்தில் மனோ வியாபார முண்டென் றொப்பியதை யறியாது 'மனோ வியாபார மில்லாம லிருக்கிற மோட்ச நிலை யெய்துவதற்கும் சாதன சதுஷ்டயம் உபகாரமென்று கூறுவது எம்மதத்திற்கும் ஒப்பே' என்றுரைத்தல் தெரியாமையாம். சைவ விசிட்டாத்வைதியான நீலகண்டரும், வைஷ்ணவ விசிட்டாத்வைதியான இராமாநுஜரும், துவைதியான மத்துவரும், ஏனையரும் பரமுத்தியில் பேதமே (மனோவியாபாரமே) ஒப்பினாராகலின், 'மனோ வியாபார மில்லாம லிருக்கிற மோட்ச நிலை எம்மதத்துக்கும் ஒப்பே' என்றது அதிலும் மிகு தெரியாமையாம். மேற்காட்டிய நியாயங்களால் மனோ வியாபார மில்லாம லிருக்கிற மோட்சநிலையை யொப்பினவர்கள் அத்வைதிகளே யாதலின், அவர்களுக்கே சாதன சதுஷ்டயம் உபகாரமா யிருக்கின்றதென்றறிக. தம் அவைதிக தாந்திரிக சித்தாந்தமும், வைதிக அத்வைத சித்தாந்தமும், ஏனைய சித்தாந்தமு மறியாது பேய்க்கோட் பட்டான் பேசுவது போன்று 'மனோ வியாபார மில்லாம லிருக்கிற மோட்சநிலை எம்மத்துக்கும் ஒப்பே' என்று கூறிய பூர்வபட்சியாரே கில்டு வியாபாரஞ் செய்கிறவரென்றும், மனோ வியாபார முள்ள முத்தி பந்தத்தோடு கூடியதாயும் மாறுந் தன்மை யுள்ளதாயு மிருத்தலின் அது பரமுத்தி யாகாதென்றும், ஏனையர்க்குச் சாதன சதுஷ்டயம் சொந்தமாகாதென்றும், அது அத்வைதிகளுக்கே உரித்தாய் நிற்றலின் அவர்களே சரியான தங்க வியாபாரிக ளென றும் விளக்கமாய் நின்றமை காண்க.

ஷை அத்வைத தூஷண நிக்கிரகம் 4 ம் பக்கத்தில் "சரியை முதலியவற்றால் சாலோக முதலிய பதப் பிராப்திகளே உள வென்பதற்கும், ஷை பதப் பிராப்திகள் சத்தல்ல வென்பதற்கும் பிரமாணம்" என் றெழுதி, சதுர்த்தச வித்தைகளி னின்றும் பொருத்தமான பிரமாணங்கள் காட்டி யிருப்பதை நன்குணரும் ஊகமின்றி, "சூத சங்கிதை முத்தி நிலை: 'சரியை நற்கிரியை யோகந் தழுவி நன் கனுட்டித்தோர்கள், பிரியமா ரிம்மூன்றும் பல்பேதமாய் விரியாநிற்கும், அரிய நம் மருளால் வைய மாக்கிடு மயனைப் போற்றற், குரியவ ரடையு மன்னுன் சாலோக முதலோர் மூன்றால்' என்று பெறப்பட்டதில் சரியையாதிகளையும் சாலோகமாதிகளையும் சாமான்னியமாய்க் கூறி யிருப்ப தென்னையோ?" என்று அத்வைதியார் கடாவியதாக வரைந்து, அதற்குப் பதில்

"இந்த வாக்கியம் விஷ்ணுவைப் பார்த்துச் சிவனு ரருளிச்செய்தது. இதில் அயனைப் பிரஸ்தாபித்து 'அன்னுன் சாலோக முதலோர் மூன்றால்' என்று கூறினமையால், இதிற் பிரஸ்தாபித்த சாலோகமாதிகள் சிவ சம்பந்த முடையன வல்ல வாம். இதற்கு மேல் அந்த விஷ்ணுவை நோக்கி 'முன்னு நின்னிடைச் சாலோக முதலிய பத மோர் மூன்றால், இன்னவை முன்னவைக்கு மேற்ற மென்றறிதிமாலே' என்று கூறினர் சிவபரஞ்சுடர். இதற்குமேல், உருத்திர மூர்த்தியைப் பிரஸ்தாபித்து 'சாய்வற வடையு மன்னுன் சாலோக முதலோர் மூன்று, லேயமற் றிவைதா முன்ன ரியம்பிய தினும்விசேடம்' என்று கூறி அதனினும் விசேடமான சாரூப முத்தி சதாசிவ மூர்த்தியினதென்பது தோன்ற 'நாடுறு சதாசிவப்பேர் நாட்டுசொரூபமுத்தி, நீடுறுமெவற்றினுக்கு நிரம்பிய விசேடமாகும்' என்று முடிவுரைத்தாராயினும், இவையெல்லாம் பூர்வ பட்சமேயாம். இந்த முத்திகளில் சாயுச்சியஞ் சேர்ந்து முடிவு கட்டிய தின்று" என்று பூர்வபக்ஷியார் கூறியதற்குப் பதில் வருமாறு:—

இவ்வளவு எழுதியும் இவ ரெழுதியவற்றில் பிரமாவின் சாலோக முதலிய மூன்றும் சிவசம்பந்த மல்லவென்றும், பிரமாவின் சாலோக முதலியவற்றைப் பார்க்கிலும் விஷ்ணுவினுடைய சாலோக முதலியன வுயர் வுடைய வென்றும், அவற்றைப் பார்க்கிலும் உருத்திர மூர்த்தியினது சாலோக முதலிய வுயர் வென்றும், அதினும் சதா சிவ மூர்த்தியினது சாரூபம் உயர்வென்றும் பெறப்பட்டனவே யன்றி, அவை பதப் பிராப்தி யன்றென்றும், சத்தென்றும் பெறப்பட வில்லையே! "எழுதினவன் எட்டைக் கெடுத்தான், பாடினவன் பாட்டைக் கெடுத்தான்" என்ற வாறு ஏற்புடைத் தாகா விஷயங்களை யெழுதி அலமருகின்றூர் பாவம்! 'இவை யெல்லாம் பூர்வபட்சமேயாம்' என் றெழுதியதற்குக் காரணம் புலப்பட வில்லை. பூர்வ பட்சத்தைக் கூறுவானேன்? பூர்வ பட்ச மென்றமையால் சதா சிவ சாரூப முத்தியும் சத்தல்ல வென்று பெறப்பட்டது. இவ்வாறு கூறிய இவர்: 'இந்த முத்திகளில் சாயுச்சியத்தைச் சேர்த்து முடிவுகட்டிய தின்று' என்றது ஏன்? சாயுச்சியத்தைச் சேர்த்துச் சொன்னதில் அச்சாயுச்சிய மாத்திரம் சத்தாயும் பதமுத்தி யல்லாததாயு மிருக்குமே யன்றி, ஏனையவை யசத்தாயும் பத முத்தியாயு மிருக்கு மென்பதற்குத் தடை யொன்று மின்றே. சரியை முதலியவற்றால் அடையும் சதா சிவ சாரூப முத்தியும் பத முத்தி யென்றும் சத்தல்லவென்றும் அந்தச் சூத சங்கிதை: முத்திநிலை உரைத்த அத்தியாயத்தில் 22, 23, 24, 25, 26 வது செய்யுட்களில் பிரமதேவன் சாலோக முதல் சதாசிவமூர்த்தியினது சாரூபம் வரைக்கும் கூறி,

உஎ-வது செய்யுளில்

"புண்ணியந்தீர்ந்தபின்பு பூமியின்விரைந்துமேன்மை
நண்ணியகுலத்துத்தோற்ற நண்ணுவர்"

என்றும்,

௩௨ வது செய்யுளில்

"திரிசியமாம் பவஞ்சம் தேய்ந்து சொப்பனம் போற்றேன்ற
வுரிய வெம்பால் விழித்தோ ெனொருவனே சீவன் முத்தன்."

என்றும் கூறுதலினால், பத முத்தி மீளு முத்தி யெனவும், சொப்பனம்போன்ற அசத்தெனவும்விளங்கநின்றன. அதனால் இப் பூர்வ பட்சியார் எடுத்த விஷயத்திற்குப் பொருத்தமான விடை யிறுக்கா திரிந்து போயினரென்பது திண்ணமாயிற் றென்க. இம் மாயாவாதிகள்கூறும் சாயுச்சியமுத்தி அதாவது பரமுத்தியானது மேல் யாம்காட்டிய சிவஞானபோதச் சிற்றுரை உண்மைவிளக்கம் என்னு மிந்நூல்களின் அபிப்பிராயப்படி மாயா சம்பந்தமாயும்; காண்பான், காட்சி, காணும் பொருள் என்னுந் திரிபுடியோடு கூடியதாயு மிருத்தலினாலும்,

சூதசங்கிதை சமாதிவிதி ௩ வது செய்யுளில்

"பாவனை துவிதங்கொள்ளிற் பவமொழியாது நாளும்"

என்று கூறுதலினாலும் அது பத முத்தி யென்றும் அசத் தானதென்று மறிக. பின்னை, சாயுச்சிய முத்தியென்பது யாதெனில்,

ஷ முத்திநிலை ௩0 வது செய்யுளில்

"இலகு நம்மொளிப் பிழம்போடிரண்டறக் கலக்குமுத்தித்
திலகமாமிதனைச் சாயுச்சியமெனச்சொலும் வேதாந்தம்."

என்றும்,

ஷ ௩௧ வது செய்யுளில்

"இத்தகு முத்திவேறு யாம் வேறென்றெண்ணங் கொள்ளேல்
உத்தமமறை யபேதமுரைத்திடு மஃதேயுண்மை."

என்றும், அதற்கடுத்த

முத்தியுறு முபாயமுரைத்த வத்தியாயம் ச வது செய்யுளில்

"அஞ்ஞானம், செத்திடு மஃதிறக்கத் தீர்தருந் துவிதபாவம்
உத்தமமிகுமத்தீர்விலொழிதரும் பிராந்தியாவும்."

என்றும்,

ஷ ௬ வது செய்யுளில்

"பழுதையென்றுணரச் சர்ப்பப் பிராந்திபோம் பரிசுபோல
வழுவறுஆன்ம (பிரம) ஞானம் வாய்த்திடப் பாசமாறும்."

என்றும்,

ஷ எ வது செய்யுளில்

"தண்டத்தை நோக்கி யீது சர்ப்பமென்றிபேிராந்தி
தண்டஞானத்தாற் றீரிற்றகவிதுவென்றவொன்றே
தண்டமானதுபோலாரோபிதமானசமுசாரிக்குச்
தண்டழை யுணர்ச்சியாலே தத்துவம் பிரமமாகும்."

என்றுங் கூறிய அபேத அத்துவித நிலையே சாயுச்சியமென்றுணர்க. இதனுல் "சொல்லா லொன்று பொருளா னிரண்டு" என்று கூறுவார் கூற்றுச் சுருதியாதி பல மில்லா அப்பிரமாணக் கூற்றுயிற்றென்க.

"சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்று சாஸ்திரங்களிற் கூறப்படும் வழிபாடுகளும், அவற்று லடையத்தக்கனவாகிய சாலோக - சாமீப - சாரூப்பிய - சாயுச்சியங்களாகிய முத்திகளும் இந்தத் தேவர்களை யெல்லாங் கடந்த பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுளைச் சேர்ந்தனவாம். இவை யொன்றுக்கொன்று சாதனமாய் நிலவும் பெற்றியனவாகையால், இவ்வெல்லாப் பேறுகளும் முத்தி யென்றே கொண்டாடப்படும். இவற்றுள் ஞானத்தாலெய்தற் பாலதாகிய சாயுச்சியமே முடிந்த முத்தியாம்."

என்ருர் பூர்வபக்ஷியார். சரியைகிரியை முதலிய வழிபாடுகளும் அவற்று லடையத்தக்க சாலோக முதலிய பேறுகளும் தனிமுதற் கடவுளைச் சேர்ந்தன வென்பதைப் பற்றியும், இவை யொன்றுக் கொன்று சாதனமாய் நிலவும் பெற்றியன வென்பதைப் பற்றியும் எமக் கேதும் ஆசங்கை யின்று. ஆனுல் 'இவ் வெல்லாப் பேறுகளும் முத்தியென்றே கொண்டாடப்படும்' என்பது மாத்திரம் ஆக்ஷேபத்தினும் ஆக்ஷேபமாம். எல்லாப் பேறுகளும் முத்தியானுல் சாயுச்சியத்திற்கும் மற்றைய சாலோக முதலியவற்றிற்கும் வேறுபாடென்னை ? சாலோக முதலிய மூன்றையும் மீளு முத்தி யெனவும், சாயுச்சியத்தை மீளா முத்தி யெனவும் அடை கொடுத்துக் கூறினுல் குற்ற மின்று. "ஆனை யருமரசு" என்பது போல் சிவ சாலோக முதலிய மூன்றையும் முத்தியென் றுரைக்கின்ருமெனின், அப்போது பிரமனது சாலோக முதலியவற்றையும் முத்தியென்றேகொண்டாடவேண்டும். ஏன் கொண்டாடவேண்டுமெனின், சிவ சாலோகம் எவ்வாறு ஞானத்திற்குச் சாதனமாய் இருக்கிறதோ, அவ்வாறே பிரமனது சாலோகாதிகளு மிருத்தலினுலென்க. 'ஞானத்தா லெய்தற் பாலதாகிய சாயுச்சியமே முடிந்த முத்தியாம்' என்று பூர்வபட்சியார் கூறியதினுலேயே அஞ்ஞானத்தா லெய்தற் பாலது சாலோகம், சாமீபம், சாரூபம் என்று பொருள் படுகின்ற தென்க. படவே, அஞ்ஞானத்தா லெய்தற் பாலனவாகிய சாலோக முதலியவற்றைப் பூர்வபட்சியார் 'முத்தி யென்றே கொண்டாடப்படும்' என்றது "தனக்கழகு மொட்டை பிறர்க்கழகு கூந்தல்" என்பதற் கினமாய் நிற்கின்றதென்க.

"இருள்சேரிருவினையுஞ்சேராவிறைவன்
பொருள்சேர்புகழ்புரிந்தார்மாட்டு."

என்றுள்ள திருக்குறளின்படி இருளின் (அஞ்ஞானத்தின்) காரிய மாகிய இரு வினைகளில் ஒன்றான நல் வினையால் வரும் சாலோக முதலியன: பூர்வ பட்சியார் கூற்றின்படி அஞ்ஞானத்தினால் வரற்பாலனவென்றும்,

"தொலையுநல்வினைப்பயன்றொலைந்தபோதிலே,
தலையது கீழுறவிழுகைதப்புமோ."

என்றுள்ள பிரம கீதை முண்டகோபநிடத வாக்கியத்தின் படி, புண்ணியந் தீர்ந்தபோது, ஆண்டுள்ளார் மீளுந்தன்மையை யுடையரென்றும், திரிசியமா யிருத்தலின் "உணருரு அசத்து" என்றுள்ள சிவ ஞான போத சூத்திரத்தின்படி அப் பதவி அசத்தான தென்றும் நன் குணரப்படுதலின், அச்சாலோக முதலியன அஞ்ஞானத்தால் வரற்பாலன வென்பதற்கும், மீளும் நெறி யென்பதற்கும் யாதோரிழுக்கு மின்றுமென்க.

இன்னும் பூர்வபக்ஷியார் கூற்று வருமாறு:—

"சங்கரசங்கிதை உபதேசகாண்டம்.

சர்யாக்ரியாசயோகச்ச ஜ்ஞாநஞ்சேதிசதுர்வீதம்
ஆத்மநாம்பந்தமுக்த்யர்த்தம்கல்பிதாநிசிவேநவை.

(1) இந்த வசனத்தால் பிராணிகள் பந்தத்தினின்றும் விடுபடுவதாகிய மோட்சமெய்துவதற்காக ஸ்ரீபரமேசுவரனால் சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்னும் நான்கு பாதங்கள் உண்டாக்கப் பட்டன வென்று பெறப்படுகிறது.

(2) அடுத்த வாக்கியம் சரியா பாதாநுஷ்டானத்தினால் சிவபிரானது சாலோக்கியத்தை யடைந்து, நாளடைவில் சாயுஜ்யத்தை யடைகிறார்களென்றும், ஆகையால் சரியாபாதமும் முத்தியைக் கொடுக்க லுற்றதுதானென்றும் தெரிவிக்கின்றது.

(3) அடுத்தவாக்கியம் கிரியா பாதத்தை யநுஷ்டிப்பதனால் சிவ பிரானுடைய ஸாமீப்யத்தை யடைந்து பிறகு ஞானத்தினாலேயே மோட்சமடைகிறார்களென்று போதிக்கின்றது.

(4) அடுத்தவாக்கியம் யோக பாதத்திற்கூறிய முறைப்படி யோகத்தை யநுஷ்டிப்பவன் சாரூப்யத்தை யடைந்து பிறகு சாயுச்சியத்தை யடைகிறான் என்று அறிவிக்கின்றது.

(5) அடுத்தவாக்கியம் ஞான பாதத்திற் கூறிய நெறியின்படி ஞானத்தை யாசரிப்பவனோ வென்றால், அதன் மகிமையால் கொஞ்சமேனுந் தாமதமின்றி ஸாயுஜ்யமடைகிறான் என்று துணிந்துரைக்கின்றது."

என்று வரைந்து, பின்னர்

"இவற்றைப் பரியாலோசிக்குங்கால் சாலோக்கியத்தை யடைந்த புருஷன் அங்கிருந்து சாமீப்யத்தையும், சாமீப்யத்தை யடைந்த புருஷன் அங்கிருந்து சாரூப்யத்தையும், சாரூப்யத்தை யடைந்த புருஷன் அங்கிருந்து சாயுஜ்யத்தையும் அடைவதாக ஏற்படுகின்றது. சிவ சாலோக்ய வாசி முதலினோர் தமது பேறு களி னின்றும் பெயர்ந்து பூலோகத்துக்கு வருவ தில்லை. மேலுக்கு மேல் அப்படியே யுயர்ந்து சாயுஜ்ய மெய்தி இன்புறுவர் கண்டீர். பிரமன்முதலிய கிருத்திய கர்த்தர்களது சாலோகம் பெற்றவர் களே புண்ணியந் தீர்ந்தபிறகு பூலோகப் பிரவேசஞ் செய்து தவ மாற்றி முத்திக்கு வழிதேடி முன்னுக்கு வருவர்."

என்றார். மேல் காட்டிய 1, 2, 3, 4, 5 எண்ணுள்ள வசனங் கள் சங்கர சங்கிதை யுபதேச காண்டம் 89-ம் அத்தியாயம் 31 முதல் 35 வரைக்கு முள்ளவை. அவ் வத்தியாயத்தில் சரியை முதலியன ஒன்றிற் கொன்றுயர்ந்தன வென்று கூறி யிருக்கின்ற னவே யன்றி இவர் கூறியதுபோல் கூறியிருக்க வில்லை யென்பது அவ்வசனங்களாலே விளங்குகின்றது. மேலும்

அவ்வத்தியாயம் 36 வது சுலோகத்தில்

"ஆகையால் மோட்சம் பெறுவது ஞானத்தினால் தான்."

என்று கூறியதனால், ஏனைய சிவ சாலோக முதலியன அஞ் ஞானத்தினால் வரற்பாலன வென்றும், அஞ்ஞானத்தினால் வரற் பாலன அழிவுபாடுடையன வென்றும், புண்ணியந் தீர்ந்த போது ஆண்டுள்ள சாலோக்ய வாசி முதலினோர் மீண்டு விடவேண்டும் என்றும் பெறப்படுஞ் சித்தாந்தத்தோடும்,

திருவாசகம் திருப்பள்ளியெழுச்சியில்

"புவனியிற் போய்ப் பிறவாமையினாள் நாம் போக்குகின்றோம் அவமே இந்தப்பூமி, சிவனுய்யக் கொள்கின்றவாறென்று நோக்கி."

என்றுள்ள விஷயத்தோடும்; மண்ணுலகில் காமியமாகச் சரி யையை யனுஷ்டித்தவர் சாலோக்கியத்தையும், காமியமாகக் கிரி யையை யனுஷ்டித்தவர் சாமீப்யத்தையும்,காமியமாக யோகத்தை யனுஷ்டித்தவர் சாரூப்யத்தையும், ஞான மாயினோர் சாயுச்சியத் தையு மடைவார்களென்று கூறுகிற சாஸ்திரங்களோடும் சிவ சாலோக்கியவாசி முதலினோர் தம் பேறுகளினின்றும் பெயர்ந்து பூலோகத்துக்கு வருவதில்லை என் றிவர் கூறியது மாறுமென்பது வெள்ளிடை மலையாம். இன்னும், 'பிரமன் முதலிய கிருத்திய கர்த்தர்களது சாலோகம் பெற்றவர்களே புண்ணியந் தீர்ந்தபிறகு பூலோகப் பிரவேசஞ் செய்து தவ மியற்றி முத்திக்கு வழி தேடி முன்னுக்கு வருவர்' என் றிவர் கூறியதனால், சிவனை வழிபடும் சரியையாளர் மாத்திரம் பூலோகத்தில் இருக்கவேண்டுமே யன்றி, கிரியையாளர் யோகிகள் ஞானிகள் இருத்தல் கூடாதென் றாகின்

றது. ஏன் இருத்தல் கூடாதென்னின், 'சிவசாலோக்யவாசி முதலி ேனார் தமது பேறுகளினின்றும் பெயர்ந்து பூலோகத்துக்கு வருவ தில்லை' என்று இந்தப் பூர்வ பட்சியார் கூறியதா லென்க. ஆகவே, இவ் வுலகத்தில் சிவனை வழிபடும் சரியையாளர் மாத்திர மிருக்க வேண்டுமென்றி; கிரியாவான்களும், யோகவான்களும், ஞானிகளும் இருந்தார்களென்றுவது இருக்கின்றார்களென்றுவது சொல்லுதல் தவறாய் முடிகின்ற தென்க. தவறாய் முடிகின்ற தோடு கிரியா பாதம் யோகபாதம் ஞானபாதம் என்னும் நூல்கள் இப்பூலோகத்தி லுள்ள சரியை யாளர்களுக்குப் பய னற்ற தாய் முடிகின்றன. ஏன் பயனற்றதாய் முடிகின்ற தென்னின், சரியையாளர் சாலோக் யத்தை யடைந்து பின்னர் அவ்விடத்திலேயே இந்தப் பூர்வபட்சி யார் கூற்றின் படி கிரியை முதலியவற்றை யனுஷ்டிக்க வேண்டி யிருப்பதா லென்க. இன்னும் கிரியாபாதத்திற் கூறும் தீட்சை, பஞ்சசுத்தி,அர்ச்சனை முதலியவைகளும்; யோகபாதத்திற் கூறும் இயம, நியம, ரேசக, பூரக, ஆராதார முதலியவைகளும், ஞான பாதத்திற் கூறும் சிவான்ம பரமான்ம விவேக முதலியவைகளும் நின்று பயனின்மையாய் முடிகின்றன. நின்று பயனின்மை யாக வே, பூர்வபட்சியார் தம்மதத்தில் கிரியாவான்களும் யோகவான்க ளும் ஞானவான்களும் இருந்ததாக, இருக்கின்றதாக, இருப்ப தாக மறந்துஞ் சொல்லாராக்கும். இவர் சரியையை யனுஷ்டித்த வன் சாலோகம் எய்தி மீண்டும் பூலோகத்திற்கு வாராமல் அவ் விடத்தினின்றே கிரியையை யனுஷ்டித்துச் சாமீப்யத்தையும், முறையே ஞானத்தையும் அடைவான் என்கிறார். இவர் பிர மாணமாகக் கொண்டுள்ள நூற்களோ,

சிவஞானபோதம் அ-ம்சூத்திரம்முதலதிகரணம்உதாரணவெண்பா.

" தவஞ் செய்தாரென்றுந் தவலோகஞ் சார்ந்து பவஞ் செய்து பற்ற றுப்பாராகத் தவஞ்செய்த நற் சார்பில் வந்துதித்து."

இதற்குச்சிவஞானசுவாமிகள் செய்தவுரை.

" சரியை முதலியவற்றைச் செய்தோர் அவ்வத் தவப்பயன்களைப் பயப் பிக்கும் சாலோகாதி பதங்களை யொருதலையாக நண்ணி யாண்டுளவாகிய வின்பங்களை யனுபவித்து முன் னுடம்பிறக்கு நாள் அடுத்த வினை காட்டுங் கதி நிமித்தம் பற்றி யெழுந்த அவாவினை மீள நிலத்தின்கண் பிறந்தனுப வித்து நீக்கிற் கோடற் பொருட்டு மீளத் தவஞ் செய்தற் குரிய வுயர்ந்த குலத்தின் கண் வந்து தோன்றி."

என்றும்,

சிவஞானசித்தி அ-ம் சூத்திரம் 25-வது செய்யுளில்

" யோகக் கிரியா சரியையினி னின்றோர், ஊனமிலா முத்தி பதம் பெற்றுலகமெல்லாமொடுங்கும் போதரன் முனிலா தொழியினுற்பவித்து."

என்றும்,

திருக்களிற்றுப்படியார் 22-ம் செய்யுளின் அவதாரிகையில்

"இனிச் சரியை கிரியைகளிலே நின்று சாதித்தவர்க்குப் பிற்பட்ட சனனத்தில் இப்படி முதிர்ந்த வல்வினை கூடாமல் யோகத்திற் சுதிகாரி யாவானுக்கு."

என்றும் இவர் கூற்றுச்கு மாருகக் கூறுகின்றன. பூர்வ பக்ஷியார்க் குரிமையாயுள்ள இந்நூற் பிரமாணங்களால் பூலோகத்தில் கிரியை, யோகம், ஞானம் அனுஷ்டித்த லுண்டெனவும், ஞான மல்லாத மற்றைய மூன்றினு லடையும் முத்தி பத முத்தி யெனவும், சாலோக முதலியவற்றை யடைந்த வர்கள் மீண்டும் பூமியின்கண் வந்து பிறப்பார்க ளெனவும் பெறப்படுதலி னுல், இப்பூர்வ பக்ஷியார்க்குத் தம்மத சித்தாந்தமே தெரியாதென்பது கரத லாமலகம் போல் விளங்கிய தென்க.

"சிவோபாசனை வேதத்திற் சிறக்க வுபதேசிக்கப் படினும் சுருங்கச் சொல்லும் அவ்வேதத்தினும் விளங்கச் சொல்லும் சிவாகமப்படிக் கோடலே அமைவுடைத்தாம். இதனை அரதத்த யோகீந்திரர்

திகழ்தவளநீறுமரன்கண்மணியுமைந்தெழுத்துந்தேவர்போற்று
மிகுபரமசிவலிங்கோபாசனையும்வைதிகத்தில்விதித்தற்ருலு
மகமகிழுமாகமத்தின்படிமேலாந்தீக்கையடைந்தார்சட்கன்றிப்
புகலருமானதக்கிரியாபாவனையுஞ்சிவனருளும்பொருந்திடாதே.

என்று கூறிய வாய்மை யுபதேசமும் நிறுத்துமென் றறியக் கடவீர்"

என்ருர். திருடி தலையாரி வீட்டிற் புகுந்தாற்போல அரதத்தரையும், அவர் கூறியதாக வோர்பாடலையும் தமக்குதவியாகச் நொண்டுவந்தார். அவ் வரதத்தரோ வேதத்தால்முத்தியென்றும், ஆகமத்தில் வேதத்திற்கு விரோத மாகாத பாகமே பிரமாணமென்றும் கொண்டவர். அப்படிப்பட்டஅவர் இவ ர்க்குதவியாத லோர்போது மின்ருமென்க. முன்னொருகால் ஓர் தாந்திரிகர், அரதத்தரைப்பற்றி யிப்பூர்வபட்சியைப்போல் பேசி மறுக்கப்பட்டார். அது பிரமவித்தை 8 ம் புத்தகம் 16-ம் எண் பத்திரிகையில் வந்திருக்கின்றது. அதனை மறுக்காது "கொடிறும் பேதையும் கொண்டது விடா" என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியவண்ணம் மறுக்கப்பட்ட விஷயத்தையே மீண்டும் பேசல் அரைத்த மாவை அரைத்ததற் கினமாமென்க.

ஷை அரதந்தர் வாக்கியம் வருமாறு:—

சதுர்வேததாற்பரிய சங்கிரகமென்னுஞ் சுருதிஸூக்திமாலையில்

வெதெஷ்வா தத் ந்யாயிஷ்வாவிவாயடுதம்தெருஷ

என்ற இரண்டாம்சுலோகத்தில் வேதத்னத யனுசரித்த தந்திரங்களே பிரமாணமென்று நிரூபித்தார். மூன்ரும்சுலோகத்தில் வேதமானதுமந்திரம் அர்த்தவாதம் விதியென்பவற்ருற் பொருள்விளங்குவதாய்த் தானே சுவதப் பிரமாணமாவதன்றி, இதரப் பிரமாணங்களை யெவ்விதத்தும் எதிர்பார்க் கிறதில்லையென்று கூறியருளினுர்.

எழுபதுமுதல் எண்பத்திரண்டாம் சுலோகம்வரை யக்ஞாராத்தியனு யுள்ளவன் ஸ்ரீ பரமேசுவரனேயென் றினிது பிரகாசிப்பித்து, அக்கர்மமே சர்வசிலாக்கியமென்று நாட்டினுர்.

எண்பத்தொன்பதாவது சுலோகத்தில் பதி, பசு, பாச பதார்த்தத் திர யங்கள் கூறப்படுதலால், ஆண்டு ஆகமாபேக்ஷை வேண்டுவ தில்லையென்று சூசிப்பித்தார்.

வெதஃஸ்வயஂஹவ தூவா தவவாப்ஸணீதிஃ ஸவஂப்ஸாணஂ விஹாய த்ருணாதிஷொகஃ ॥ ததஸ்வபவக்ஷ்ருமாணநஸிஂத தாா தஂஹ்ய ஂந்ருஸ்வப்ஸாணஂவிரொயிநிவெநவாகெ்யவெநஃப்ஸாண ஂதிஸஂஜிரஂாணவனவஷிஸஂதவாமஂஂமெவெதிஜநஃப்ஸாணஃ ॥

என்றதனால்வேதமென்பது அபௌருஷேயமாயினும் உம்மாற்செய்யப் பட்டதாயினும் சிறிதும் அப்பிரமாணமாகாது. எல்லாம் பிரமாணமென்றே யுலக மொப்புக் கொண்டது. மற்றது ஆக்கியோன் குண வேறுபாட்டுக்கு ஏற்பத் தாரதம்மியப் பட்டு, வேத வாக்கிய விரோத மில்வழிப் பிரமாண மென்று நிரூபித்தார். வேதம் பிரமாணமென்று எவன் துணிந்து கூறு வானோ, அவனே யுமது ஆகமத்தைப் பிரமாணமென்று அறிவான்.

நூற்றுப்பத்தாவது சுலோகத்தில்

ஜ்ஞாநஂயயாஹவதி

என் றாரம்பித்துக் கற்பசூத்திரங்கள் கர்ம்ம காண்டத்துக்கு வழிநூலா வதுபோலச் சைவ தந்திரங்களும் வேதத்துக்கு வழிநூலென்றார். அதுவும் அதிகாரிகட் கேற்றவாறுமென்றார்.

நூற்றுப்பதினோராவது சுலோகத்தில்

ஸ்வாநஸ்வவதிஂ

என்று தொடங்கி உபநயனாதி வைதிக ஸம்ஸ்காரமே அத்வ சுத்தி யாகுமென்றார்.

நூற்றுப்பன்னிரண்டாவது சுலோகத்தில் ரிஷிகளாலே செய்யப்பட்ட கற்பசூத்திரங்களைப்போல் உமதுஆகமங்களும் பிரமாணமென்றும் அதுசிஷ் டர்கள் கொள்ளாமையால் குற்ற முள்ளதெனக் கூறலாகா தென்றுங் கூறி னார்.

நூற்றுப் பதின்மூன்றாவது சுலோகத்தில் ரிஷிகள் ஒவ்வொரு மந்திர த்தையுந் தனித்தனியே கண்டதுபோல, நீர் எல்லா மந்திரங்களையும் ஒரு ங்கே கண்டவராதலால், நீர் மகரிஷி யென்றார்.

நூற்றுப் பதினான்காவது சுலோகத்தில்

வெதொவவ்ஸ்ஹண

என்று தொடங்கி வேதோபப் பிரம்மணங்களாகிற புராண வசன கோ டிகளால் உமது பூஜையின் அளவிலாப் பெருமை விளக்கப்பட்டிருக்க, அப் புராணங்களால் உபப் பிரம்மணஞ் செய்யப்பட்ட வேதத்தை மூலமாகக் கொண்ட தந்திரங்களாற் பயனேது ? பெருங்காற்று அடிக்குங்கால் விளக் கை யணைக்க வாயால் ஊதப்படுங் காற்றைத் தேடுவானேன் என்றார்.

இதனால் இப் பூர்வ பட்சியாரது மாறுபாடு தெளிவு பெற விளங்க வில்லையா? இத்தகைய விவர் குணப்படுவ துமுண்டோ? இவர்கொண்டுவந்த

தப்புப்பாடல்(அவ்வரதத்தருடைய பாடலென்றாலும் மற்று எவர்பாடலென்றாலும்) சதுர் தச வித்தைகட் குட்பட்ட சுருதி ஸ்மிருதி புராணேதிகாசங்களுக்கு விரோதமாயிருத்தலின் அது பிரமாணமாகாதென்று விடுக்க. இவர் இன்ன நூல்களைப் பிரமாணமாகக்கொண்டு வாதஞ் செய்யவேண்டுமென்ற முறைமை தெரியாதவராகலின், இவரது வாதநெறி முறைமையினின்றும் விலகிய வாதநெறியாமென்று கூறி மறுக்க.

"ஆயின் நுஞ்சைவப்பெரியோர் சரியைக்கழற்றி, கிரியைக்கழற்றி முதலியபேர்களிட்டு அவைகளைத் தூஷித்திடல் யாங்ஙனம்?" என்று அத்வைதியார் வினவியதாக வெழுதிஅதற்குவிடை "சரிதாதிநான்கினுக்குஞ் சாலோகமாதி வருமா றெமக் களித்த வள்ளல்' என்று அப் பெரியோரே கூறினராகலானும், விரும்புஞ்சரியைமுதல் மெய்ஞ்ஞானநான்கு மரும்புமலர்காய்கனி போலன்றோ பராபரமே என்று தாயுமானச் செல்வனர் கூறினாரா கலானும் சரியையாதிகள் தூஷிக்கப்பட்டவாறில்லை கண்டீர்"

என்றார். சரியையாதிகளைத் தூஷித்ததாக அத்வைத தூஷணநிக்கிரகமென்னும் நூலி லாகிலும், வேறெந்த வேதாந்த சாஸ்திரங்களி லாகிலும் காட்டமுடியுமா? முடியாதாக, இவர் மற்றோரிடத்தில் "சரியையாதிகளைத் தூஷிக்க வெழுந்த நீரும் நும்மினத்தவரும் எப்படிப் பிழைக்கப் போகிறீர்களோ?" என்றெழுதியது என்னம்! ஆனல் சரியையாதிகள் ஞானத்திற்குக் கீழாயினவென்றும், ஞானத்தையடைவதற்குச் சாதனமா யுள்ளவையென்றும் ஷ நூல்கள் கூறுகின்றன. அவ்வாறு கூறுவதினுல் அது தூஷித்ததாக முடியுமா? முடியுமென்னின், அப்போது

பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்.

சிவனேயுள்ளான்பிறிதில்லையென்றுதிரமாயறிவதுவே
பவமேயொழிக்கும்பரமார்த்தம்பகருநெறிதானதுவாகும்
அவமேயிதனையொழிந்துளதாம்அவைதானிதனையடைதற்குத்
தவமேமுதலாஞ்சரிதைகளைச்சாற்றுகின்றதன்மையவே. (கூடு)

என்றும்,

வாதுளாகமம் நிஷ்டானுபூதி.

ஒருமொழியாலே சரியைநற் கிரியாயோக பாவனையெலாமொழியும். (௨)

என்றும்,

புத்திகொள் கிரியாயோக சாதனையைப் புரிந்திடுபவர்க ளிவ்வுலகில்
எத்தனைகால மிருப்பினு மீண்டு மிறப்பொடு பிறப்பினையடைவார். (சூடு)

என்றும்,

திருமூலர் திருமந்திரம்.

ஞானத்தின்மிக்க தவநெறி நாட்டிலில்லை.

என்றும்,

பட்டினத்தடிகள்.

வெட்டாதசக்கரம்பேசாதமந்திரம்வேறொருவர்க்
கெட்டாதபுட்பமிறையாததீர்த்தமினிமுடிந்து
கட்டாதலிங்கங்கருதாதநெஞ்சங்கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோகுருநாதன்மொழிந்ததுவே.

என்றும்,

உளியிட்டகல்லையும் ஒப்பிட்டசாந்தையும் ஊத்தையறப்
புளியிட்டசெம்பையும் போற்றுகிலேன்.

என்றும்,

**சிவவாக்கியர்பாடல்.**

காணவேண்டுமென்றுநீர்கடன்மலைகளேறுவீர்
ஆணவமதல்லவோவறிவிலாதமாந்தரே.

என்றும்,

தீர்த்தலிங்கமுத்தியென்றுதேடியோடுந்தீதரே
தீர்த்தலிங்கமுள்ளில்நின்றசீவனைத்தெளியுமோ
தீர்த்தலிங்கமும்முளேதெளிந்துகாணவல்லீரேல்
தீர்த்தலிங்கந்தானமாய்ச்சிறந்ததேசிவாயமே.

என்றும்,

நித்தலுமணிதுலக்கிநீடுமூலைபுக்கிருந்து
கத்தியேகதறியேகண்கள்மூடியென்பயன்
எத்தனைபேரெண்ணினுமெட்டிரண்டுபெத்தலோ
அத்தனுக்கிதேற்குமோவறிவிலாதமாந்தரே.

என்றும்,

குண்டலங்கள்பூண்டுநீர்குளங்கடோறுமூழ்கிறீர்
மண்டுகெங்கள்போலநீர்மனத்தின்மாசறுக்கிலீர்.

என்றும்

கூறியவைகளும் பழித்தனவாம். இவைகள் சரியையாதிகளைப் பழித்தன வல்ல, ஓர் நிமித்தம் பற்றி யவ்வாறு கூறி யிருக்கின்றன வென்னின், அப்போது அத்வைத தூஷண நிக்கிரக நூலில் எடுத்துக்காட்டாகக் காட்டி யிருக்கின்ற

"மோட்ச இச்சையுள்ளவனுக்குப் பாஷாணம், உலோகம், மணி, மண் இந்த ரூபமான விக்கிரகங்களிலே செய்யும் பூசையானது புனர்ஜனனத்தை யும் போகத்தையும் கொடுக்கத்தக்கது. ஆகையால் யதியானவன் மறுபடி யும் ஜனனத்தை யடையாதிருக்கும்பொருட்டுத் தன்னுடைய ஹிருதயார்ச் சனையே செய்ய வேண்டியது. வெளி யர்ச்சனையைத் தள்ளிவிட வேண்டி யது."

இம் மைத்திரேயோபநிஷத் வசன மாத்திரம் சரியையாதிகளைத் தூஷித்த தாகுமோ? ஆகாதாகா தாகலின், இஃதறியாது அத்வைத தூஷணநிக்ரக நூலார் சரியையாதிகளைத் தூஷித்தார் தூஷித்தார் என் றிப்பூர்வ பட்சியார் கூறிய கூற்றுப் பயனில் கூற்றுமென விடுக்க. மேல் இவர் காட்டிய ஒழிவி லொடுக்கச் செய்யுளும், தாயுமானவர் செய்யுளும் சாதன சதுஷ்டயம் சரியையாதிகளுக்குக் கீழாயினதென்றும், நேர் சாதன மன்றென்றும் கூறு மையின் அப்பாடல்களின் விவர்க் கேதும் பயனின்றுமென்க. இனி முத லில் 'சரியாதி நான்கினுக்கும் சாலோகமாதி வருமா றெமக் களித்த வள் ளல்' என்று கூறி யுள்ள ஒழிவி லொடுக்கத்தின் அபிப்பிராயமும், அதன் உரை யாசிரியரது அபிப்பிராயமும் சரியை யாதிகளைப் பற்றி யெவ்வாறு இருக்கின்றனவென முன்னர் ஆராய்ந்து, பின்னர்த் தாயுமானவர் பாடலைப் பற்றி யாராய்வாம்.

ஒழிவிலொடுக்கம் பொதுவிலுபதேசத்தில்

தன்னையறிவார்க் கெதிருந்தானும் பயனுமில்லை. (உக)

என்றும்,

உன்னையறிவென் றுள்ளேயுணர். (௩௨)

என்றும்,

பழுதையைப்பாம்பென்றபயம்போனாற்பாவித்
தழுதுடம்பையாட்டுகினுமாமோ. (௩௫)

என்றும்,

தம்மாலறிந்ததெல்லாந்தாமல்லவென்றுரைத்தால்
சும்மாவிருப்பதுவாய்த்தான்றோ. (௩௭)

என்றும்,

மோனம்வேதாந்தமுடிவு. (௪௧)

என்றும்

தேகான்ம விவேகத்தைப்பற்றிக் கூறி, பின்னர்ச்

சத்திநிபாதத்துத்தயரோழிவில்

பரிசித்துஞ்சிந்தித்தும்பார்த்துமலமாயை
கருமத்தையெல்லாங்கழற்றிச் - சரியாதி
வாதனையாம்போதமயக்கத்தைவாக்காலே
போதைசெய்துபோக்கிவிடப்போம். (௧௩)

என்று சரியையாதிகளைப் போதமயக்கென்று இழித்துக்கூறி, அப்பால்

யோகக்கழற்றியில்

அட்டமாசித்திகளுமத்துவாமூர்த்திகளும்
கிட்டிலதற்கங்கங்கேகீழ்மேலாய் - விட்டு
வரும்போதுந்துக்கமாய்வந்துவந்துமாய்ந்து
பெரும்பாவஞ்செய்யப்பெறும். (உ)

என்றும்,

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற
நிறைவைக்குறையநினைந்து - மறவையுமாய்த்
தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றோடம்
போமாறிலைப்பிறப்பேன்போம். (உக)

என்றும்,

கிரியைக்கழற்றியில்

தத்துவத்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்
செத்தசத்தின்கண்போற்றிரியாது - வைத்தெடுத்தும்
பூரணமேயென்றழைத்துந்தேடிப்புரண்டழுதும்
கோரணிகாட்டும்பேய்க்குவால். (௧)

என்றும்,

# அத்வைதவிளக்கம்.

சரியைக்கழற்றியில்

நடந்துங்குளித்துமிதுநல்லநாளுணே
விடுந்தொழிலான்மெய்வருந்திவீடென் - றடங்காதார்
என்றுசுகமேயிருப்பரிப்போதேதுக்கமிவர்க்
கென்றெதிர்போயின்பமுதிக்கும். (க)

என்றும் புகன்று (யோகி துக்கத்தோடு பெரும் பாவஞ் செய்யப்பெறுவான் என்றும், அவ்யோகிக்குப் பிறப்பு நீங்குத லின்றென்றும், கிரியையாளன் புரண்டழுது கோரணிகாட்டும் பேய்க்கூட்டத்திற் சேர்ந்தோன் என்றும், சரியையாளன் அடங்காதவனென்றும், அவனுக் கின்ப முதிப்பதில்லையென்றும்) வரையறை செய்தது நித்தியாநித்திய வுணர்வும் அந்த நித்தியா நித்திய வுணர்வென்னும் நேர் காரணத்தா லுண்டாகும் ஞானமு மின்மையினு லல்லவா ?

ஒழிவிலொடுக்கமானது கிரியைக் கழற்றி யோகக்கழற்றி என்னு மிரண்டையும் கூறியதோடு

அவத்தைத்தன்மையில்

அவரவரைப்போலிருப்பர் தாமவராகார்போல்
இவரவர்க்கொப் பில்லையெனினும் - உவமைசொலின்
வேசிபணம்வெய்யோன் வீணை வெளிவிசிறி
யாசியர்போ லென்கினுமாவர். (உசு)

என்றும்,

தத்துவத்தின் போர்வை சரிந்ததிகம்பரிபேர்
அத்துவிதியேகாந்தியாநந்தி - சுத்தன்
துரியனவதூதன்றுறவி சிவயோகி
நிருவாணியென்விரத்தனென். (சo)

என்றும்

ஞானிக ளிலக்கணத்தையும் கூறியது இப்பூவுலகில் சரியையை யனுஷ்டித்து அதனு லடையப்பட்ட சிவசாலோக பதவியி லிருந்து கிரியையை யனுஷ்டிக்கும் கிரியாவான்களையும், அம்முறையே யோகத்தையும் ஞானத்தையு மடைந்த யோகிகளையும், ஞானிகளையும் பற்றியா ? அல்லது இப்பூவுலகி லிருப்பவர்களைப்பற்றியா ? பூலோகத்தில் கிரியாவான்கள், யோகிகள், ஞானிகளில்லையென்பது இப்பூர்வ பட்சியாரது நவீனக்கொள்கையாதலின் அவ்வொழிவிலொடுக்கம் கிரியைக்கழற்றி, யோகக் கழற்றி முதலியவற்றைப்பற்றிக் கூறியது இவரது நவீனக் கூற்றின் வண்ணம் இப்பூமியிலிருப்பவர்க் கன்றும்; அன்றுமாக, இவர் 'சரியாதி நான்கினுக்குஞ் சாலோகமாதி வருமாறெமக்களித்த வள்ளல்' என்று கூறியது பயனற்றதாமென்க. அதனுரையாசிரியராகிய சிதம்பர சுவாமிகள்

யோகக்கழற்றியின் அவதாரிகையில்

"சரியையாதியில் நிற்போர்களுள் ஓரொருவர் முன் விட்ட குறையால் ஞானத்திற்குப் பக்குவராய் வருவார்கள்"

என்றும்,

விரத்திவிளக்க அவதாரிகையில்

"இங்ஙனம் சரியையாதிகளை நீத்து நின்றாராயினும், உட்டுறவு இல்லார்க்கு ஞானம் விளங்காது"

என்றும்

கூறுதலின், அஃதும் இவரது புது மதத்திற்குப் பொருந்தாதென்க. இனித் தாயுமானவர் செய்யுளைப்பற்றியும் விசாரிப்பாம். அத்தாயுமானார்

பராபரக்கண்ணியில்

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்பு மலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.

யோகியர்க்கே ஞானம் ஒழுங்காம் பேரன்பான
தாகியரும் யோகம் முன்னே சார்ந்தார் பராபரமே.

பாசசாலங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநாள் எந்நாள் விளம்பாய் பராபரமே.

எங்கும்நிறைகின்றபொருளில்

வேதமுடனாகமபுராணமிதிகாசமுதல்வேறுமுளகலைகளெல்லாம்
மிக்காகஅத்துவிததுவிதமார்க்கத்தையேவிரிவாயெடுத்துரைக்கும்
ஓதரியதுவிதமேஅத்துவிதஞானத்தையுண்டுபணுஞானமாகும்
ஊகமனுபவவசனமூன்றுக்குமொவ்வுமீதுபயவாதிகள்சம்மதம்
ஆதலினெனக்குஇனிச்சரியையாதிகள்போதும். (ரு)

என்றும்,

சச்சிதாநந்தசிவத்தில்

மத்தமதகரிமுகிற்குலமென்னநின்றிலகுவாயிலுடன்மதியகடுதோய்
மாடகூடச்சிகரமொய்த்தசந்திரகாந்தமணிமேடையுச்சிமீது
முத்தமிழ்முழக்கமுடன்முத்தநகையார்களொடுமுத்துமுத்தாய்க்குலாவி
மோகத்திருந்துமென்யோகத்தினிலைநின்றுமூச்சைப்பிடித்தடைத்துக்
கைத்தலநகப்படைவிரித்தபுலிசிங்கமொடுகொடிநுழைநுழைகொண்ட
கானமலையுச்சியிற்குகையோடிருந்துமென்கரதலாமலகமென்னச்
சத்தமறமோனநிலைபெற்றவர்களுய்வர்காண்சனகாதிதுணிவிதன்றே.

என்றும்,

சின்மயாநந்தகுருவில்

பத்திநெறிநிலைநின்றுநவகண்டபூமிப்பரப்பைவலமாகவந்தும்
பரவையிடைமூழ்கியும்நதிகளிடைமூழ்கியும்பசிதாகமின்றியெழுநா
மத்தியிடைநின்றுமுதிர்சருகுபுனல்வாயுவினைவன்பசிதனக்கடைத்தும்
மௌனத்திருந்தும்உயர்மலைநுழைவுபுக்கியும்மன்னுதசநாடிமுற்றும்
சுத்திசெய்தும்மூலப்பிராணனோடங்கியைச்சோமவட்டத்தடைத்தும்
சொல்லரியஅமுதுண்டும்அற்பவுடல்கற்பங்கடோறும்நிலைநிற்கவீறு
சித்திசெய்தும்ஞானமலதுகதிகூடுமோ. (கக)

உடல்பொய்யுறவில்

கேட்டவுடன் சிந்தித்தல்சேடிலாமெய்த்தெளிவால்
வாட்டமறுவுற்பவநோய்மாறுமோ - நாட்டமுற்று
[illegible]னைமேவினருக்கன்றோதான்
[illegible] (அ)

[illegible]

ஒழிவிலொடுக்கமானது கிரியைக் [illegible]
ண்டையும் கூறியதோடு

அவத்தைத்தன்மையில்

அவரவரைப்போலிருப்பர் தாமவராகார்போல்
இவரவர்க்கொப் பில்லையெனினும் - உவமைசொலின்
வேசிபணம்வெய்யோன் வீணை வெளிவிசிறி
யாசியர்போ லென்கினுமாவர். (உ௯)

என்றும்,

தத்துவத்தின் போர்வை சரிந்ததிகம்பரியேர்
அத்துவிதியேகாந்தியாநந்தி - சுத்தன்
துரியனவதூதன்றுறவி சிவயோகி
நிருவாணியென்விரத்தனென். (௩0)

என்றும்

ஞானிக ளிலக்கணத்தையும் கூறியது இப்பூவுலகில் சரியையை யனுஷ்டித்து அதனு லடையப்பட்ட சிவசாலோக பதவியி லிருந்து கிரியையை யனுஷ்டிக்கும் கிரியாவான்களையும், அம்முறையே யோகத்தையும் ஞானத்தையு மடைந்த யோகிகளையும், ஞானிகளையும் பற்றியா ? அல்லது இப்பூவுலகி லிருப்பவர்களைப்பற்றியா ? பூலோகத்தில் கிரியாவான்கள், யோகிகள், ஞானிகளில்லையென்பது இப்பூர்வ பட்சியாரது நவீனக்கொள்கையாதலின் அவ்வொழிவிலொடுக்கம் கிரியைக்கழற்றி, யோகக் கழற்றி முதலியவற்றைப்பற்றிக் கூறியது இவரது நவீனக் கூற்றின் வண்ணம் இப்பூமியிலிருப்பவர்க் கன்றும்; அன்றுமாக, இவர் 'சரியாதி நான்கினுக்குஞ் சாலோகமாதி வருமாறெமக்களித்த வள்ளல்' என்று கூறியது பயனற்றதாமென்க. அதனுரையாசிரியராகிய சிதம்பர சுவாமிகள்

யோகக்கழற்றியின் அவதாரிகையில்

"சரியையாதியில் நிற்போர்களுள் ஒரொருவர் முன் விட்ட குறையால் ஞானத்திற்குப் பக்குவராய் வருவார்கள்"

என்றும்,

னும் சரியையாதிகள் செய்யப்படுவன வல்லவென்றும், ஞானத்துக்குச் சாதனமுமல்லவென்றும், அதுசெய்யின் நரகமுண்டாமென்றும் கூறுவோர்; மற்றொரு வகையினர் வேதாதிப் பிரமாணவாதிகள். இவர் சரியையாதிகள் ஞான சாதனமென்றும், ஞானசாதனமாயினும் அவையிற்றையே முடிந்த நிலையாகக் கருதுவது அஞ்ஞானமென்றும், அச்சரியையாதிகளைச் செய்து பின் அவற்றினின்றும் நீங்கி ஞானநிலையை அடையவேண்டுமென்றும், ஞானம் ஒன்றினாலேயே மோட்சமுண்டாமென்றும் கூறி; சரியையாதிகளே பொருளென்று மயங்கி நிற்பார்க்கு அதின் குறைவையும், ஞானத்தின் உயர்வையும், சரியையாதிகள் சித்த சுத்தியை மாத்திரம் உண்டாக்குமே யன்றி ஞானத்தையும் முத்தியையுங் கொடாதென்றமையையும் விளக்கி, சரியையாதிகளில் நிற்போர் உய்யும் பொருட்டு மிகக் காருணியத்தோடு சரியையாதிகளை யிழித்துக் கூறுவோர். இவற்றில் முன்னவ ரான கிறிஸ்தவராதியோர் கூறுவது தூஷண மாகுமே யன்றி, பின்னவரான வேதாதிப் பிரமாணவாதிகள் கூறுவது தூஷணமாகாது. தூஷணமாகாமைமாத்திரமன்று, ஞானத்துக்குப் பூஷணமுமாம். இந்த உண்மையினை யுணராது இப்பூர்வபக்ஷியார் கிறிஸ்தவர் முதலானவர்போல் வேத பாஹியராய் நின்று, உபநிஷத் வாக்கியத்தை யிகழ்ந்து கூறினது மன்றி, உபநிஷத்தையும் பைபி[illegible]படுத்தியும் கூறினர். இப்படிப்பட்ட அற்பவிஷயத்தினையுமுணர [illegible] பெரிய விஷயத்தைப்பற்றி அத்வைதிகளுடன் [illegible]பேடி, அபிமன்னனுடன் வாட்போர் [illegible]என்றென்றகூறியதனால் [illegible]ரென் றறையுறு [illegible]

[illegible]

மத்தமதகரிமுகிற்குலமென்னநின்றிலகுவாயிலுடன்மதியகடுதோய்
மாடகூடச்சிகரமொய்த்தசந்திரகாந்தமணிமேடையுச்சியிற் [illegible]
முத்தமிழ்முழக்கமுடன்முத்தநகையார்களொடுமுத்தாய்க்குலாவி [illegible]
மோகத்திருந்துமென் யோகத்திலிலைநின்று மூச்சைப்பிடித்தடைத்து [illegible]
கைத்தலகபடைவிரித்தபுலிசிங்கமொடு [illegible]
கானமலையுச்சியிற்குகையோடிருந்துமென் [illegible]
சத்தமறமோனநிலைபெற்றவர்களுய்வர்காண் சனகாதிமுனிவிதன்றோ. (௯)

என்றும்,

சின்மயாநந்தகுருவில்

பத்திநெறிநிலைநின்றுநவகண்டபூமிப்பரப்பைவலமாகவந்தும்
பரவையிடைமூழ்கியும் [illegible]
மத்தியிடை [illegible]
மௌனத்திருந்தும் உயர்மலைநுழைவுபுக்கியும் [illegible]
சத்திசெய்தும் மூலப்பிராணனோடங்கி [illegible]
சொல்லரிய அமுதுண்டும் அற்ப [illegible]
சித்திசெய்தும் ஞானமல [illegible]

[illegible]

உடல்பொய்யுறவில்

கேட்டலுடன் சிந்தித்தல்சேடிலாமெய்த்தெளிவால்
வாட்டமருவுற்பவநோய்மாறுமோ - நாட்டமுற்று
மெய்யானநிட்டையினைமேவினருக்கன்றோதான்
பொய்யாம்பிறப்பகன்றுபோம். (அ)

எங்கும்சிவமேயிரண்டற்றுநிற்கின்நெஞ்சே
தங்குஞ்சுகநீசவியாதே - அங்கிங்கென்
றெண்ணாதேபாழிலிறந்துபிறந்தழலப்
பண்ணாதேயானுன்பரம். (சுசு)

சும்மா இருக்கச் சுகமுதயமாகுமே
இம்மாயாயோகம் இனியேனடா - தம்மறிவின்
சுட்டாலேயாகுமோ சொல்லவேண்டாங்கன்ம
நிட்டாசிறுபிள்ளாய் நீ. (௯௨)

என்றுங் கூறியதினல் சரியையைப் பார்க்கிலும் கிரியை யுயர்ந்ததென்றும், கிரியையைப் பார்க்கிலும் யோகம் உயர்ந்ததென்றும், யோகத்தைப்பார்க்கிலும் ஞானம் உயர்ந்ததென்றும், ஞானத்தை நோக்கச் சரியையாதி மூன்றுந் தாழ்ந்தன வென்றும், யோகியரே ஞானத்தை யடைவதற்கு ஒழுங்கானவரென்றும், சரியாவான்கள் கிரியாவான்கள் அல்லரென்றும், சரியை கிரியை யோகங்கள் பாசசாலங்களாதலின் அவற்றைக் கூரிய ஞானவாளால் வீசவேண்டுமென்றும், அத்துவித ஞானத்தை அடைதற்குத் துவிதம் சாதன மாயினும் இனித் துவித வடிவாயுள்ள சரியையாதிகள் இதுகாறுஞ் செய்தது போதுமென்றும், இனிச் செய்யவேண்டுவ தின்றென்றும், மோகத்திலிருந்தால் என்ன நஷ்டம்? யோகத்திலிருந்தால் என்ன லாபம்? பிறப்பைத் தரும் விஷயத்தில் இரண்டும் ஒன்றாயிருத்தலால் இதை விட்டு மௌன நிலையைப் பெற்றவர்களே யுய்வார்களென்றும், ஞானத்தினலன்றி மற்றச் சரியையாதிகளால் வீடு கூடாதென்றும், சாட்சாத்கார நிலைமையினைப் பெற்றாலன்றிச் சிரவணாதிகளாலும் பிறப்புப் போகாதென்றும், பரிபூரண சிவ வடிவாய் நின்றால் சுகமென்றும், அஃதொழிந்த சரியையாதிகளால் துக்கமென்றும், சும்மா விருந்தால் சுகமென்றும், அஃதொழிந்த மாயா சம்பந்தமுள்ள யோகாதிகள் துக்கமென்றும், சரியையாதிகளான கர்ம்மமார்க்கத்தவன் கர்ம்ம சிறு பிள்ளையா மென்றும் பெறப்படுதலின், அத்தாயுமானவர் சரியையாதிகளை இழித்துக் கூறவேண்டிய விடத்தில் இழித்தும்,

எல்லாமுதவுமுனையொன்றில்பாவனையேனும்செய்து
புல்லாயினும்ஒருபச்சிலையாயினும்போட்டிறைஞ்சிநில்லேன்.

என்று உயர்த்திக் கூறவேண்டிய விடத்தில் உயர்த்தியுங் கூறினரென்பது அவரது வாக்கியப்பிரமாணமே சாட்சியாம்; அன்றியும் அதுமுறைமையும், நியாயமும், வேதாகமசாஸ்திரப் பிரமாணமுமாம். இவ்வாறு இழித்துக் கூறாது எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்துக் குழப்பின் ஞானத்தின் மகிமை விளங்காது; அன்றி எவரும் சரியையாதிகளையே பொருளென மயங்கிப்போய், ஞானப்பியாசஞ் செய்பவர் எவரும் இல்லாமற் போவார்; போகவே, முத்திபெறுபவர் உலகில் எவரும் இன்றென்று சொல்ல நேரும்.

சரியையாதிகளைப்பற்றி இகழ்ந்து கூறுபவர் இரு வகையினர்; அவரில் ஒருவகையினர் கிறிஸ்தவர், மகம்மதியர் முதலாயினோர். இவர் எவ்வாற்று

னும் சரியையாதிகள் செய்யப்படுவன வல்லவென்றும், ஞானத்துக்குச் சாதனமுமல்லவென்றும், அதுசெய்யின் நரகமுண்டாமென்றும் கூறுவோர்; மற்றொரு வகையினர் வேதாதிப் பிரமாணவாதிகள். இவர் சரியையாதிகள் ஞான சாதனமென்றும், ஞானசாதனமாயினும் அவையிற்றையே முடிந்த நிலையாகக் கருதுவது அஞ்ஞானமென்றும், அச்சரியையாதிகளைச் செய்து பின் அவற்றினின்றும் நீங்கி ஞானநிலையை அடையவேண்டுமென்றும், ஞானம் ஒன்றினாலேயே மோட்சமுண்டாமென்றும் கூறி; சரியையாதிகளே பொருளென்று மயங்கி நிற்பார்க்கு அதின் குறைவையும், ஞானத்தின் உயர்வையும், சரியையாதிகள் சித்த சுத்தியை மாத்திரம் உண்டாக்குமே யன்றி ஞானத்தையும் முத்தியையுங் கொடாதென்றமையையும் விளக்கி, சரியையாதிகளில் நிற்போர் உய்யும் பொருட்டு மிகக் காருணியத்தோடு சரியையாதிகளை யிழித்துக் கூறுவோர். இவற்றில் முன்னவ ரான கிறிஸ்தவராதியோர் கூறுவது தூஷண மாகுமே யன்றி, பின்னவரான வேதாதிப் பிரமாணவாதிகள் கூறுவது தூஷணமாகாது. தூஷணமாகாமைமாத்திரமன்று, ஞானத்துக்குப் பூஷணமுமாம். இந்த உண்மையினை யுணராது இப்பூர்வபக்ஷியார் கிறிஸ்தவர் முதலானவர்போல் வேத பாஹியராய் நின்று, உபநிஷத் வாக்கியத்தை யிகழ்ந்து கூறினது மன்றி, உபநிஷத்தையும் பைபிலையும் ஒன்றுபடுத்தியும் கூறினர். இப்படிப்பட்ட அற்பவிஷயத்தினையுமுணரவாற்ற லில்லா இவர்: மிகப் பெரிய விஷயத்தைப்பற்றி அத்வைதிகளுடன் வாதிடவருவது ஆணும் பெண்ணுமற்ற பேடி, அபிமன்னனுடன் வாட்போர் செய்யவருவதுபோலாம். உபநிஷத்தும் பைபிலும் ஒன்றென்றுகூறியதனால் இப்பூர்வபக்ஷியார் உண்மையில் என்ன மதத்தவரா யிருப்பாரென் றையுறுவார்க்கு அவர் ஐயத்தை யிவர் எவ்வாற்றான் நிவர்த்திப்பரோ அறியேம்.

இது நிற்க; பூலோகத்தில் சரியைமாத்திரம் உண்டென்னும் இவர்க்கும், இப்பூலோகத்திலேயே சற்குரு முன்னிலையில் ஆன்மானான்ம விவேகஞ் செய்து பின்னர் நிட்டை கூடிப் பொய்யாகிய பிறப்புப்போமென்று கூறிய தாயுமானவர்க்கும் எதுஞ் சம்பந்த மின்றாம்; இன்றாக, சம்பந்த முளதுபோலக் காட்டிச் சமயத்தில் சத்துருவாகிய தாயுமானாரது காலைப் பிடித்துக் கொள்ளுகின்றார்.

"நீர்தேடிய சாதன சதுஷ்டயத்தில், முதற்சாதனங் கைகூடியவனுக்கு என்ன பேறு? இரண்டாவது சாதன சித்திக்குப் பயன் யாது? மூன்றாவது சாதனமுடிவுக்கு என்ன கதி? நான்காவது சாதனப்பேறுக்கு யாது லாபம்? பிரமாணத்துடன் விடைகூறுக. இதற்கு விடைதரக்கூடிய திறமை உம்மிடமிருந்தால் உம்மை யொருவர் கையிற் பிடிக்க முடியாது கண்டீர்."

என்றார்.

அத்வைததூஷண நிக்கிரகநூலில்

அக்கரமாகி மெய்ம்மையாயுள்ள வப்பொருளறிந்த போதல்லால், எக்கருமங்களாலும் வீடில்லை.

என்றும்,

கருமதத்பரராய் நாங்களே யெல்லாங் கற்றவரென்றிருக்கின்ற, பெருமித முடையார் மூடரே பிறவாநெறியையும் பெறுகிலார்.

என்றும்,

மையலொன்றற விவ்வறிவினை யறியின் மானுடன் முத்தனுமன்றித் துய்ய கன்மத்தால் மைந்தரால் மற்றோர் பொருளினா லுற்பவந்துடையான்.

என்றும்,

கருத்திலாமூடர்காட்டமாதிகளில்காண்பர்கற்றவர்களாகாயத்
தருக்கனிற்புனலிற்காண்பராகுதியிலருச்சனைசெய்யுமந்தணரவ்
வெரிக்கணேகாண்பரெங்குமாய்நின்றவெனதிலிங்கத்தினைநேரே
யொருக்கியபரமயோகிகளென்றுமொழிவறக்காண்பர்தம்முளத்தே.

என்றும் பிறவும் ஸ்காந்தம் சூதசங்கிதையின் பிற்பாகமாகிய பிரமகீதையினின்றும், கூர்மபுராணம் ஈசுவரகீதையினின்றும் எடுத்தெழுதி யிருப்பதைக் கண்டாரில்லைபோலும். கண்டிருந்தால முதற்சாதனங் கைகூடியவனுக்கு என்னபேறு என்றற்றொடக்கத்தவாய வீண் விஷயத்தை யெழுதி 'உம்மை யொருவர் கையிற் பிடிக்கமுடியாது கண்டீர்' என்னார்! என்னார்!!

சூதசங்கிதை பிரசாதக்கிரமம்.

நித்தியநைமித்தியகன்மங்கள்நிட்காமியமாகப்
பத்தியுறச்செய்வதினால்பாவமெலாம்நாசமூறும்
ஒத்தியல்மற்றதனானேயொழியாமலுறுசித்த
சுத்தியுளதாமென்றுசொல்லுமால்மறையனைத்தும். (சு)

பின்னருருத்திரதேவன்பிறங்குபிரசாதத்தால்
உன்னரியசமுசாரத்துள்ளதோடந்தெரிந்து
மன்னவயிராக்கியமுமருவியுறுகருமங்கள்
தன்னமுமிலாதாயசந்நியாசங்கிடைக்கும். (எ)

பூந்தண்மலர்மேயபிரான்பொற்றபிரசாதத்தால்
சாந்தியுறுதாந்திமுதல்சாதனங்களுண்டாகும்
பாந்தண்மிசைப்படைகொள்வோன்பாயபிரசாதத்தால்
நீந்தரியசுகமுத்திநிகழிச்சைபுண்டாமே. (அ)

தக்கசாதனசதுட்டயசம்பத்தியிவ்வாறு
ஒக்கவாகியபின்விநாயகப்பிரானுடைய
மிக்கநற்பிரசாதத்தான்மெய்ம்மையேயுருவாய்
நக்கதேசிகன்பாதசம்பத்திநண்ணிடுமே. (கூ)

அனையதேசிகனுடைப்பிரகாசத்தினாலே
வினையெலாந்தவிர்ஞானசாதனமெனவிளங்கும்
புனையும்யோகமென்றுரைத்திடப்பொலிதருதியானம்
இனைதல்தீர்வகையிலங்குபுசித்திக்கும்பின்னர். (க0)

கரவிலாவுயிர்க்கருள்பரையனுக்கிரகத்தால்
பிரமவித்தியாசித்திபுண்டாகிடும்பிறங்க
வுரவுறப்பொழுதேசிவப்பிரசாதமுண்டாய்
விரவுபாசமுற்றொழியநன்முத்திமேவிடுமால். (கக)

இச்செய்யுள்களின்படி நித்திய நைமித்திய கருமங்களைச் சிரத்தையோடு நிஷ்காமியமாகச் செய்வதனால் பாவம் நாசமாகும்; பாவம் நாசமாகச் சித்தசுத்தி யுண்டாகும்; சித்த சுத்தியினால் குடும்பக் குற்றங் காணப்பட்டு அதனால் வைராக்கியம் பிறந்து அதனால் சந்நியாசமுண்டாகும்; அதனால் சாந்தி தாந்தி முதலிய சாதனங்களுண்டாகும்; அதனால் முத்தி விருப புண்டாகும்; சாதனசதுட்டய சம்பத்தியினால் சற்குருசேவை கிடைக்கும்; அச் சற்குருபிரசாதத்தினால் ஞானயோகங் கிடைக்கும்; அந்த ஞானயோகத்தினால் பாசம் நாசமாய் முத்தியுண்டாகும் என்றும்,

திருக்குறள் நீத்தார் பெருமையில்

"ஒழுக்கத்துநீத்தார்பெருமைவிழுப்பத்து
வேண்டும்பனுவற்றுணிவு"

என்னுஞ் செய்யுளின் விசேடவுரையில் பரிமேலழகர்

"தமக்குரிய வொழுக்கத்தின்கண்ணே நின்று துறத்தலாவது: தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரிய வொழுக்கங்களை வழுவா தொழுக அறம் வளரும், அறம் வளரப் பாவந் தேயும், பாவந் தேய அறியாமை நீங்கும், அறியாமை நீங்க நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வும் அழிதன் மாலையவாய இம்மை மறுமை யின்பங்களின் உவர்ப்பும் பிறவித் துன்பங்களுந்தோன்றும், அவைதோன்ற வீட்டின்கண் ஆசையுண்டாம், அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாய பயனில் முயற்சிக ளெல்லாம் நீங்கி வீட்டிற்குக் காரணமாகிய யோகமுயற்சி யுண்டாம், அஃதுண்டாக மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யானென்பதும் விடும். ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்து விடுதலெனக் கொள்க."

என்றும் உள்ளவைகளில் சாதன சாதுஷ்டயமே வீடு கூடுவதற்கு நேர் சாதனமென்று பெறப்பட்டது. பிரமாணமாயுள்ள நூல்கள் நேர் காரணமென்று கூறும் சாதன சதுஷ்டயங்களில் 'முதற்சாதனங் கைகூடினவனுக்கு என்ன பேறு?' என்றற்றொடக்கத்தனவற்றை வினவிய விவர்க்கு இவர் பிரமாணமா யநுசரிக்கும் நூலைக்கொண்டே விடையிறுக்கின்றாம். அது வருமாறு:—

சிவஞானசித்தி அ-ம் சூத்திரத்தில்

"சரியைசெய்வோரீசனுலகிருப்பர்" (கக)

என்றும்,

"நித்தலுமிக்கிரியையினை யியற்றுவோர்க
ணின்மலன்றனருகிருப்பர் நினையுங்காலே" (உ0)

என்றும்,

"அட்டாங்கயோகமுற்று, முழுத்தலுழந்தவர்
சிவன்றனுருவத்தைப்பெறுவர்" (உக)

என்றும் சரியைகிரியை யோகங்களுக்குப் பயன் (சிவாக்கிரயோகியர் ஷை சூத்திரம் உஉ-ம் பாட்டினுரையில்

"சரியையாதி யனுஷ்டானங்களும் அதனாலடையும் சாலோக்கியாதி முத்திகளும் அநித்தியமாகையால் அசத்தியம்"

என்று கூறியபடி) அசத்தாயுள்ள சாலோக சாமீப்பிய சாரூப்யங்களைக் கூறி,

உஉ-வது செய்யுளில்

"பதிபசுபாசந் தெரித்துப் பரசிவனைக் காட்டு, நன்மார்க்க ஞானத்தை நாடி"

என்று விவேகஞ்சொல்லி, பின்னர்க்

"கேட்டலுடன்சிந்தித்தறெளிதனிட்டைகளத்தலெனவீரிரண்டாங்விளக்கின்ஞானம், வீட்டையடைந்திடுவர்நிட்டைமேவினோர்கண்மேவாதுதப்

பினவர் மேலாயபதங்கட், கீட்டியபுண்ணிய நாதராகியின்பமினிது நுகர்ந்தர னருளா லிந்தப்பார்மீமே, ஞட்டிய நற்குலத்தினில்வந்தவதரித்துக் குருவான் ஞானநிட்டையடைந்தடைவர்நாதன்ருளே''

என்று 24-வது செய்யுளில் கேட்டலாதியோடு நிட்டைகூடினவர் வீடு கூடுவாரென்றும் கேட்டல் சிந்தித்தல் தெளிதலளவிலே தேகத்தை விட்டோர் மேலாய பதங்களையடைந்து ஆண்டுள்ள போகங்களை யனுபவித்துப் பிறகு பூமியில் வந்துதித்து ஞானத்தையடைந்து வீடுகூடுவர் என்றும் புகலுமாயின், கேட்டலாதிகளுக்கு நேர்சாதனமாயும் சரியையாதிகட்கு மேற்பட்டதாயுமுள்ள சாதன சதுஷ்டயங்களை யுற்றவர்க்குப் பயன் கிட்டாமற் போகுமோ? மேற்காட்டியுள்ள சிவஞான சித்திபாடலில் சரியை கிரியை யோகங்களுக்குமேல் விசாரணையும் கேட்டலாதிகளும் கூறியிருக்கின்றமையின், யோகத்திற்குமேல் கூறிய விசாரணை பதிபசு பாசத்தைச் சேர்ந்ததென்பதற்கும் அது நித்தியாநித்திய வஸ்து விவேகம் என்பதற்கும் யாதோரிழுக்கு மின்றுமென்க. இழுக்கின்று மென்பது சிவ ஞான சுவாமிகள் "சரியா பாத முதலியவற்றை ஆராயு நூல்களை முறையே கேட்டு அவ்வாறொழுகி மநந் தூயராய் நித்தியாநித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூலுணர்த்துக வென்பது'' என்று கூறியதினால் நன்கு விளங்கும். இதுகாறும் கூறி வந்ததினால் நித்தியாநித்திய வஸ்து விவேக முதலியனவற்றிற்குப் பேறுகள் உளவெனப் பூர்வ பட்சியாருக்குப் பிரமாணமாயுள்ள நூலின்படி தெளிவுறக் கிடக்க, பூர்வ பட்சியார் 'முதற்சாதனம் கைகூடினவனுக்கு என்னபேறு' என்றற் றொடக்கத்தனவற்றை வினவி யலமரல் நூலாராய்ச்சி யின்மையைக் காட்டுகிறதென்க. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை யென்னும் நான்கும் யோகத்திற்கு மேற்பட்டன வென்பதற்கு யாதும் ஆசங்கை யின்றென்பது தெளிவுற விளங்கும். இந்நான்கில் கேட்டலை மாத்திரம் உடையவனுக்கு இன்ன பேறு கேட்டலோடு சிந்தித்தலையு முடையவனுக்கு இன்ன சித்தி, இவ்விரண்டோடு தெளிதலையு முடையவனுக்கு இன்ன பயன் என்று சிவ ஞானசித்தி தனித்தனி யெடுத்துக்கூறுமல் பொதுவாய் "மேவாது தப்பினவர் மேலாய பதங்கட் கீட்டிய புண்ணிய நாதராகி யின்பமினிது நுகர்ந்து'' என்று கூறியதினால் பயன் ஏற்றபடி கொள்வதுபோல, சாதனசதுஷ்டயங்களுக்கும் கொள்ளவேண்டுமென்பது செவ்வனே விளங்கிய தென்க. இனி, வேதாந்த சாஸ்திரங்கள் சாதன சதுஷ்டயங்களுக்குப் பயன் யாது கூறுகின்றனவென்றுராய்வாம்:—

பாஷ்ய இருதயம் சிஷ்யப் பிரகரணம்.

"வைராக்கிய முபரதி யிரண்டு மங்கம், ஞானம் பிரதானம். ஞான மில்லாமல் உபரதியினலே சத்திய லோகங் கிடைக்கும், ஞான மில்லாமல் வைராக்கியத்தினலே சுவர்க்கம் கிடைக்கும், ஞானத்தினலே மோட்சங் கிடைக்கும். ஞானப்பியாசி, ஞானமுதிராமல் மரித்தானுயின் புண்ணிய லோகங்களை யடைந்து தேவ போகங்களைப் புசித்து யோகப் பிரஷ்டனுக ராஜ குலங்களிலாகிலும், ஞான குலங்களாகிற வியாசாதி ரிஷி குலங்களிலாகிலும், ஞானிகள் குலங்களிலாகிலும் வந்து பிறப்பன். பிறந்து மறுபடியும் ஞானப்பியாசஞ் செய்து பூர்வ வாசனையினலே ஞானத்தை யப்பியாசித்து ஞானசித்தி வந்து அப்பால் முத்தியையடைவன்.''

என்றும்,

அத்வைதபோததீபிகை சாதனப்பிரகரணம்.

"சாதனசதுஷ்டயங்கள் நான்கும் பூரணமாய் ஒருமித்திருக்கவேண்டும். அவற்றில் ஒன்ருகிலு மில்லாமற்போனுல் விசாரஞ் சித்தியாது. இதற்குப் புண்ணிய லோகமே பலம். ஒருமித்துக் கூடினுல் ஆத்தும விசார சித்தி்ய பலம்"

என்றும்,

"நித்தியாநித்திய வஸ்து விவேகத்தினுல் அநித்தியமாயிருக்கிற தேகாதி பிரமலோக பரியந்தமாயுள்ள சலக போக்கிய வஸ்துகளிலும்......அத்தியந்த வைராக்கியத்தை யடைந்து......ஒரு விஷயத்திலும் சுகத்தை யடையாமல் ஒரு க்ஷணகாலமுந் துக்கத்தைச் சகிக்க முடியாது. எப்போது இந்தச் சமுசார சாகரத்தினின்றும் நீங்கப்போகிறேம், எப்போது இதை விடப் போகிறேம், எதனுலே இந்தத் துக்கத்தினின்றும் விடுபடுவோம் என்றிப்படி யத்தியந்த மோட்ச விச்சையோடுங் கூடியிருச்கிற புருஷன் ஆத்ம விசாரத்திலே.........நன்ருய் அவதிபரியந்தம் பூரணமாயிருக்கிற விவேகாதி சாதன சதுஷ்டயமுள்ளவனே உத்தமோத்தம அதிகாரியென்று சொல்லப்படுவன்"

என்றும்,

"காரிய பரியந்தம் பூரணமாயிருக்கிற விவேகாதி சாதன சதுஷ்டயமுள்ளவன் உத்தம அதிகாரியென்று சொல்லப்படுவன். சொரூபபரியந்தமா யிருக்கிற சாதன சதுஷ்டய முள்ளவன் மந்த அதிகாரி யென்று சொல்லப்படுவன். எது மாத்திரமா யிருக்கிற சாதன சதுஷ்டயமுள்ளவன் மத்திம அதிகாரியென்று சொல்லப்படுவன். இந்த நான்குவித அதிகாரிகளுக்கும் ஆத்ம விசாரம் தாரதம்மியமாய்ச் சித்தியாம்."

என்றும்,

"உத்த மோத்தம அதிகாரிச்குச் சீக்கிரம் சித்தியாம்; உத்தம அதிகாரிக்கு மெள்ளச் சித்தியாம்; மந்த அதிகாரிக்கு நாட்சென்று சித்தியாம்; மத்திம அதிகாரிக்குச் சர்வதா விசாரம் பண்ணப் பண்ணப் பரிபச்குவமாய்ச் சித்தியாம்"

என்றும்,

வாசுதேவமநநம் வயிராக்கியாதி நிருபகம்.

"வயிராக்கிய வுபரதிகள் தபசானபடியினுல், அதனுல் புண்ணியலோகங்கள் கிடைக்கும்"

என்றும்

உள்ள பிரமாணங்களினுல் உத்தமோத்தம அதிகாரியே சாதன சதுஷ்டயத்தை நிரம்பப் பெற்றவனென்றும், அவனே விரைவில் ஞானத்தை யடைகிறு னென்றும், ஏனைய மூவர்கள் அவதி, காரியம், சொரூபம், எது என்னும் நான்குக்குத்தக்கபடி பலன்களையடைகிருர்களென்றும்ஒவ்வொரு சாதனத்திற்கும் அததற்குத் தக்கபடி புண்ணியலோகப் பிராப்தி யுண்டென்றும், பின்னர் ஞானமுண்டாமென்றும் பெறப்பட்டன.

இனி இதுவிஷயத்தைப்பற்றிச் சதுர்த்தச வித்தைகள் யாது கூறுகின்றனவென்ருராய்வாம்:—

சூதசங்கிதை வேதாவிரோதஅந்தியாயத்தில்

(1) கருமகாண்டமுஞானகாண்டத்திற்குநேரோ
மருவுசேடமாகாதுமன் சாந்தியேதாந்தி
திருகுறுச்சிரவணமன்னநந்தியானங்க
ளருதருவிவைஞான சாதனங்களேயாகும். (௨௫)

என்றும்,

ஷை பிரமகீதைபிரகதாரணிய உபநிஷத்தில்

அற்பசுகசாதனங்களேயானகன்மங்களையொருவிப்
பொற்பார்சிரவணாதிகளாற்பொருந்தத்துவிதஞானமுள்ளோன்
விற்பாய்சுபாவசித்தவானந்தசொரூபமாவிளங்கும். (௩)

என்றும்,

முத்திகோபநிஷத்தில்

முமுட்சுக்களான புருஷர்கள் சாதன சதுஷ்டய சம்பன்னர்களாய் ........சற்குருவை யடைந்து நூற்றெட்டுபநிஷத்துகளை விதிப்படி அப்பியாசஞ் செய்து, சிரவண மனன நித்தியாசனங்களை யெப்போதுஞ் செய்து ........பரிபூர்ணத்துவத்தை யடைகிறார்கள்.

என்றும் உள்ள பிரமாணங்களால் சரியை கிரியை யோகங்கள் ஞானத்திற்கு நேர் சாதனங்களல்லவென்றும், அது அற்ப சுக சானங்களென்றும், சாதன சதுஷ்டயமே நேர் சாதனமென்றும் பெறப்பட்டன.

சூதசங்கிதை கழவாயுரைத்த அந்தியாயத்தில்

(2) சொற்றவிக்கழுவாய்பலவுளுமதிகந்துரிசறுஞானமாங்கழுவாய்
மற்றதுபெறுவான்பத்தியேசாந்திவகுத்திடுதாந்திமுற்குணங்க
ளூற்றவனாயாசாரியற்போற்றியுவப்புறுபணிவிடைசெய்து (௫௫)
செற்றுநற்பொருள்கள்விளங்குவேதாந்தசிரவணஞ்செய்திடவேண்டும்.

என்றும்,

மறையினந்தத்தை பெவனனுட்டிப்பான் மற்றவன் றுயர்ச் சமுசாரத்
துறையினின்றகன்று முத்தியை யடைவான் சோர்வுறவனுட்டிக்கும்போது
குறையுறிற் சுவர்க்கபோகந் துய்த்துயர்ந்தகுலத்திலோர்தரம் புவித்தோன்றி
நிறைபெருங்குரவனருளினற்பாசநீத்தரனடிநிழலடைவான். (௩௫)

என்றுமுள்ள விருசெய்புட்களின்படி சாந்திதாந்தியோடுகூடியசாதன சதுஷ்டய முள்ளவனே சற்குருவை யடுத்து, வேதாந்த சிரவணஞ் செய்ய அதிகாரி யென்றும், அவ்வதிகாரி மறையி னந்தத்தை யனுஷ்டிப்பதினல் வீடு கூடுகிறுனென்றும், அவ்வாறனுஷ்டிப்பதில் குறைவு நேரிடின் சுவர்க்க போகத்தை யனுபவித்து, அப்பால் பூமியிற் சனித்துக் குருவருளினுல் வீடு கூடுகிறுனென்றும் பெறப்பட்டன.

வாயுசங்கிதைஞானபோகமுதலியவுரைத்த அந்தியாயத்தில்

(3) "ஆடுறுமா தீர்த்தங்களெச்சங்கடவங்களெலாமறிவான்முன்னி, னடுறு மெய்த் தியானத்துக் கிணையலவா மிவையுணர்ந்துயோகி நன்காக், சேடிலா தியானத்தைச்செய்வனற்சித்திகிடைத்திடுமுன்மாய்ந்தாற்,கூடரியவுருத்திர லோகத்தடைந்தேயின்பமுற்றுச்குலவுவானே" (௬௦)

என்றும்,

"குலவியபின் யோகிக ணர்குலத்துதித்துக் கோதிலா ஞானத்தோடு நிலைபெறு யோகமுமடைந்து முத்தியினிலெய்துவான். (சுக)

என்றும்,

பகவற்கீதைம் 6-ம் அந்தியாயம்.

(யோகஞ் செய்தும் பூரணமாய்ச் செய்யாமல் விட்டு விட்டவனாகிய) யோகப் பிரஷ்டன் புண்ணியஞ் செய்தவர்களுடைய உலகங்களை யடைந்து வெகு காலஞ் சுகமாயிருந்து சதாசாரமுள்ள ஐசுவரியவான்களுடைய வீட்டிற் பிறக்கின்றான். (சுக)

அல்லது ஞானிகளான யோகாப்பியாசஞ் செய்கிறவர்களுடைய குலத்திலே ஜனிக்கிறான். இந்த லோகத்தில் இப்படிப்பட்ட பிறவியானது எதுவோ, அது மிக துர்லபமானது (மிக அரிது). (சஉ)

என்றும் உள்ள பிரமாணங்களின்படி ஞானயோகம் முற்றுப்பெறுவதற்கு முன்னர்த் தேகம் நழுவினோன் உருத்திரலோக முதலிய புண்ணிய லோகங்களை யடைந்து ஆண்டுள்ள வின்பங்களை யனுபவித்துப் பின்னர்ப் புவியிற் சனித்து ஞானயோகத்தைக் குறைவறப்பெற்று முத்தியை யடைகிறானென்பது பெறப்பட்டது. இவற்றில் முதலாவது எண்ணின்படி சாதன சதுஷ்டயம் ஞானத்தை யடைவதற்கு நேர்சாதனமென்றும், இரண்டாவது எண்ணின்படியும் மூன்றாவது எண்ணின்படியும் சாதன சதுஷ்டயத்திற்கும் சிரவணமனன நிதித்தியாசனங்கட்கும் புண்யலோகப் பிராப்தியுண்டென்றும் பெறப்படுதலினால், பூர்வபட்சியார் சரியையாதிகளுக்குச் சாதன சதுஷ்டயம் சாதனமாயிருக்கிறதென்றும அதாவது சாதனசதுஷ்டயம் சரியையாதிகட்குக் கீழாயதென்றும், சாதனசதுஷ்டயங்களுக்குத் தனித்தனிப் பேறுயாதென்றும், பிரமாணத்துடன் விடைகூறென்றும் பேசியது அவர் மத சித்தாந்தத்திற்கும், வேதாந்த சித்தாந்தத்திற்கும், வித்தியா ஸ்தானங்களின் சித்தாந்தத்திற்கும் மாறுமென்பது நன்குவிளங்கிய தென்க.

சாதன சதுஷ்டயத்தில் முதற் சாதனமாகிய நித்தியாநித்திய வஸ்து விவேகத்தினால் இகலோகமுதல் சிவசாரூப்பியம் வரைக்கும் அநித்தியம் என்னும் புத்தியும் இரண்டாஞ் சாதனமாகிய இசபர போக விராகத்தினால் அவை துக்கவடிவாயிருத்தலின் அவையிற்றின்கண் ஆசை யின்மையும் உண்டாயிருத்தலின் இவ்விரண்டு சாதன முடையார்க்கே புண்ணியலோகப் பேறு உண்டாகுதல் பொருந்தாததாக, மற்றவிரண்டு சாதனங்களையும் அவையிற்றிற்கு மேற்பட்ட சிரவண மநந நிதித்தியாசனங்களையும் பெற்றவர்களுக்குப் புண்ணியலோகப் பிராப்தி யுண்டாமென்பது எங்ஙனமெனின் கூறுதும் :—

நிராலம்போபநிஷத்.

"பந்தம் யாது?"

என்னும் வினாவிற்கு விடை

"அநாதி அஞ்ஞான வாசனையினாலே 'நான்பிறந்தேன்' என்பது முதலிய எண்ணம் பந்தம்."

"தகப்பன், தாய், சகோதரன், பெண்ஜாதி, பிள்ளை, வீடு, தோட்டம், பூமி முதலியவைகளிலே 'என்னுடையது' என்கிற சம்சாரமாகிய அஞ்ஞான விஷயமான மனோ வியாபாரம் பந்தம்."

"கருத்திருத்துவாதி அகங்கார சங்கற்பம் பந்தம்"

"அணிமாதி அஷ்டைசுவரியம் சித்திக்கவேண்டுமென்கிற ஆசை பந்தம்"

"தேவமனுஷியாதிகளை உபாசிக்கவேண்டுமென்னும் இச்சையாகிற சங்கற்பமே பந்தம்."

"யமம் முதலான அஷ்டாங்க யோகாப்பியாசம் செய்யவேண்டுமென்னுஞ் சங்கற்பமே பந்தம்."

"வருணாசிரம தரும கரும சங்கற்பமே பந்தம்"

"ஆக்ஞை, பயம், சம்சயம் இவைகள் ஆத்மகுணமென்கிற சங்கற்பம் பந்தம்"

"யக்கியம், விரதம், தபசு, தானம் இவைகளுடைய விதியையறிதல் (அவைகளை) நடத்தல் இந்த விஷயமான மனோ வியாபாரம் பந்தம்."

"மோட்ச மாத்திரம் வேண்டுமென்கிற சங்கற்பமே பந்தம்."

என்று கூறியதினால் முன்றாஞ் சாதனமாகிய சமை, தமை, திதீக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதி யென்னும் ஆறின் அடைவாகிய சமாதிசட்க சம்பத்தியும், நான்காஞ் சாதனமாகிய மோட்சவிச்சையென்னும் முமுட்சுத்துவமும், மோட்சத்தையடையச் சற்குருமுன்னிலையிற் செய்யும் சிரவண மநந நித்தியாசனமும் பந்தமென்று விளங்கினமையின் இவற்றிற் கேதுவாயுள்ள சாதனசதுஷ்டயத்தின் முதலாவது சாதனமும் இரண்டாவது சாதனமும் பந்தமென்றேற்பட்டன. படவே, பந்தத்துக்குத்தக்க பயன் நேராயும் அவாந்தரமாயும் வருமென்க. சரியையாதிகளுக்குப் பலப்பிராப்தியுண்டாதல் நேராய் வருவதென்றும், சாதன சதுஷ்டயங்களுக்கும் சிரவணாதிகட்கும் பலப் பிராதிப்தியுண்டாதல் அவாந்தரமாய் வருவதென்றும் உணர்க.

இகலோகத்தையும், சுவர்க்காதிலோகத்தையும் துக்கவடிவினதென்றுரைத்தாலும் சிவசாரூப்பியத்தையும் துக்கவடிவினதென்றுரைக்கலாமோவெனின் சந்தேகமின்றி உரைக்கலாம். எவ்வாறெனின் அது இவ்வாறென்க.

அது வருமாறு:—

"உணருரு அசத்து" என்னும் சிவ ஞான போத சூத்திரப்படியும், "தொன்மையுலகுயிரில்லைதோன்றுவதெல்லாம் அசத்து" என்னும் தேவிகாலோத்தரச் செய்யுட்படியும் சிவசாரூப்பியமும் திரிசியமாயிருத்தலினால்அசத்தாய், காண்பான் காட்சி காணப்படுப்பொருள் என்னும் திரிபுடியோடுகூடியதா யிருத்தலின் துக்க வடிவினதாய் இருக்கிற தென்பதற்கு யாதும் ஆசங்கையின்று. மேலும்.

சூதசங்கிதை முத்திநிலையுரைத்த அத்தியாயத்தில்

"நாடுறுசதாசிவப்பேர்நாட்டுசோரூபமுத்தி
நீடுறுமெவற்றினுக்கும்நிரம்பியவிசேடமாகும்

பாறெவுரைத்தவிந்தப்பதமுத்திமுறையிற்சார்வோர்
ஊடுறுபோகந்துய்ப்பாரொன்றற்கொன்றதிகமாக. (உசு)

என்றும்,

புண்ணியந்தீர்ந்தபின்புபூமியின்விரைந்துமேன்மை
நண்ணியகுலத்துத்தோற்றநண்ணுவரதனுலென்றும்
கண்ணியபிறப்பிறப்புக்கழிதலின்று. (உஎ)

என்றும் கூறுதலினாலும், கூர்மபுராணம் அந்தகாசூரன் சாரூபம் பெற்ற அத்தியாயத்தில் அந்தகாசூரன் கயிலையிற் சென்று ஆண்டுள்ள சிவ கணங்களோடு சண்டையிட்டு இறுதியில் சாரூபம் பெற்றானென் றிருப்பதினாலும் அது துக்க வடிவினதென்பது திண்ணத்திலுந் திண்ணமாம். இன்னும் பூர்வபட்சியாரது நவீனமதத்தின் வண்ணம் சிவ சாரூபம் பெற்றவன் ஆண்டுநின்றே சிவசாயுச்சியத்தை யடையவிரும்புதல் அது துக்கவடிவினதா யிருத்தலைப்பற்றியன்றோ? இன்றேல் விரும்பமாட்டானென்பது தெளிவாம். பின்னும் சிவசாரூபம் பெற்றவன் புண்ணியக் கழிவை நினைக்கும்போது மனங் கலங்கித் துக்கப்படுவான் என்பதும், ஏனையரும் துக்கப்படுவார்களென்பதும் மேற்காட்டியுள்ள சூதசங்கிதையினால் நன்கு விளக்கமானபடியினாலும்; ஆலாலசுந்தரர், வாகீசர், ஸ்கந்தர், நந்தி, பார்வதி முதலியோர் சாப மடைந்தகதை பலநூல்களிலும் காணப்படுகையினாலும் இன்னும் பிறவாற்றாலும் சிவசாலோக்கியமுதலானவைகளும் துக்கமாமென்பது பசுமரத்தாணியாய் நாட்டப்பட்டதென்க.

"சிவசாயுஜ்யமே மோட்சமென்று வேதம் விதந்ததை யாமுமக்கறிவித்தமையால், சிவாகம சித்தமான மோட்சத்தையே வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று"

என்றார்.

சூதசங்கிதை உணத்தகாப்பொருளுரைத்த அத்தியாயத்தில்

முறையினுலகத்தொருவர்க்குதிக்குமுழுச்சிவஞானம்
மறைமுடிவானுதிப்பதன்றிமற்றொன்றானுதியாது. (கச)

என்றும்,

ஆரணத்திற்க்விரோதவாகமச்சார்பினுஞானம்
சீரணவவுதிக்குமெனச்செப்புமால்நான்மறையும். (உ0)

என்றும்,

ஷ பிராமாணிய விசாரத்தில்

வேறு மார்க்கங்களா லெழுஞானம் வினதவா அவித்தையேயென்று, கூறுவ ரறிந்தோர். (கூ)

என்றும்,

ஆரணமார்க்க மொன்றினானே யுண்டாகிடும் புத்தி முத்திகளும் (க0)

என்றும் சதுர்தசவித்தைகளி லொன்றான புராணம் புகல, இவர் தலைகிழாகப் புரட்டி, 'சிவாகம சித்தமான மோட்சத்தையே வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று' என்று பிரமாணமின்றிக் கூறுதல் பைபிலின் முடிவையும் கொரானது முடிவையும் வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று என்பதற்கினமாய் நிற்பதன்றி மற்றியாதாம்?

"தகப்பன், தாய், சகோதரன், பெண்ஜாதி, பிள்ளை, வீடு, தோட்டம், பூமி முதலியவைகளிலே'என்னுடையது' என்கிற சம்சாரமாகிய அஞ்ஞான விஷயமான மனோ வியாபாரம் பந்தம்."

"கருத்திருத்துவாதி அகங்கார சங்கற்பம் பந்தம்"

"அணிமாதி அஷ்டைசுவரியம் சித்திக்கவேண்டுமென்கிற ஆசை பந்தம்"

"தேவமனுஷியாதிகளை உபாசிக்கவேண்டுமென்னும் இச்சையாகிற சங்கற்பமே பந்தம்."

"யமம் முதலான அஷ்டாங்க யோகாப்பியாசம் செய்யவேண்டுமென்னுஞ் சங்கற்பமே பந்தம்."

"வருணாசிரம தரும கரும சங்கற்பமே பந்தம்"

"ஆக்ஞை, பயம், சம்சயம் இவைகள் ஆத்மகுணமென்கிற சங்கற்பம் பந்தம்"

"யக்கியம், விரதம், தபசு, தானம் இவைகளுடைய விதியையறிதல் (அவைகளை) நடத்தல் இந்த விஷயமான மனோ வியாபாரம் பந்தம்."

"மோட்ச மாத்திரம் வேண்டுமென்கிற சங்கற்பமே பந்தம்."

என்று கூறியதினால் முன்றாஞ் சாதனமாகிய சமை, தமை, திதீக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதியென்னும் ஆறின் அடைவாகிய சமாதிசட்க சம்பத்தியும், நான்காஞ் சாதனமாகிய மோட்சவிச்சையென்னும் முமுட்சுத்துவமும்,மோட்சத்தையடையச் சற்குருமுன்னிலையிற் செய்யும் சிரவண மநந நித்தியாசனமும் பந்தமென்று விளங்கினமையின் இவற்றிற் கேதுவாயுள்ள சாதனசதுஷ்டயத்தின் முதலாவது சாதனமும் இரண்டாவது சாதனமும் பந்தமென்றேற்பட்டன. படவே, பந்தத்துக்குத்தக்க பயன் நேராயும் அவாந்தரமாயும் வருமென்க. சரியையாதிகளுக்குப் பலப்பிராப்தியுண்டாதல் நேராய் வருவதென்றும், சாதன சதுஷ்டயங்களுக்கும் சிரவணாதிகட்கும் பலப் பிராதிப்தியுண்டாதல் அவாந்தரமாய் வருவதென்றும் உணர்க.

இஃலோகத்தையும், சுவர்க்காதிலோகத்தையும் துக்கவடிவினதென்றுரைத்தாலும் சிவசாரூப்பியத்தையும் துக்கவடிவினதென்றுரைக்கலாமோவெனின் சந்தேகமின்றி உரைக்கலாம். எவ்வாறெனின் அது இவ்வாறென்க.

அது வருமாறு:—

"உணருரு அசத்து" என்னும் சிவ ஞான போத சூத்திரப்படியும், "தொன்மையுலகுயிரில்லைதோன்றுவதெல்லாம் அசத்து" என்னும் தேவிகாலோத்தரச் செய்யுட்படியும் சிவசாரூப்பியமும் திரிசியமாயிருத்தலினால்அசத்தாய், காண்பான் காட்சி காணப்படுப்பொருள் என்னும் திரிபுடியோடுகூடியதா யிருத்தலின் துக்க வடிவினதாய் இருக்கிற தென்பதற்கு யாதும் ஆசங்கையின்று. மேலும்.

சூதசங்கிதை முத்திநிலையுரைத்த அத்தியாயத்தில்

"நாடுறுசதாசிவப்பேர்நாட்டுசொரூபமுத்தி
நீடுறுமெவற்றினுக்கும்நிரம்பியவிசேடமாகும்

பாறெவுரைத்தவிந்தப்பதமுத்திமுறையிற்சார்வோர்
ஊறெறுபோகந்துய்ப்பாரொன்றற்கொன்றதிகமாக. (உசு)

என்றும்,

புண்ணியந்தீர்ந்தபின் புபூமியின் விரைந்துமேன்மை
நண்ணியகுலத்துத்தோற்றநண்ணுவரதனுலென்றும்
கண்ணியபிறப்பிறப்புக்கழிதலின்று. (உள)

என்றும் கூறுதலினுலும், கூர்மபுராணம் அந்தகாசுரன் சாரூபம் பெற்ற அத்தியாயத்தில் அந்தகாசுரன் கயிலையிற் சென்று ஆண்டுள்ள சிவ கணங்களோடு சண்டையிட்டு இறுதியில் சாரூபம் பெற்றுனென் றிருப்பதினுலும் அது துக்க வடிவினதென்பது திண்ணத்தினுந் திண்ணமாம். இன்னும் பூர்வபட்சியாரது நவீனமதத்தின் வண்ணம் சிவ சாரூபம் பெற்றவன் ஆண்டுநின்றே சிவசாயுச்சியத்தை யடையவிரும்புதல் அது துக்கவடிவினதாயிருத்தலைப்பற்றியன்று? இன்றேல் விரும்பமாட்டானென்பது தெளிவாம். பின்னும் சிவசாரூபம் பெற்றவன் புண்ணியக் கழிவை நினைக்கும்போது மனங் கலங்கித் துக்கப்படுவான் என்பதும், ஏனையரும் துக்கப்படுவார்களென்பதும் மேற்காட்டியுள்ள சூதசங்கிதையினுல் நன்கு விளக்கமானபடியினுலும்; ஆலாலசுந்தரர், வாகீசர், ஸ்கந்தர், நந்தி, பார்வதி முதலியோர் சாபமடைந்தகதை பலநூல்களிலும் காணப்படுகையினுலும் இன்னும் பிறவாற்றுலும் சிவசாலோக்கியமுதலானவைகளும் துக்கமாமென்பது பசுமரத்தாணியாய் நாட்டப்பட்டதென்க.

"சிவசாயுஜ்யமே மோட்சமென்று வேதம் விதந்ததை யாமுமக்கறிவித்தமையால், சிவாகம சித்தமான மோட்சத்தையே வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று"

என்றுர்.

சூதசங்கிதை உணத்தகாப்பொருளுரைத்த அத்தியாயத்தில்

முறையினுலகத்தொருவர்க்குதிக்குமுழுச்சிவஞானம்
மறைமுடிவானுதிப்பதன்றிமற்றென்றுனுதியாது. (கச)

என்றும்,

ஆரணத்திற்கவிரோதவாகமச்சார்பினுஞானம்
சீரணவவுதிக்குமெனச்செப்புமால்நான்மறையும். (உ௦)

என்றும்,

ஷை பிராமாணிய விசாரத்தில்

வேறு மார்க்கங்களா லெழுஞானம் வினைதவா அவித்தையேயென்று, கூறுவ ரறிந்தோர். (கூ)

என்றும்,

ஆரணமார்க்க,மொன்றினுனே யுண்டாகிடும் புத்தி முத்திகளும் (க௦)

என்றும் சதுர்தசவித்தைகளி லொன்றுன புராணம் புகல, இவர் தலைகீழாகப் புரட்டி, 'சிவாகம சித்தமான மோட்சத்தையே வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று' என்று பிரமாணமின்றிக் கூறுதல் பைபிலின் முடிவையும் கொரானது முடிவையும் வேதங் கூறியதெனல் தீர்மானமாயிற்று என்பதற்கினமாய் நிற்பதன்றி மற்றியாதாம்?

அ

இப்படிப்பட்ட வேதபாஹிய பாஷண்டரைக் குறித்தல்லவா.

"கலியில் அதருமத்தால் தருமமும், பொய்யால்மெய்யும், திருடர்களால் அரசர்களும், பெண்களால் புருஷர்களும் அடக்கப்பட்டுத் தாழ்ந்து விடுவார்கள்"

என்று பராசரஸ்மிருதி கூறிற்று? இதுகாறும் எழுதியவற்றால் சாதன சதுஷ்டயங்களுக்குச் சரியையாதி நான்கு வச்சிரலேபமாக நாட்டப்பட்ட தென்க.

## உபநிஷத்துப் பிரமாணங்களை யிகழ்ந்து பேசினாரென்பது.

அத்வைத தூஷண நிக்கிரகமென்னும் நூலில் மேற்கோளாகக் காட்டிய வேதோபநிஷத்துப் பிரமாணங்களைப்பற்றித் தம் மனம் போனவாறு கிறிஸ்தவர், மகம்மதியர், நாஸ்திகர், பிரமசமாஜிகள் முதலியோர் தீயூழ் வழியால் இகழ்ந்து நிந்திக்கிறதுபோல இவரும் இகழ்ந்து நிந்திக்கின்றனர். அவற்றுள் சிலவற்றை மாத்திரம் மறுத்துக் காட்டுவோம். இது கொண்டே மற்றையவற்றிற்கும் மறுப்பு ஸ்தாலிபுலாக நியாயமாக வமைத்துககொள்க.

"மகோபநிஷத்து, நாரதபரிவ்ராஜகோபநிஷத்து, வராகோபநிஷத்து, சர்வ சாரோபநிஷத்து முதலியன பிரமமே உலகம் யாவுமென்றும், பிரமம் சத்தியம் ஜகத் பொய்யென்றும்,இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்திலாரோபிப்பது மித்தையென்றுங் கூறுவதற்கு என்ன கதி?" என்று அத்வைதியார் கேட்டதாக வெழுதி அதற்கு விடை "இது பழைய பாட்டிக்கதை. இவ்வாறு புக்கங்களை நிரப்பி நும்மவர் வெளியிட்ட பீற்றற்சுவடிகள் பல. அவற்றைப் பொருளாக மதியாமல் எம்மனோர் நிஸ்புருகமாகக் கழித்தார்கள். அதையே இப்போ தெடுத்துக்கொண்ட விஷயத்துக் கிணங்க விடை தருவது ஆவசியம்."

என்றார்.

வேதோபநிஷத்து வாக்கியங்களை 'பாட்டிக்கதை' யென்னும் நீரரை வேதபாகிய பாஷண்டராகிய நாஸ்திகர், பவுத்தர், சமணர், கிறிஸ்தவர், மகம்மதியர் முதலிய வகுப்பினரிற் சேர்ந்தவரென்று கொள்ளுவதன்றி, மற்றியாவராகக் கொள்ளப்படும்? வேதோபநிஷத்துப் பிரமாணங்களை 'பாட்டிக்கதை' யென்னும் இத்தகைய பூர்வபட்சியாரோடு வேதோபநிஷத்துப் பிரமாணங்களைக் காட்டிச் செய்யும் வாதம், நாஸ்திகர் முதலியோரிடத்து வேதோபநிஷத்துப் பிரமாணங்களைக்காட்டிச் செய்யும் வாதத்திற்கு ஒப்பாய் நிற்பதன்றி மற்றியாதாய் நிற்கும்? இத்தகைமையோரைப் பற்றியே

ஸ்மிருதிகர்த்தரிலொருவராகிய ஆரீதர்

"வேதங்கள், தரும சாஸ்திரங்கள், பெரியோர்சொல் ஆகிய விவை எந்தத் துராத்மாவுக்குப் பிரமாணமாகாவோ, அவன் தருமங் கெட்ட குருடனே, அவனுக்குத் தன் ஆன்மாவே பிரமாணமாகாது."

என்று கூறினார்போலும்.

இவர் 'நும்மவர் வெளியிட்ட பீற்றற் சுவடிகள்' என்று கூறுகின்றார். இதனால் நியாயத்தின் நெறிநின்று நடுவு நிலையாய் வாதுபுரிந்து உண்மையினை யுணர வேண்டுமென்ற எண்ணம் இவர்க்கின்றென்பது துணிபாகின்றது; அன்றியும் இவரிடத்தில் மரியாதையும் யோக்கியதையும் இன்றென்று கூறுதற்குமிடனாகின்றது; அதுமாத்திரமா, நாமெழுதுஞ் சுவடியை

அத்வைதிகள் பிற்றற்சுவடியெனத் திருப்பிச் சொல்லிவிட்டால் நாமென்ன செய்கிறதென்கிற பரியாலோசனை இவரிடத்தில் இல்லையென் றியம்புதற்கு மிட ஞ்கின்றது இதன்மேல் 'அவற்றைப் பொருளாக மதியாமல் எம்மனோர் நிஸ்புருகமாகக் கழித்தார்கள்' என்றார். நிஸ்புருகமாகக் கழித்தது சமாதானமிருந்தா? இல்லாமலா? சமாதானமிருந்து கழித்துவிட்டார்களெனபதற்குக் காரணமொன் றின்றென்பது அத்வைத விரோதிகளாய்க் கிளம்பிய அரதத்தன், தினகரன், அரக்கோண் வீரபத்திர மூர்த்தி, சபாபதி நாவலர், சோமசுந்தர நாயகர், செந்திநாதய்யர், முருகவேள், சுந்தரன், வெங்கடரமணதாசர், திருப்பேரூர் இராமசாமி சிவாசாரியர், குகதாசர், குண்டோதர சிவாசாரியர், சித்தாந்த சங்கர், குருசாமி சர்மா, யாழ்ப்பாணம் இந்துசாதன பத்திராதிபர் முதலிய மாயாவாத அவைதிக துவித தாந்திரிகர்கள் வீணே முன் வாது தொடுத்து, பின் அத்வைதிகள் எழுதியதற்குப் பதிலெழுத விடமின்றி ஆடி யோய்ந்த பம்பரம்போல் அடங்கியும் ஒடுங்கியும் மறைந்தும் முடிவுரைகூறியொளிந்தும்போயினமையினால் நன்கு விளங்குகின்றமையின், அவர்கள் சுருதி யுக்தி யனுபவ சகிதமாய்ச் சமாதானமெழுதவிடனின்றியே போனார்களென்பது திண்ணத்திலுந் திண்ணமாமென்க. இவ்வாறாக இவர் 'எம்மனோர் நிஸ்புருகமாகக் கழித்தார்கள்' எனல் "சீ! சீ!! இத்திராட்சப்பழம் புளிக்கும்" என்றுரைத்த நரிக்கதைக்கு இனமாமென்க.

"நீர் முதல்கூறியமகோபநிஷத்து 'பாலைநிலத்திற் றோன்றுஞ் சலமுழுதும் பாலைநிலமேதவிர வேறில்லை. மூன்றுலகமும் சகல பிரபஞ்சமும் விசாரணையினால் சின்மாத்திரந்தானே' என்று பிரகாசப்படுத்தியது. பாலை நிலத்தை யொருவன் பாராதபோதுஅதில் சலந்தோன்றுமா? அங்கே பார்த்தவன் அதற்குப் பூர்வம் சலத்தைப் பார்த்திராதபோது அந்தப் பாலைநிலத்திற் சலந் தோன்றுமா? பாலைநிலந் தனியே யிருந்தால் அதற்கேனும் அதி லேனுஞ் சலந் தோன்றுமா? பாலைநிலமும், அதைப்பார்த்த வொருவனும், அவனதற்குப் பூர்வம் பார்த்திருந்த சலமும் சத்தியப்பொருளா யிருந்தாலே அந்தப் பாலைநிலத்தி லவனுக்குப் பின்னர் ஜலந்தோன்றும். இப்படியே பிரமமும், அதைப்பார்த்த வொருவனும், அவனதற்குப் பூர்வம் பார்த்திருந்த வுலகமும் சத்தியப்பொருள்களா யிருந்தாலே அந்தப்பிரமத்திலவனுக்கு உலகந்தோன்றும். இப்படி யலக்கணுண்டுபோகும் போதம் உமக்கு எப்படியோ யுண்மையையுணர்த்தும். இதற்கு ஞாயங்கூறாது உபநிஷத்தென்று எமக்குப் பூச்சிக் காட்டியதனாற்றானே யாமஞ்சுவோமா?"

என்றார்.

உபநிஷத்து வாக்கியத்தை 'அலக்கணுண்டுபோகும் போதம்' என்றும், 'எப்படியோ யுண்மையை யுணர்த்தும்' என்றும், 'உபநிஷத்தென்று பூச்சிக்காட்டியதனாற்றானே யாமஞ்சுவோமா?' என்றும் கூறும் வேத நிந்தகராகிய பூர்வபட்சியார் இன்ன தன்மைக்காக இன்ன உவமை சொல்லப்பட்டதென் றுணராது மகோபநிஷத்து வாக்கியத்தை யாட்சேபித்தது அறியாமையென்றறிக. சேதனசேதன வுலகமானது ஞானசாஸ்திர விசாரணை யில்லா மந்த புத்தியுடையார்க்குப் பொருளாய்த் தோன்றினும் விசாரித்துப் பார்க்குமிடத்து அது தனக்கெனச் சொரூப மின்றி யிருத்தலின் பொய்யென்றும் பொய்யானாலும் அது ஒரு மெய்யையே தனக்குப் பற்றுக்கோடாகப் பற்றியிருக்கின்றதென்றும்; அறிவுபாட்டபாவத்திற்கு எதிர்மறை யாகாது நித்தமா யிருக்கின்ற அந்த மெய்யானது "சின்மாத்திரமா யுள்ளவெறுஞ் சிவனே

திகழ்வான்" என்று பிரமகீதையிலுள்ளபடி சின்மாத்திரமான பிரமமென்றும், அந்தப் பிரமம் பூரண மாதலின் அதனிடத்துத் தனக்கெனச் சொரூபமின்றி யிருக்கின்ற வுலகம் தோற்றல்மாத்திரமா யிருக்கிறதென்றும், அந்தத் தோற்றமான வுலகமும் "நீயலாற் பிறிதுமற் றின்மை" என்று மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியபடி பிரமத்தைத் தவிர வின்றென்றும், இன்றாகவே பாலைநிலத்திற் றோற்றுஞ் சலமுழுதும் பாலைநிலத்தைத்தவிர வேறில்லாமைபோலச் சிவத்தினிடத்திற்றோன்றும் உலகு சிவத்தைத்தவிர வேறில்லையென்றும், அவ்வுலகம் சிவவடிவமே என்றும் உணர்ந்தால் அத்வைததூஷண நிக்கிர நூலார் பிரமாணமாகக் காட்டிய 'பாலை நிலத்திற் றோன்றுஞ் சலமுழுதும் பாலை நிலமே தவிர வேறில்லை. மூன்றுலகமும், சகல பிரபஞ்சமும் விசாரணையினால் சின் மாத்திரந்தானே' என்றுள்ள மகோபநிஷத்து வாக்கியத்தை வேதபாகியராய் நின்று இகழார்! இகழார்!!

"உமக்கு அந்த வாக்கியம் (மகோபநிஷத்து)பிரமாணமாகாதோ"என்ற வினாவையுண்டாக்கி, அதற்குவிடை"விரிவிலாவறிஞர்கள் வேறொரு சமயஞ் செய்தே - எரியினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்' என்ற பிரமாணத்திற் கட்டுண்டொழுகும் யாம் அதிகாரானுகுணமாகஅங்கீகரிப்போம் கண்டீர்"

என்றார்.

சூதசங்கிதை பிராமாணியவிசாரம்.

வேதமார்க்கத்தின் முக்கியமாக விளங்கிடப்பட்ட நஞ்சிவனே தீதகன் முத்தி கொடுப்பவன். (எ)

வேறுமார்க்கங்களா லெழுஞானம் வினைதவா வவித்தையேயென்று, கூறுவரறிந்தோர். (9)

ஆரணமார்க்க மொன்றினானே யுண்டாகிடும் புத்தி முத்திகளும். (10)

இதரமார்க்கங்களுக்கு மப்பிரமாணிய மெடுத்தியம்பல் கூடாது (கரு)

[illegible] வேதமார்க்கமெம்மார்க்கத்தினுஞ் சிறந்தது தெரிந்திடுவீர்.

[illegible] கட்டுப்பட்டவராய் "வேள்வியைவேட்க [illegible] வெவ்வேறு வேதங்கள்" "வேதத் [illegible] "பாடினார் மறைகளான் [illegible] ஞானமெல்லாம் ஆவ [illegible] "அருமறை [illegible] விரிநீர் மிழலை" [illegible] அப்பர் சுவாமிகள் 'விரி [illegible] சொன்னாரேனு [illegible]

என்று விஷ்ணுவை நோக்கிச் சிவபிரான் வேதத்திற்கு மாறுகாத புராணங்களே பிரமாணமென்றும் வேதத்தை மூலமாகக் கொள்ளாத நூல்களெல்லாம் கசட்டு நூல்களென்றும் கூறிய விஷயத்தைத் தழுவியும்,

பிரமகீதை ஐதரேய உபநிடதம்.

"காதலாற்றத்தங் கடவுளரருளால் காலபாகத்தினுலறத்தால், போதராதலினுல் வேதவாதத்தைப் பொருந்துவர். (எ)

என்றுள்ளதற்கிணங்கியும் இருகின்றதாகலின், அதுபற்றி இவ்வேதபாகியர்ச் கேதும் பயனின்றென்றறிக. ஆனுல் அப்பர் சுவாமிகள் 'விரிவிலாவறிவினர்கள் வேறொரு சமயஞ் செய்தே, எரியினுற் சொன்னுரேனு மெம்பிராற்கேற்றதாகும்' என்றது யாரையெனின், வேதத்தையும் வேதத்திற் கூறும் வேள்வியையும் வேதமுடிவான வேதாந்தத்தையும் இகழ்ந்து வரும் சமணர் பௌத்தர் முதலானவர்களையும், அவர் போன்று இகழ்ந்துவரும் இவரினத்தாரையுமேயென் றுணர்க. இஃதிவ்வாருக, இப்பூர்வ பட்சியார் 'அதிகாரானுகுணமாக அங்கீகரிப்போம்' எனல் அற்பன் அரசனை யதிகாரானுகுணமாக அங்கீகரிப்போம் என்பதற்கினைமென்க."பக்குவர்களுக்கேடான வுபதேசம் வேதத்திலுண்டாகையால், அது ஒரு பக்குவ்யைக்குறித் தெழுந்த போதமென் றங்கீகரித்து யாமொதுக்குவோம்."

என்றுர்.

பக்குவர்களுக் கேடான வுபதேசம் வேதத்தி லுண்டென்பது நிச்சயமே. ஆனுல் வேதாந்த மானது ஞானகாண்டத்திற் கூறுகின்றமையின், அதுவே அதனது முடிவான சித்தாந்தமாமென்க. வேதம் சூத்திரன் போன்றதென்றும், ஆகமமுடிவை வேதங் கூறுகின்றதென்றும், வேதத்தால் மோட்சமின்றென்றும், அது சாமானிய நூலென்றும் பந்தநூலென்றும், மோகநூலென்றும், உலகநூலென்றும் கூறும் பாஷண்டிகள் வேதத்தை யங்கீகரித்தாற்றுனென்னை? அங்கீகரிக்காமல் விட்டாற்றுனென்னை? வேதப் புறமதஸ்தராகிய விவர்: வேதத்தைப்பற்றிப் பேசுதல் விவிலியன் வேதத்தைப்பற்றிப் பேசுதற்கினமெனவிடுக்க. வேதத்தில் உலகம் மெய்யென்றும், மாயையென்பதொன்று விவர்த்தமாகவன்றிச் சத்தாகவிருக்கிறதென்றும், சீவன் சிவனைப்போல் சத்தாயிருக்கின்றுன் என்றும்,காரியம் உள்பொருளென்றும் கூறும் வாக்கியங்கள் யாண்டுமின்மையால் அத்வைத சித்தாந்தமே வேதங் கூறுஞ் சித்தாந்தமென்றும், கர்மகாண்டமும் பக்திகாண்டமும் அத்வைத ஞானத்தை யடைவதற்கு அதிகாரானுகுணமாய்ச் சாதகமாக விருக்கின்றதென்றுமறிக. இதுதான் அதிகாரானுகுணமென்பதற்குப் பொருள்.

இதற்குப் பிரமாணம் வருமாறு:—

பிரமகீதை சாந்தோக்கிய உபநிடதம்.

இத்தாலித்தைச்சாதிப்பதென்றதீர்த்தமாடென்ற
லொத்தொவ்வாதவேறுபடத் தோன்று முலகமென்றுரைத்தல்
வைத்தேபாவபுண்ணியமும்வன்னுச்சிரமங்களுமிவற்றே
டொத்தேநின்றேர்சரிதைகளுமுரைக்கும்வேறுமுள்ளனவும். (72)

கேட்பவருடையசித்தம்பரிபாகமிலாதேகொண்டு
மீட்சியாய்வசமதின்றிவேதமோரிடத்திலோர்கால்

திகழ்வான்" என்று பிரமகீதையிலுள்ளபடி சின்மாத்திரமான பிரமமென்றும், அந்தப் பிரமம் பூரண மாதலின் அதனிடத்துத் தனக்கெனச் சொரூபமின்றி யிருக்கின்ற வுலகம் தோற்றல்மாத்திரமா யிருக்கிறதென்றும், அந்தத் தோற்றமான வுலகமும் "நீயலாற் பிறிதுமற் றின்மை" என்று மாணிக்க வாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியபடி பிரமத்தைத் தவிர வின்றென்றும், இன்றாகவே பாலைநிலத்திற் றோற்றுஞ் சலமுழுதும் பாலைநிலத்தைத்தவிர வேறில்லாமைபோலச் சிவத்தினிடத்திற்றோன்றும் உலகு சிவத்தைத்தவிர வேறில்லையென்றும், அவ்வுலகம் சிவவடிவமே என்றும் உணர்ந்தால் அத்வைததூஷண நிக்கிர நூலார் பிரமாணமாகக் காட்டிய 'பாலை நிலத்திற் றோன்றுஞ் சலமுழுதும் பாலை நிலமே தவிர வேறில்லை. மூன்றுலகமும், சகல பிரபஞ்சமும் விசாரணையினால் சின் மாத்திரந்தானே' என்றுள்ள மகோபநிஷத்து வாக்கியத்தை வேதபாகியராய் நின்று இகழார்! இகழார்!!

"உமக்கு அந்த வாக்கியம் (மகோபநிஷத்து)பிரமாணமாகாதோ"என்ற வினாவையுண்டாக்கி, அதற்குவிடை "விரிவிலாவறிஞர்கள் வேறொரு சமயஞ் செய்தே - எரியினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்' என்ற பிரமாணத்திற் கட்டுண்டொழுகும் யாம் அதிகாரானுகுணமாகஅங்கீகரிப்போம் கண்டீர்"

என்றார்.

## சூதசங்கிதை பிராமாணியவிசாரம்.

வேதமார்க்கத்தின் முக்கியமாக விளங்கிடப்பட்ட நஞ்சிவனே தீதகன் முத்தி கொடுப்பவன். (எ)

வேறுமார்க்கங்களா லெழுஞானம் வினைதவா வவித்தையேயென்று, கூறுவரறிந்தோர். (9)

ஆரணமார்க்க மொன்றினானே யுண்டாகிடும் புத்தி முத்திகளும். (10)

இதரமாமார்க்கங்களுக்கு மப்பிரமாணிய மெடுத்தியம்பல் கூடாது
சிதர்தராவேதமார்க்கமெம்மார்க்கத்தினுஞ் சிறந்தது தெரிந்திடுவீர். (கக)

என்றுள்ள பிரமாணங்கட்குக் கட்டுப்பட்டவராய் "வேள்வியைவேட்க வைத்தார்" "விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்" "வேதத்தின் பொருளானாய்" "ஓதினார் வேதம் வாயால்" "பாடினார் மறைகளோன்கும்" "விட்டங்கு வேள்வி வைத்தார்" "நான்மறை ஞானமெல்லாம் ஆவகை யாவர்போலும்" "மறைவல்லாய்" "மறைநான்குமானாய்" "அருமறையினகத்தானை" "வேதமும் வேள்விப் புகையு மோவா விரிநீர் மிழலை" என்று வேதத்தையும் வேள்வியையும் போற்றும் அப்பர் சுவாமிகள் 'விரிவிலா வறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்தே, எரியினாற் சொன்னாரேனு மெம்பிராற்கேற்றதாகும்' என்றருளியது:

## சூதசங்கிதை மோசகனையுரைத்த அத்தியாயம்.

ஒழியாமாயையால் வாதையுண்டு மறைக்கு விரோதமுறு
மொழியார்தருநற்புராணங்கள்முற்றும்பிரமாணங்களே
கழியாமறைமூலகமாகாக்கசட்டுநூல்கள்யாவுமிகு
பழியார்நூல்கள்பிரமாணப்படாதுபடிமுற்றளந்தோயோ. (கூ)

என்று விஷ்ணுவை நோக்கிச் சிவபிரான் வேதத்திற்கு மாருகாத புராணங்களே பிரமாணமென்றும் வேதத்தை மூலமாகக் கொள்ளாத நூல்களெல்லாம் கசட்டு நூல்களென்றும் கூறிய விஷயத்தைத் தழுவியும்,

பிரமகீதை ஐதரேய உபநிடதம்.

"காதலாற்றத்தங் கடவுளரருளால் காலபாகத்திஞலறத்தால், போதராதலிஞல் வேதவாதத்தைப் பொருந்துவர். (எ)

என்றுள்ளதற்கிணங்கியும் இருகின்றதாகலின், அதுபற்றி இவ்வேதபாகியர்க் கேதும் பயனின்றென்றறிக. ஆனல் அப்பர் சுவாமிகள் 'விரிவிலாவறிவிஞர்கள் வேருெரு சமயஞ் செய்தே, எரியிஞற் சொன்ஞரேனு மெம்பிராற்கேற்றதாகும்' என்றது யாரையெனின், வேதத்தையும் வேதத்திற் கூறும் வேள்வியையும் வேதமுடிவான வேதாந்தத்தையும் இகழ்ந்து வரும் சமணர் பௌத்தர் முதலானவர்களேயும், அவர் போன்று இகழ்ந்துவரும் இவரினத்தாரையுமேயென் றுணர்க. இஃதிவ்வாருக, இப்பூர்வ பட்சியார் 'அதிகாரானுகுணமாக அங்கீகரிப்போம்' எனல் அற்பன் அரசனே யதிகாரானுகுணமாக அங்கீகரிப்போம் என்பதற்கினமென்க."பக்குவர்களுக்கீடான வுபதேசம் வேதத்திலுண்டாகையால், அது ஒரு பக்குவியைக்குறித் தெழுந்த போதமென் றங்கீகரித்து யாமொதுக்குவோம்."

என்ருர்.

பக்குவர்களுக் கீடான வுபதேசம் வேதத்தி லுண்டென்பது நிச்சயமே. ஆனல் வேதாந்த மானது ஞானகாண்டத்திற் கூறுகின்றமையின், அதுவே அதனது முடிவான சித்தாந்தமாமென்க. வேதம் சூத்திரன் போன்றதென்றும், ஆகமமுடிவை வேதங் கூறுகின்றதென்றும், வேதத்தால் மோட்சமின்றென்றும், அது சாமானிய நூலென்றும் பந்தநூலென்றும், மோகநூலென்றும், உலகநூலென்றும் கூறும் பாஷண்டிகள் வேதத்தை யங்கீகரித்தாற்ருனென்னே? அங்கீகரிக்காமல் விட்டாற்ருனென்னே? வேதப் புறமதஸ்தராகிய விவர்: வேதத்தைப்பற்றிப் பேசுதல் விவிலியன் வேதத்தைப்பற்றிப் பேசுதற்கினமெனவிடுக்க. வேதத்தில் உலகம் மெய்யென்றும், மாயையென்பதொன்று விவர்த்தமாகவன்றிச் சத்தாகவிருக்கிறதென்றும், சீவன் சிவனேப்போல் சத்தாயிருக்கின்ருன் என்றும்,காரியம் உள்பொருளென்றும் கூறும் வாக்கியங்கள் யாண்டுமின்மையால் அத்வைத சித்தாந்தமே வேதங் கூறுஞ் சித்தாந்தமென்றும், கர்மகாண்டமும் பக்திகாண்டமும் அத்வைத ஞானத்தை யடைவதற்கு அதிகாரானுகுணமாய்ச் சாதகமாக விருக்கின்றதென்றுமறிக. இதுதான் அதிகாரானுகுணமென்பதற்குப் பொருள்.

இதற்குப் பிரமாணம் வருமாறு:—

பிரமகீதை சாந்தோக்கிய உபநிடதம்.

இத்தாலித்தைச்சாதிப்பதென்றதீர்த்தமாடென்ற
லொத்தொவ்வாதவேறுபடத் தோன்று முலகமென் றுரைத்தல்
வைத்தேபாவபுண்ணியமும்வன் ஞச்சிரமங்களுமிவற்ருே
டொத்தேஙின்ருேர்சரிதைகளுமுரைக்கும்வேறுமுள்ளனவும். (72)

கேட்பவருடையசித்தம்பரிபாகமிலாதேகொண்டு
மீட்சியாய்வசமதின்றிவேதமோரிடத்திலோர்கால்

காட்சியதளதுபோலப்பரத்தினையொழிந்துவேறு
மாட்சியிலொன்றுண்டாகவகுத்துரைசெய்ததன்றே. (71)

சுகமொடுதுக்கம்பூதம்பௌதிகமிதுவேயென்றல்
சகமுடைத்தாயசத்தைவேறென்றதகைமைதானு
மகமறிவென்றுநின்றவறிவினில்வேறியாவுந்
தகவுளவுண்மையென்றேசாற்றிடுந்தன்மைதானும். (73)

ஓதுகின்றநூல்பலவுமுரைக்குந்தர்க்கமுள்ளனவும்
பேதித்துள்தாமிகவுமெனப்பேணிச்சுருங்கச்சொல்லுகையும்
ஏதமின்றியித்தனையும்பரத்தின்வேறென்றியும்புவது
நீதியாகவுளவெவ்வையுநின்றேநிகழ்த்துமாமறைதான். (76)

பரமாயுள்ளமறைதானேபாகமானோரறிவுக்குத்
தரமாயண்டும்பரிசாகச்சாற்றியவர்கட்கிதமாகத்
திரமாயுள்ளமழுங்குறினுஞ்சிறிதேயெல்லா
விரதம்போலுரமாய்த்தானிப்படியென்றேயுபதேசித்ததுண்மையினால்.

சாதனமாகுஞ்சதுட்டயங்கள்சமைந்துவந்த்தன்மையர்க்கு
நீதியாகவருமறைதானின்றேயிவர்களறியும்வணம்
பூதமாயும்புவனங்கள்பிறவுமாகியிருந்ததுவு
மேதமில்லாதொன்றாயபரமேயென்றேயியம்பினதால். (77)

"மேலே நீர்காட்டிய வராகோபநிஷத்து 'கிளிஞ்சிலில் வெள்ளி எப்படி (அக்கியானத்தினால்) கற்பிக்கப்படுகிறதோ அப்படிப்போல, என் (பிரம்) னிடத்திலேயே மாயாமயமான மகதாதி ஜகத்தான்து மாயையினாலே கற்பிக்கப்படுகிறது' என்று கூறியதன்றோ? கிளிஞ்சலில் வெள்ளியை அஞ்ஞானத்திற் கண்ட வொருவனைப்போலப் பிரமம் தன்னிடத்திலே அஞ்ஞானத்தினாலே ஜகத்தைக் கண்டதாக நீரொப்பிய பிறகு அஞ்ஞானகலுஷித வஸ்துவாகிய அதற்கு ஏற்றம் பகர்வதெங்ஙனே?"

என்றார். கிளிஞ்சலில் வெள்ளி கற்பிக்கப்பட்டிருக்கிறதுபோலப் பிரமத்தில் உலகு கற்பிக்கப்பட்டிருக்கிறதென்று ஷை உபநிஷத்துக் கூறினால் இவர் 'கிளிஞ்சலில் வெள்ளியை அஞ்ஞானத்தினாற் கண்ட வொருவனைப் போல, பிரமம் தன்னிடத்திலே அஞ்ஞானத்தினாலே ஜகத்தைக் கண்டதாக நீரொப்பியபிறகு' என்று மறுப்பது மறுப்பிற் சேர்ந்ததென்றொப்பப்படுமோ? இராமனிடத்தில் இலட்சுமணன் தோற்றமுண்டென்றால், இராமன், தன்னிடத்தில் தோற்றமாயுள்ள இலட்சுமணனைக் காணவேண்டுமென்பதும், அஞ்ஞானத்தினாற் கண்ட மற்றொருவனைப்போல் காண வேண்டு மென்பதும் விவேகிகளது கூற்றாகாமைபோல, பிரமத்தினிடத்தில் மாயாமயமானவுலகு கிளிஞ்சலில் வெள்ளி கற்பிக்கப்பட் டிருக்கிறதுபோல இருக்கிறதென்றால் அஞ்ஞானத்தினாற் கண்ட வொருவனைப்போல், பிரமந் தன்னிடத்திற் கற்பிக்கப்பட்டிருக்கிற வுலகைக் காணவேண்டுமென்று இவர் எவ்வாறுகொள்ளலாம்? இராமன் தன்னிடத்திற் கற்பிதமாய்த் தோன்றுகிற இலட்சுமணனைக் காணுதல் எவ்வாறின்றோ, அவ்வாறே பிரமந் தன்னிடத்திற் கற்பிதமாய்த் தோன்றுகிற வுலகத்தைக் காணுத லின்றென்க. இன்றாகவே, பிரமந் தன்னிடத்திற் கற்பிதமாயிருக்கிறவுலகை அஞ்ஞானத்தினாற் கண்டவொருவனைப் போலக் காணவேண்டு மென்பது அவலக் கேள்வியாமென்க. இத்தகையரைப்பற்றித்தான் நாயனார்

"அரங்கின்றிவட்டாடியற்றேநிரம்பிய
நூலின்றிக்கோட்டிகொளல்"

என்றார்போலும்.

"கிளிஞ்சலில் வெள்ளி உண்மையிற் கிடையாதன்றே" என்றோர் வினாவைக் கிளப்பி, அதற்கு விடை "இப்போது யாம் கிடைத்தது, கிடைக்கவில்லை யென்பதைப்பற்றிப் பேசவந்த தில்லை. கிடையாததைக் கிடைத்ததாக மருண்டவஸ்து பரமாகுமா என்பதே எமதாசாங்கை"

என்றார்.

கிளிஞ்சலில்வெள்ளி எப்படித் தோற்றத்தோடுகூடிய பொய்யாயிருக்கிறதோ, அப்படியே பிரமத்தினிடத்தில் உலகு தோற்றத்தோடு கூடிய பொய்யா யிருக்கிறதென்பது வரைக்கும் உவமையேயன்றி, சாண்பான் ஒருவன் வேண்டு மென்பதற்கும், அது பரமா யிருக்க வேண்டு மென்பதற்கும் கிளிஞ்சல் வெள்ளி உவமையன்று. உவமை யிலக்கணமறியாது தாறுமாறாகப்பேசும் இப்பூர்வபட்சியாரது மருட்சி யென்ஞான்று நீங்குமோ? கிளிஞ்சலில் கற்பிதப் பொய்யாயிருக்கிற வெள்ளியைப்போல, பிரமத்தில் கற்பிதப் பொய்யா யிருக்கிற உலகு: தலையும் வாலும் கூடிய பாம்பைப்போன்று சேதனுசேதனமாயிருக்கிற தென்பதை யறியாது, மருண்ட வஸ்து வேறொன்றிருக்க வேண்டுமென்றும், அது பரமா யிருக்கவேண்டுமென்றும் கூறுவது அறியாமையேயாம். அறியாமையாக, மீண்டும் "அதனைப் பசு வென்பதே சித்தம். அதனைப் பதி அல்லது பிரமம் என்றது ஆரோபமென்றறியக்கடவீர்" என்றிப்பூர்வபட்சியார் கூறியதே ஆரோபமாமென்றறிக. "மலின சேதனமாகிய சீவன் அல்லது ஆத்மாவினிடத் தேற்றிய பிரம பட்டத்தினுண்மை இனைத்தென்று வெளியாகாநிற்கும்" என்றார். மலின சேதனமாகிய சீவன் பிரமத்தினிடத்தில் கற்பிதப்போலிப்பொருளாயிருக்கிறானென்றும், ஆத்மா என்னும் பெயர் பிரமத்தின் பரியாயப் பெயர்களி லொன்றென்றும் வேத வேதாந்த சாஸ்திரங்கள் கூறுவதை யறியாது, 'பிரம பட்டத்தி னுண்மை இனைத்தென்று வெளியாகும்' என்கிறார். இதனால் இவரது அறியாமை வெளியாயினதே யன்றி வேறென்னை வெளியாயது? பிரமத்தில் கற்பிதத்தோற்றமாயிருக்கிறசீவன் படுகிற சுகதுக்கம், பிறப்பிறப்பு முதலியன பிரமத்தைச் சாராவோவெனின், கானனீரினது அசைவு கானலைச் சாராமைபோலவும், அவ்வசைவு உண்மையில் கானலை விட்டிராமைபோலவும் சீவன் பிரமத்தில் கற்பிதமா யிருக்கின்றமையின், சீவனது சுகதுக்காதிகள் பிரமத்தைச் சாராமலிருக்கின்றனவென்க. இதற்குப் பிரமாணம் வருமாறு:—

யசுர்வேதம் கடோபநிஷத் ஐந்தாவது வல்லி.

"எல்லாலோகத்திற்கும்கண்ணாயிருக்கிற சூரியன் எப்படிக்கண்ணுக்குத் தோற்றுகிற வெளித்தோஷங்களாலே ஆக்கிரமிக்கப்படுகிறதில்லையோ, அப்படியே ஒருவனாயிருக்கிற விலட்சணமான பரமாத்துமா எல்லா ஜீவர்களுக்கும் அந்தராத்துமாவா யிருந்தாலும் உலகத்தின் துன்பத்தால் பரிசிக்கப்படுகிறதில்லை."

இவ்வளவு கூறியபின்னர் "பூதங்களல்ல பொறியல்ல வேறுபுலனல்ல வுள்ள மதியின், பேதங்களல்ல விலையன்றிநின்ற பிறிதல்லவென்று பெருநூல் வேதங்கிடந்து தமோறும் வஞ்ச வெளியென்ப கூடன்மறுகிற், பாதங்களோவ வளையிந்தனுதி பகர்வாரை யாயுமவரே' என்னுமித்திருவாக்கில்

தேகவாதமுதல் சிவ சித்தாந்தமீருகப் பிரகாசப்படுத்தி யிருத்தல்காண்க. இதில் 'பிறிதல்ல' என்றதே ஏகாத்மவாதத்தை அங்கீகரித்து நிஷேதித்த படியாம்''

என்முர்.

ஷை செய்யுள் திருவிளையாடற் புராணம் நான்மாடக்கூடலான படலத்திலுள்ள காப்புச்செய்யுள். இதமொழிபெயர்ப்பு நூலானமையின், மொழிபெயர்த்தவராற் பாடப்பட்ட காப்புச் செய்யுளைப்பற்றிப் பேசுதல் அநாவசியகமாயினும் அதுதான் யாது கூறுகின்றதென் முராய்வாம். அச்செய்யுளானது மறைமுதலான சிவம்: பூதமன்று, பொறியன்று, புலனன்று, உள்ளத்தான் மதிக்கப்பட்ட பேதப் பொரு ளன்று, இவற்றை விட்டு நின்ற பிறிது பொருளுமன்று என்று நேதிநேதிசெய்தும், அது வேதங்கிடந்து தமொறும் படியான வஞ்ச வெளியென்றும் கூறி, ''ஆகமுதலன நேதியது செய்து நின்ற ஆருயி (கூடஸ்தனை) ரையறிவித்த லதத்துவாவிருத்தி'' என்றுகூறிய வேதாந்த சூளாமணியின் கருத்தையும், ''வாக்குக்கெட்டா தேகமாம் பிரமமென்றும்'' என்றுகூறிய கைவல்லிய நவநீதக்கருத்தையும் அநுவாதஞ் செய்ததே யன்றி இவரது சித்தாந்தத்தை ஸ்தாபிக்கவில்லையே. இன்முக இவர் ஏதோ தம்மத சித்தாந்தத்தை யச்செய்யுள் கூறியதாக மனப்பால் குடித்து வாய்ப்பந்தர் போடுவதென்னை? அச்செய்யுள் தேகவாதமுதல் சிவ சித்தாந்த மீருகப் பிரகாசப்படுத்தினுல் அதனுல் இவர் கொண்டுள்ள வேதவிரோத மாயாவாத துவித தாந்திரிக சித்தாந்தத்தைப் பிரகாசப்படுத்திய தென்பதென்னே ! ''மறைவழி மதங்கட்கெல்லா மறைபிரமாணம்'' என்றுகூறிய திருவிளையாடற் புராணத்தின் காப்பு அம்மறைக்கு விரோதமாகக் கூறுமா ?

'பூதங்களல்ல' என்ற செய்யுளில் சிவசித்தாந்தம் இருக்கிறதென் றிவர் கூறியதற் கோர்காரணம் புலப்படுகிறது. அதாவது பெருநூலாகிய வேதங் கிடந்து தமொறும் வஞ்சவெளி என்று கூறியதினுல் சிவாகமம் தமொமுது நிற்கும் வஞ்சமிலாவெளி யென்னும் கருத்துப்போலும்.

**பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்.**

நாமரூபம் வேறும் உண்மையிலெல்லாம் பொய்யாலுண்டாகும். (18)

என்றும்,

**ரிபுகீதை 2-வது அத்தியாயம்.**

நாமமுருவெவையுமிலாப்பிரமநீயே. (5)

என்றும்,

**திருவாசகம்.**

ஒருநாமமோருருவமொன் றுமில்லாற்காயிரம்
திருநாமம் பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ

என்றும்

உள்ள பிரமாணப்படி கற்பிதநாமங்களமைந்துள்ள மறைமுதலை விட்டு விடாத லட்சணையென்னும் பாகத்தியாக லட்சணையினுலறிவதன்றிக் காண்டல், கருதல், உவமை என்னு மூவகை யளவையினுலும் அறிதல்முடியாது. அதுவேயுமன்றி உரையளவையாகியும் பெருநூலாகியுமுள்ள வேதத்தினுலும் வாச்சியார்த்தமாக அறிதல் முடியாமையின், 'பெருநூல் வேதங் கிடந்து தமொறும் வஞ்சவெளி' என்று அச்செய்யுள் கூறியதென்க. அங்ஙனமே

யன்றி, சிவாகமந் தமோரு தறியுமென்கிற கருத்தோ டன்றென்க. பெரு நூலாகிய வேதமே பிரமத்தை யறியத் தமோறுமானால், சிறு நூலாகியும் வேதமார்க்கத்தையடையச் சோபானமாயுள்ள ஆகமங்களிலொன்ருனதாயு முள்ள சிவாகமம்: தமோருதிருக்குமோ ? பிரமம் வேதத்தா லறியப்படாது; தந்திர (ஆகமம்) த்திரத்தா லறியப்படும் என்று கூறும் தாந்திரிகரை மறுத் தற்கன்ரு பரமாத்வைதியான மாணிக்கவாசக சுவாமிகள் "இத்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க், கத்தந்திரத்தி னவ்வயினௌித்தும்" என்று திரு வாய் மலர்ந்தருளினுர்? அம்மாணிக்கவாசக சுவாமிகளே விவர்த்தகாரியமான அரவு கயிறன்ருயினும் கயிற்றைத்தவிரப் பிறிதன்று என்னும் கருத்துற,

கோயிற் றிருப்பதிகத்தில்

இன்றெனக்கருளியிருள்கடிந்துள்ளத் தெழுகின்றஞாயிறேபோன்று
நின்றநின்றன்மைநினைப்பறநினைந்தேன் நீயலாற்பிறிதுமற்றின்மை [சிவனே
சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்ருந் திருப்பெருந்துறையுறை
ஒன்றுநீயல்லையன்றியொன்றில்லை யாருன்னையறியகிற்பாரே. (எ)

என்று கூறியதோடு

திருவேசறவில்

உண்மையுமாய் இன்மையுமாய்ப்பூத்தானே. (அ)

என்றும்,

திருப்பொற்சுண்ணத்தில்

மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினுர்க்கு. (உ0)

என்றும்,

திருச்சதகத்தில்

உண்மையுமா யின்மையுமாய். (கடு)

என்றும் இன்னும் இவை போன்றபலவும் திருவாய் மலர்ந்தருளி யிரு ப்பதனுல், பிரமம்: பூதம், பொறி, புலன் முதலானவைகள் அல்லவென்றும், ஆயினும் அவைபிரமத்திற்குப் பிறிதல்லவென்றும் பெறப்பட்டன. பெறப்ப ட்டவே, இப்பூர்வபட்சியார் 'இதில் பிறிதல்ல என்றதே ஏகான்மவாதத்தை யங்கீகரித்து நிஷேதித்தபடியாம்' என்றது பெரும் பேதமையாய்க் கழிந்த தென்க. ஷை விவர்த்த உவமானத்தை யனுசரித்தே அம்மாணிக்க வாசக சுவாமிகளும் 'உண்மையுமாய் இன்மையுமாய்ப் பூத்தானே' என்பதாதியால் உண்மையான கயிறு இன்மையான அரவானது போலவும், உண்மையான கானல் இன்மையான நீராஞற்போலவும், உண்மையானகிளிஞ்சல் இன்மை யான வெள்ளியானற்போலவும் உண்மையான பிரமம் இன்மையான வுலகா யிருக்கிறதென்று நன்கு விளக்கினரென் றறிக. இதுநிற்க ; பிரமத்துக்குச் சுருதியாதிப் பிரமாணப்படி யாத்மாவென் ருேர்பரியாயப்பேரிட்டு அத் வைதிகள் கூறினுல் அதுகாரணமாக அவர்களை ஏகாத்துமவாதிகளென் றிகழ்வது நியாயமாமோ ? அத்வைதிகளை ஏகான்மவாதிகளென் றிகழும் அநேகாத்தும வாதிகளாகிய இத்துவிதக் கிழக்கொசுக்கள் "சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே" என்று மகுடங் கொடுத்தெழுதிய அக்கினி பர்வதப் புஸ்தகத்திற்குப் பதிலெழுதாது ஒடியொளிந்ததேனே ?

"ஆத்மானம் பரமாத்மானம் அந்தராத்மாநமேவச ஜ்ஞாத்வாத்ரிவிதமா த்மாநம் பரமாத்மானமாச்ரயேத்' என்று சுருதி கூறுகின்றது. இதில் ஆத்மா பரமாத்மா என்று பிரஸ்தாப முண்டாயினமையாலும், பரமாத்மாவையே ஆசிரயிக்கவேண்டியதென்று வியவஸ்தை யேற்பட்டமையாலும், பரமாத்மாவைக்காட்டிலும் ஆத்மா குறைந்த நிலைமையினதென்று நிச்சயிக்கப்பட்டது. பரமாத்துமா ஆசிரயிக்கப்படுவ தென்பது கொண்டு ஆத்மா ஆசிரயிப்பது என்று பெறப்படுகின்றது. இதனால் ஆத்மாவே பிரமம் என்னும் வாதம் நசித்தது."

என்றார். சுருதியைச் சூத்திரன் போன்றதென்றும், அலக்கணுண்டு போகும் போதம் என்றும், பழைய பாட்டிக் கதையென்றும், உபநிஷத் தென்று பூச்சிக் காட்டியதினாற்றானே யாம் அஞ்சுவேமோ என்றும் கூறியிகழ்ந்த இப்பூர்வபட்சிக்கு ஈண்டுச் சுருதி, பிரமாணமாயதற்கு ஓர் காரண மிருக்கவேண்டும். காரண மில்லாவிட்டால் இச்சமயத்தில் சுருதி வாக்கியத்தை யெடுத்துக் காட்டமாட்டார். அக்காரணம் யாதென்று ஊகிக்குமிடத்து, கிறிஸ்தவர், மகம்மதியர், பிரம சமாஜிகள் முதலியோர்: பட்டணத்தார் பாடல், சிவ வாக்கியர்பாடல், தாயுமானவர் பாடல் முதலானவைகள், தங்களுக்குப் பிரமாண மல்லவென்று கொண்டிருந்தும், வைதிகர்களை நோக்கிச் சாதியென்பதொன்றில்லை, மறுபிறப் புண்டென்பது பொய், விக்கிரகாராதனை செய்வது பாவம் என்றுகூறி, பட்டணத்தார் முதலியவர்களது உட்கருத்தறியாது அவர்களது பாடல்களை மேற்கோளாகக் காட்டி, பட்டணத்தார் விக்கிரக பூசை செய்வது கூடாதென்கிறார் பாருங்கள்; சிவவாக்கியர் பிறப்பில்லை யென்கிறார் பாருங்கள்; தாயுமானவர் சாதி யில்லை யென்கிறார் பாருங்கள் என்று கூறுவது போல, இப்பூர்வபட்சியாரும் சுருதி வாக்கியத்தை ஈண்டுப் பிரமாணமாகக் காட்டினாரென்று கொள்ளல் வேண்டுமென்க. இவர் யதார்த்தமாய்ச் சுருதி வழி யொழுகுகின்றவரா யிருந்தால் சுருதியைச் சூத்திரன்போன்ற தென்பதான சொற்றொடர்களால் நிந்தித்துக் கூறுவரா? கூறார்! கூறார்!! இனி இவர் காட்டிய சுருதி வாக்கியத்தைக் கவனிப்பாம்.

மேல் இவர் காட்டிய சுருதிவாக்கியத்திற்குப் பொருள் "ஆத்மாவென்பது: ஆத்மா, பரமாத்துமா, அந்தராத்துமா என மூவகைத்து என்றறிந்து பரமாத்மாவை ஆச்ரயிக்கவேண்டும்" என்பது. இதனால் யாது பெறப்படுகின்றதென்னின் ஆத்மா (பிரமம்) வென்பதொன்றே ஆத்மா (பிரமம்) வாய் இருப்பதன்றி, பரமாத்மா வாகவும் (ஈசுவரனாகவும்) அந்தராத்மா வாகவும் (சீவனாகவும்) இருக்கிறது. அந்தராத்மாவாகிய சீவன் பரமாத்மாவாகிய ஈசுவரனை மோட்சம் அடையுமாறு ஆச்ரயமாகப் பற்றவேண்டும் என்பதேயாம். ஒரு ஆத்துமா (பிரமம்) வே பரமாத்துமாகவும் அந்தராத்மாவாகவும் இருத்த லெவ்வாறு கூடுமெனின், பிருதிவி யொன்றே: மலை, விருட்சம், மண்டபம், சுவர் முதலாகவும், ஆகாயமொன்றே: கடாகாசம், மடாகாசம், பர்வதாகாச முதலாகவும், ஒருவனே: நடன சாலையில் அரிச்சந்திர னென்றும் இந்திரனென்றும் கட்டியக்கார னென்றும் வருவதுபோலவும், ஒரு சலமே: சமுத்திரம், நதி ஏரி குளம் கால்வாய் முதலாகவும் உபாதி வேறுபாட்டால் ஆவனபோன்று ஆன்மா வொன்றே உபாதி வேறுபட்டால்

### சூதசங்கிதை ஆன்மானன்ம விவேகம்.

அவிர்சான்றென்றுயிருந்தாலுமந்தக்கரணபேதத்தாற்
குவியாப்பேதவிவகாரப்படுங்கூடருத்திராதியரும்
கவலாதுயர்சின்மாத்திரஆன்மாவின்கண்ணேகறையில்லாத்
தவமேகொண்டரகஞ்சத்தத்தைச்செய்வார்கள்பிரயோகம். (௧௬)

என்றும்,

### ஷ பரமவிஞ்ஞானம்.

முன்னுமவித்தையாற்பசுபேதமுமொய்வலியமாயையால்
பன்னுபரதத்துவ பேதமும் கற்பிக்கப்பட்டது. (௬)

என்றும்,

### மைத்திராயண்ணியுபநிஷத் ரு-வது பிரபாடகம்.

இந்த (ஆத்மா) ஒருவனே மூன்றாகவும், எட்டாகவும், பதினொன்றாக வும், பன்னிரண்டாகவும், அநேகமாகவும் இருக்கிறான்.

என்றும் உள்ள பிரமாணங்களின் வண்ணம் ஈசுவரனாகவும் சீவர்களா யும் இருக்கின்றதென்க.

### கைவல்லியநவநீதம் சந்தேகந் தெளிதற்படலம்.

அகமெனுமான்மா பூரணம் ஏகம் அநேகவிதம் சீவர். (௬அ)

என்றும்,

### வாசுதேவமனனம் உபயார்த்த நிரூபகம்.

ஆத்மா (பிரமம்) வும் காரிய ரூபமாய்ப் பரிணமிக்கப்பட்ட அநாத்ம பதார்த்தத்துடன் கூடி, தேவதத்தன் என்றும், யக்கியதத்தனென்றும், ராம னென்றும், கிருஷ்ணனென்றும், கோபாலனென்றும், கோவிந்தனென்றும் அநேகவிதமாய்த் தோற்றுகின்றது.

என்றும் உள்ள அத்வைத கிரந்தங்கள் ஆத்மாவென்பது பூரணமாயும் ஏகமாயுமுள்ளபிரமம்என்றும்அவ்வாத்மாவேஉபாதியால்பலபேரைப்பெற்று ச்சீவர்களா யிருப்பது என்றும் கூறுவதையும், ஷ கைவல்லியம் தத்துவ விளக்கப் படலத்தில் மாயோபாதிகன் ஈசுவரனென்றும் அவித்தையோபாதி கன் சீவன் என்றுங் கூறிப் பின்னர்ச் சந்தேகந் தெளிதற் படலத்தில்

மனைவிலங்கறு மைந்தனே கற்பக மரங்கனல்புனன்மூன்றும்
தனையடைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும்
அனைய வீசனு மடைந்தவர்க்கருள் செய்வனகன்றவர்க் கருள்செய்யான்
இனைய குற்றங்க ளவர்குற்றமாகு மென்றெண்ணி நீ யறிவாயே. (௬௧)

என்று ஈசுவரனைச் சீவன் ஆசிரயிக்க வேண்டுமென்றும், ஆசிரயிக்கா விட்டால் தீங்குண்டாமென்றும், ஈசுவரன் உயர்ந்தவன் ஜீவன் தாழ்ந்தவ னென்றும் கூறுவதையும் பூர்வபட்சியா ரறிந்திருந்தால் 'ஆத்மாவே பிரமம் என்னும் வாதம் நசித்தது' என்று மறந்துங் கூறார்! கூறார்!!



"பாரதி வாணிதோணி" என்னும் நிகண்டு வாக்கியத்தில் வாணிக்குந் தோணிக்கும் பொதுவாயுள்ள பெயர் பாரதி யென் றேற்படுகின்றது. இதில் பாரதி யென்பது வாணிக்குந் தோணிக்கும் பொதுவானலும் மேல்வரும் சிறப்புப் பெயராலும் சிறப்பு வினையாலும் வாணி யென்றுந் தோணியென் றும் அறிவதுபோல, பிரமத்திற்கும் சீவனுக்கும் பொதுவாயுள்ள ஆத்மா வென்னும் பெயரை இயைபு நோக்கிப் பிரமம் என்றும் சீவனென்றும் அறியவேண்டும். அவ்வாறு அறிய விரகின்றி, சீவனென்றே பொருள்கொள் வது

"பொதுப்பெயர்வினைகளின்பொதுமைநீக்கும்
மேல்வருஞ்சிறப்புப்பெயர்வினைதாமே"

என்னும் சூத்திரத்தையறியாக் குற்றமாமென்க.

மேல் இவர் காட்டிய சுருதி வாக்கியம் 'ஆத்மாவென்பது ஆத்மா, பர மாத்துமா, அந்தராத்மா என மூவகைத்து' என்று கூறுதலால் ஆத்மாவெ ன்பது ஷை மூன்றுக்கும் பொதுவென விளங்குதலின், ஆத்மா வென்னும் பெயர் மேல்வரும் சொல்லை நோக்காது பொருளுரைத்தல் கூடாது. கூடா தாகவே இப்பூர்வ பட்சியார் 'ஆத்மாவே பிரமமென்னும் வாதம் நசித்தது' என்று கூறிய கூற்று இவர்க்கே கூற்ரும். இன்னும் இவர் காட்டிய சுருதி வாக்கியத்தில் ஆத்மாவென்றுள்ளதற்குப் பொருள் மேல் யாம் காட்டியுள்ள யுத்தி யனுபவங்களின்படியும் சுருதிப் பிரமாணங்களின் படியும் சூதசங்கி தைப் பிரமாணங்களின் படியும் பிரமம் என்றேற்படுதலின் சலந்திரன் தன் கை யாயுதத்தால் தானே மடிந்தாற்போலப் பூர்வபட்சியார், தாம் காட்டிய பிரமாணத்தினலேயே மறுக்கப்பட்டுப் போனரென்க.

இப்பூர்வ பட்சியார் கூற்றின்படி ஆத்மா வென்னும் பெயர் சீவனுக்கே யுள்ளது, பிரமத்திற் கின்றெனின், அப்போது ஆத்மா என்னும் பெயர் பிர மம் அல்லது சிவத்திற்கு வராமல் சீவனுக்கே வரவேண்டும். அவ்வாறின்றி ஆத்மா வென்பது பிரமமென்றும் பிராமணமாயுள்ள வித்தைகள் கூறுத லால் 'ஆத்மாவே பிரமமென்னும் வாதம் நசித்தது' என்று கூறிய பூர்வபட்சி யாரது துர்வாதம் அடியோடே நசித்த தென்க.

"ஆயின், சில சுருதிகளில் ஆத்மாவினிடத்திலிருந்தே எல்லாமுண்டா யினவென்று(அவ்வாத்மாவே பரதத்துவ வஸ்துவென்பது போதரக்) கூறுவ தென்னை?" என்று அத்வைதியார் கேட்டதாக வெழுதி, அதற்கு விடை "இவ்வாசங்கை நிவிர்த்யர்த்தமே இதுகாறும் யாம் பிரசங்கித்து வந்தோமா கையால், நீர் மீண்டும் வினவியது மிகையாம். பிரமமல்லாத வேறிட்ட பொ ருள்களிடத்தில் பிரஹ்மத் துவாரோபணை செய்து, அவைகளையே தனித் தனிப் பிரமங்களென்று அதிகாரிகள் பேதத்தினு லுபதேசிக்கத் துணிந்தது வேதம் என்று நாம் பலதரங் கூறியிருக்கிறேம். இதனை மனதி னிறுத்தின வர்கள் ஆத்மாவையே சர்வகாரண வஸ்து வென்று வேதங் கூறியது கொ ண்டு அதனை யப்படியே தடியாகக் கிரகித்துப் பரமாத்தும துரோகத்தை விலை கொடுத்து வாங்காரென் றறியக் கடவீர்"

என்றார்.

யாமேலெழுதியவற்றினலேயே இதற்கு மறுப்புத் தெளிவுறக் கிடைப் பினும் இதைப்பற்றி யின்னுஞ் சில ஆராய்ச்சிசெய்வாம். ஆராய்ச்சிசெய்வது

தூணுகநந நியாயமாக ஏக பரிபூரணமான ஆத்மாவே பிரமமென்றறிவதற்கும், வேதாந்த சாஸ்திரங்களில் ஆத்மாவினின்றும் எல்லாந் தோன்றின வென்றால் ஆண்டு ஆத்துமா என்பது பிரமமென்றறிவதற்கு மென்க.

சூதசங்கிதை பரமசிவநாம வைபவமுரைத்த அத்தியாயத்தில் பரமசிவனது நாமங்களை 2-வது செய்யுள் முதல் 8-வது செய்யுள்வரைச்கும் கூறி, 9-வது செய்யுளில்

இனையநாமங்கண்முதற்பனுமங்களுமிடுகுறியளவாயே
நினையுமாதிதத்துவபரசிவனையேநெடிதுணர்த்தாநிற்கும்
புனைமுராரி நாராயணனரிமுதற்புகலுறுநாமங்கள்
வினையிலந்தணீர்காரணவளவினவ்விமலனையுணர்த்தும்மே.

என்று இடுகுறிப்பெய ரிவையென்றும், நாராயணன் முதலிய பெயர்கள் காரண வளவினால் அப்பரம சிவனையே யுணர்த்துமென்றும் பெறப்படுதலினால் இடுகுறியாயுள்ள பெயர்களும் காரணமாயுள்ள பெயர்களும் பரமசிவனுக்கேயுள்ளவை யென்றும் அப்பெயர்களை மற்றவர்களுக்குக் கொள்ளுவது ஆகுபெயரென்றும் பெற்றாம். பெறவே, எப்பெயர்களைக் கூறினும் அவை பரமசிவனை அல்லது பிரமத்தையே குறிக்கு மென்பது திண்ணத்தினுந் திண்ணமாம். ஆகவே, அன்னத்தினின்றும் உலக முண்டாயிற்று என்றால் ஆண்டு அன்னமென்பது

### தைத்திரீயோபநிஷத்து 2-2.

அந்நத்தினால் பிரசைக ளுண்டாகிறார்கள். பிறந்தவர்கள் அந்நத்தினால் விருத்தியாகின்றார்கள். அன்னமானது புசிக்கப்படுகிறது. அது பூதங்களைப் புசிக்கிறது (பூதங்களைச் சங்காரஞ் செய்கிறது)ஆகையால் (பிரமம்) அந்நமென்று சொல்லப்பட்டது.

என்றுள்ளபடி காரண வகையால் பிரமமென்று கொள்வது போன்று இந்திரன் முதலியவர்களையுங் கொள்ளவேண்டு மென்பதாம். வேதமானது இடுகுறிப்பெயரை முன்னிட்டாயினும் காரணப்பெயரை முன்னிட்டாயினும் கொண்டு அப்பெயரையுடைய பொருளினின்றும் உலகோற்பத்தி கூறின், ஆண்டு இப்பொருள்களுக் கெல்லா மதிஷ்டானமாயுள்ள பொருள் யாதோ, அத (பிரமம்) னைக் கொள்ளும் வகை யறியாது வேறுவகையாகக் கொண்டு இவரும் இவரினத்தாரும் பெரிதும் மயங்கிப்போனார்கள் பாவம்!! மயங்கிப் போயதோடு வேதம் எப்பொருளை முன்னிட்டு உற்பத்தி கூறினும் ஆண்டு அதிஷ்டானம் பற்றிப் பிரமத்தையே கொள்ளவேண்டு மென்று கூறுவோரை மறுக்கவருவது பெரிதும் பேதமையாம் !!

வேதம் பிரமமல்லாத கீழிட்ட பொருள்களிடத்தில் பிரமத்துவ ஆரோபணைசெய்தது அதிஷ்டானம் பற்றியா? ஆரோபம் பற்றியா? அதிஷ்டானம் பற்றிக் கூறியதெனின் அது மேலெழுதிய நியாயங்களின்படி சரிப்பட்டுப் போகின்றது. ஆரோபம்பற்றிக் கூறியதெனின் உலகப்பொருளி லொன்றான ஆரோபப்பொருளில் உலகந் தோன்றுவ தெங்ஙனமென்று கூறி மறுக்க. இனி ஆத்மாவினின்று முலகந் தோன்றியதென்பதைப்பற்றி யாராய்வாம். ஆத்மா வென்பது பிரமத்திற்கும் சீவனுக்கும் பொதுவாயுள்ள பெயரென மேலே கூறப்பட்ட தாதலின், ஆத்மாவி னின்றும் சீவேசுர வுலகந் தோன்றிய தென்றால் ஆண்டு ஆத்மா வென்பதைப் பிரமமென்று கொள்ளுவதா ?



சீவனென்று கொள்ளுவதா ? பிரமத்தினின்று சீவேசுர வுலகந் தோன்றிய தெனக் கூறிய சுருதி : சீவனிடத்துச் சீவேச வுலகந் தோன்றியதெனக் கூறுதல் யாண்டுமின்றே. இன்ருக இவர் ஆத்மாவென்பதற்குப் பொருள் சீவனென்று கொண்டு தடுமாறுதல் பெரும் பேதமை யன்ரு ?

ஆத்மா அல்லது சிவத்தினின்று சீவேச வுலகந் தோன்றியதென்பதற்குப் பிரமாணம் :

மைத்திராயண்ணியுபஷத் 5-வது பிரபாடகம்.

இந்த ஆத்மாவினுடைய தாமஸாம்சம் ருத்திரன். ஓ பிரமசாரிகளே, இவனுடைய ராஜஸாம்சம் பிரம்மா. ஓ பிரமசாரிகளே, இவனுடைய சாத்துவிகாம்சம் விஷ்ணு. இந்த (ஆத்மா) ஒருவனே மூன்ருகவும், எட்டாகவும், பதினென்ருகவும், பன்னிரண்டாகவும், அநேகமாகவு மிருக்கிருன். இப்படிப்பிரகாசித்திருக்கிறபடியினுலே பூதமென்கிற பெயரையுடைய ஆத்மாவாகிருன்.

என்றும்,

ஷை 6-வது பிரபாடகம்.

தனக்குள்ளே யிருக்கிற இந்த ஆத்மாவிடத்திலிருந்து சகலப் பிராணன்களும், சகல லோகங்களும், சகல வேதங்களும், சகலதேவதைகளும், சகல பூதங்களு முண்டாகின்றன

என்றும்,

பைங்களோபநிஷந் 1-வது அத்தியாயம்.

அந்த ஆத்மாவினிடத்திலிருந்து ஆகாசமுண்டாயிற்று.

என்றும் உள்ளவைகளால் ஆத்மாவென்பது பிரமம் என்றும் அந்தப் பிரமத்தினின்றும் சீவேசவுலகந் தோன்றிய தென்றும் பெற்ரும். பெறவே, பூர்வபட்சியார் கூற்றின்படி ஆத்மாவென்பதற்குப் பொருள் இயைபு நோக்காது சீவன் எனக் கொள்ளுதல் தவறினுந் தவரும்.

பைங்களோபநிஷந் 2-வது அத்தியாயம்.

காம கருமங்களுடன் அவித்தை, பூத சூட்சுமங்கள் இவைகளால் சூழப்பட்ட ஜீவனுனவன் வேறு தேகத்தையடைந்து மற்ருெரு லோகத்திற்குப் போகிருன்.

என்று கூறிய சீவனே அவ்வுபநிஷேத்து உலக காரணமாக வைத்தோதாத முறையையும் காண்க.

இவ்வாறு விசாரித்து வந்ததினுல் ஆத்மாவென்பது பிரமத்துக்கும் சீவனுக்கும் பொதுவாயுள்ள பெயரென்றும், ஆத்மாவினின்றும் சீவேச வுலகந் தோன்றியதென்றபோது அவ்வாத்துமா பிரமமென்று கொள்ளவேண்டுமென்றும், ஆத்மாவானது பிறப்பிறப்பாதி துக்கங்களை யடைகிறதென்றபோது அவ்வாத்மாவைச் சீவனென்று கொள்ளவேண்டுமென்றும், ஆத்மா வென்பதை யியைபு நோக்காது சீவன் என்று பொருள்கொண்டால் அப்போது

சூதசங்கிதை ஞானயாகவைபவம்.

புனித வேதவாக்கியங்களும் ஆன்மா ஏகனென்று. (௯0)

என்றும்,

ஷை நிரவியசுத்தி.

சச்சிதாநந்த ஆன்மாவென்றியாவர்களுமுரைக்கும்வத்து. (உ)

என்றும் வரும் ஆத்மா என்னுஞ் பதத்திற்குச் சீவனென்று பொருள் கொள்ளவேண்டிவரும்; வரின் அது (சீவனுக்கிலக்கணம் சச்சிதாநந்தம் என்றும், ஏகனுயுள்ளானென்றும் சொல்லுவதற்குப் பிரமாணமின்மையால்) பெருங் குற்றமாய் முடியும்; முடியவே 'அதிகாரிகள்பேதத்தினு லுபதேசிக்கத் துணிந்தது வேதம்' என்று ஏகான்ம வாதத்தை அதாவது ஏகப்பிரம வாதத்தை யியைபறியாது பூர்வபட்சி தூஷித்தது பண்டைத் தீவினைப்பயனாய் முடியும். தீவினையின் பயனலன்று பூர்வபட்சியார் ஆத்மாவென்பதைச் சீவனென்றே பொருள்கொண்டு அலமந்து போனார் பாவம்!

"யாமினி எத்தனை சுருதிகள் காட்டினாலும் அவைகளுக்கெல்லா மொரே குண்டு மருந்து வைப்பீர்போலிருக்கின்றதே; என்செய்வது?"

என்று அத்வைதியார் கூறியதாக வெழுதுகிறார். சில நூற்றாண்டுகளுக்குமுன்னர் வேதவிரோதிகளான மகம்மதியர்கள் வைதிகநூற்களையெல்லாந் தீயிட்டுக்கொளுத்திவிட்டதுபோல வேதவிரோதியான இப்பூர்வபக்ஷ மாயாவாதியாரும் வைதிக நூற்களைத் தீயிட்டுக் கொளுத்தப் பார்க்கின்றார் போலும்.

"நாரத பரிவ்ராஜகோப நிஷத்து 'போக்தா போக்யம் பிரேரிதா இந்தக் குணங்கள் பிரமத்தினிடத்தில் கயிற்றில் பாம்புபோல ஆரோபிக்கப்பட்டிருக்கின்றனவென்பதையும், பிரபஞ்சம் மித்தை யென்பதையும், பிரமம் சர்வாத்துமாவாயும், ஒன்றிலும் சம்பந்த மற்றதாயும், அவைகளை விட விலட்சணமாயுமிருக்கிறதென்பதையு மறிந்து, தானே பிரம மென்கிற நிஷ்டையுடையவனானல் சகல பந்தத்திலிருந்தும் விடுபட்டு முத்தனாகின்றான்' என்று கூறியதன் கருத்தென்னே?" என்று அத்வைதியார் வினவியதாக வரைந்து, அதற்கு மறுமொழி

"இதுகலவைக்கீரையாகவன்றோ இருக்கின்றது? இதில், போக்தா=புசிக்கின்றவன். போக்யம்=புசிக்கப்படுபொருள். பிரேரிதா=புசிக்கப்பண்ணுகிறவன். இவைகளைக் குணங்களென்றதே தவறு. போக்தா ஒரு புருஷன். இவனுக்குப் புசிக்குந் தன்மை குணம். போக்தாவைக் குணமென்றலடாது. போக்யம் ஒருவஸ்து. இதற்கு இனிப்பு—உவர்ப்பு—பசுமை—சருமைமுதலியன ஜடகுணங்களாம். இந்தக் குணங்களைத் தள்ளி இவற்றையுடைய பதார்த்தத்தையே குணமென்றலடாது. பிரேரிதாபரவஸ்து. இதற்குப்போக்தாவினது காலகன்ம மறிந்து உரிய போக்யத்தை யூட்டித் தொலைப்பிக்கும் அருளே திவ்யகுணம். இவ்வாறுதெளியாமல் பரவஸ்துவையே குணமென்றலடாது. இங்கேபெறப்பட்ட மூன்றனுள் பிரேரிதா என்பதே பிரமமா யிருக்கவும், இதற்குமே லொரு பிரமத்தை யிரவல் கொண்டது நின்றுபயன் செய்யாததாயிற்று."

என்றார் பூர்வபட்சியார். அத்வைதியார் எடுத்துக்காட்டிய வசனம் நாரத பரிவிராஜகோபநிஷத் கூ - வது உபதேசமொழிபெயர்ப்பில்

"பிரமமானது (காரிய காரண பிரபஞ்சங்களைக் காட்டிலும்) சிரேஷ்டமானதென்றும் நாசமற்றதென்றும் (வேதாந்தங்களினாலே) உபதேசிக்கப்பட்

டிருக்கிறது. அதில் (அந்தப் பிரமத்தில் போக்தா போக்கியம் பிரேரிதாவாகிய) மூன்று மிருக்கின்றன. ஆனபடியினுலே (பிரமம் பிரபஞ்சத்திற்கு) ஸ்திரமான இருப்பிடமாயிருக்கிறது. இவ்விடத்தில் (இந்தப் பிரபஞ்சத்தில் அல்லது சரீரத்தில்) உள்ளே யிருக்கிற பிரமத்தை யறிந்து பிரம்மவித்துக்களானவர் பிரமத்திலேயே சமாதியுடையவர்களா யிருந்து அந்தப்பிரமத்தில் லயமடைகிருர்கள்."

என்றுள்ள விஷயத்தை விரித்துக் காட்மோறு இருதலைப் பிறையில் எழுதியுள்ளதேயாம். இருதலைப் பிறையில் காட்டிய விஷயம் மேல் யாம் காட்டிய உபநிஷத்து வாக்கியத்துக்குச் சிறிதும் மாறின்றி யிருத்தலின் அது பற்றி விசாரிப்பாம்.

'இதில், போக்தா=புசிக்கிறவன். போக்கியம்=புசிக்கப்படு பொருள். பிரேரிதா=புசிக்கப் பண்ணுகிறவன். இவைகளைக் குணங்க ளென்றதே தவறு' என்கிருர். அவ்வாருயின் சிவஞானசித்தி உ ம சூத்திரம் ருக - வது செய்யுளில் "விமலனுக்கோர் சத்தியாய்" என்று மாயையைச்சத்தி அல்லது குணம் என்று கூற இவரும் இவரினத்தாரும் அம்மாயையைப் பொருளென்று கூறுதல்மாத்திரம் தவறன்றுபோலும். அதுவேயுமன்றி விஷ்ணுவைச் சிவ சத்தியென்றும், உமாதேவியைப் பராசத்தியென்றும் ஒப்பிப் பொருளாய்க் கூறுதலும் சிவத்தின்காரியமான அதாவது ஓர்விதகுணமான கணேச சுப்பிரமணிபர் முதலியமூர்த்தங்களைப்பொருளெனக்கூறுதலும்இப்பூர்வபட்சியார் புத்திக்குத் தவறென்று புலப்படாமைக்குக் காரணம்புலப்படவில்லை. உலகமென்பதும், அதில் காணப்படுபவைகளும் நீளம், அகலம், கனம், உருட்சி, குறுகல், பக்கம், பிரிதல், சேர்தல்முதலிய குணங்களை யுடையனவா யிருந்தும் அவைகளைப் பொருள் என்று விவகரிக்கின்றனம். வாஸ்தவத்தில் அதாவது விசாரணையில் அவைகள்குணங்களேயாமன்றிப் பொருள்களாமா? உதாரணமாகக் கடமென்பது மண்ணும் அம்மண்ணினது வளைகுவிவு முதலிய குணங்களுமன்றி அதற்குப் பொருள் யாதுமின்றே. இன்ருகவும் குணமான கடத்தைப் பொருள் என்று விவகரிக்கின்ரும். விவகரித்தாலும் அது குணந்தானே. ஆகவே ஒருவன் கடத்தைப் பொருளென்கிருனென்றும், மற்றொருவன் குணமென்கிருனென்றும்கூறுவதாகவைத்துக்கொள்வோம். இவ்விருவர் கூற்றில் கடத்தைக் குணமென்றவன் கூற்றே சரியாவதுபோல் 'அதில், (அந்தப் பிரமத்தில் போக்தா, போக்கியம், பிரேரிதாவாகிய) மூன்று மிருக்கின்றன' என்னும் வாக்கியத்தை விரித்துப் 'போக்தா போக்கியம் பிரேரிதா இந்தக் குணங்கள் கயிற்றிற் பாம்புபோல ஆரோபிக்கப்பட் டிருக்கின்றன' என்று கூறியவாக்கியம் சரியாவதன்றி, தவருவது ஓர்போது மின்ருமென்க. இன்ருக, போக்தா போக்கியம் பிரேரிதா இவைகளைக் குணங்களென்றது தவறென்றதுவே தவருமென்பது 'கயிற்றிற் பாம்புபோல் ஆரோபிக்கப்பட் டிருக்கின்றன' என்றெழுதி யிருப்பதினுல் விளங்கவில்லையா ? கயிற்றிற் கற்பித பாம்பை மயங்கினவன் பொருளென் றறிந்தாலும் உண்மையில் குணந்தானே. அதுபோலப் போக்தா போக்கியம் பிரேரிதா என்னு மூன்றும் விசாரிக்காதுழிப் பொருளாய்த் தோன்றினும் பரிபூரணப் பிரமத்தில் கற்பித குணமாகவன்றி வேறு விதமா யிருத்தலுக்கு நியாயஞ் சிறிது மின்றே. இன்ருக, இவர் 'இவை குணங்க ளென்றதே தவறு' என்றது தவறென்று வெளிப்படையாய் விளங்கிய தென்பதாம்.

மேலும் இந்திரஜால வித்தையில் காட்டும் பொருள்கள் போக்தா போக்கியம் பிரேரிதா என்னு முப்பிரிவாகக் காணப்படினும் அவை வாஸ்த வத்தில் குணங்கள்தானே. போக்தா போக்கியம் பிரேரிதா என்று கூறின மாத்திரத்தினுலேயே அவை பொருள்களா யிருக்கவேண்டு மென்பதற்கு நியாயம் இலவலேசமும் இல்லையென்க. இன்னும் இலக்கணங்களில் இயற் கையைச் செயற்கையாகவும், செயற்கையை இயற்கையாகவும் இலக்கணை வகையாற் கூறி யிருத்தலை யிவரறிந்திருந்தால் குணங்களைக் குணங்களென் பது தவறன்றென்றும், குணங்களைப் பொருளென்று இலக்கணைவகையாற் கூறினும் அவை உண்மையில் குணங்கள்தானென்றும் அறிவர். அறியாமை யாற்முன் இவர் வீணே அலமருகின்ருர் பாவம்! 'இனிப் பிரேரிதா பரவஸ்து. இதற்குப் போக்தாவின்து கால கன்ம மறிந்து உரிய போக்யத்தை யூட்டித் தொலைப்பிக்கும் அருளே திவ்விய குணம். இவ்வாறு தெளியாமல் பரவஸ்து வையே குணமென்ற லடாது. இங்கே பெறப்பட்ட மூன்றனுள், பிரேரிதா வென்பதே பிரமமா யிருக்கவும், இதற்குமே லொரு பிரமத்தை யிரவல்கொ ண்டது நின்று பயன் செய்யாத தாயிற்று' என்பதைக் கவனிப்பாம். போக் தாவாகிய சீவனும், போக்யமாகிய தனு கரண புவனங்களும், பிரேரிதாவா கிய ஈசுவரனும் இம்மூன்றுக்கும் அதிஷ்டானமாகிய பிரமம் அல்லது சிவத்தி னிடத்தில்

நாரத பரிவிராஜகோபநிஷத் 9-வது உபதேசம்.

"அதில் (அந்தப் பிரமத்தில் போக்தாபோக்கியம்
பிரேரிதாவாகிய) மூன்றுமிருக்கின்றன"

என்றும்,

ருத்திர இருதய உபநிஷத்.

"ஆகாசத்திலே கடாகாசம் மடாகாசம் என எப்படிக் கற்பிக்கப்பட்ட தோ, அப்படியே பரப்பிரமத்தினிடத்தில் சீவேசுவரர்கள் கற்பிக்கப்பட்டி ருக்கிருர்கள்."

என்றும்,

பிரமகீதை கடவல்லியோடு சுவேதாச்சுவதரமு மூரைத்த அத்தியாயம்.

மேவியதன்பாலுள்ளமெய்ப்பொருளொன்றுமன்றி
யாவுமிங்கறியவேண்டாவருந்துமிப்பொருளுமாகிச்
சீவனையுண்பனைக்சிவனெனவூட்டுவோனைய்
மூவிதமாகிநிற்குமூலமாம்பிரமந்தானே. (௩அ)

என்றும்,

அந்வயதாரகோபநிஷத்து.

"சீவேசுவரர்கள் மாயா சொரூபிகளென் றறிந்து சகல விசேஷத்தை யும் ஈதல்ல ஈதல்ல வென்று விலக்கி, எது மிஞ்சுகிறதோ அது அத்துவயப் பிரமம்"

என்றும்,

அமிர்தபிந்தூபநிஷத்.

"எந்தப் பிரமமானது நிர்விகற்பமோ, அநந்தமோ, காரணமும் உவமையு மற்றதோ, ஊகிக்கத்தகாததோ, அநாதியோ அதை ஞானியானவன் அறிந்து (பந்தத்திலிருந்து) விடுபடுகிருன்"

என்றும் உள்ள பிரமாணங்களின்படி கற்பிக்கப்பட் டிருக்கின்றனவென்றும், அந்தப் பிரமம் போக்தா போக்யம் பிரேரிதா என்னும் மூன்றுக்கும் மேற்பட்டுத் துரியமாய் அதாவது நாலாவதாய் விளங்குகிறதென்றும் பேறப்படுதலினால் 'இதற்குமேலொரு பிரமத்தை யிரவல்கொண்டது நின்றுபயன் செய்யாததாயிற்று' என்றது ஆபாசத்தினும் ஆபாசமாம். இதனால் யாது விளங்குகின்றதென்னின் பூர்வபட்சியாரும் அவரினத்தாரும் பிரமம்: காரண காரிய ரகிதம், நிர்விகல்பம், நிர்மலம், நிர்ச்சலம், திரிபுடிரகிதம் முதலிய அதீத இலக்கணங்களைப் பெற்றதென் றுணராது மாயையோடு கூடிய ஈசுவரனையே பிரமமென்றும், அதற் கதிஷ்டானமாயுள்ள பிரமம் மற்றொன்றின்றென்றும் மயங்கி நின்றார்க ளென்பது நன்கு விளங்கியது. இத்தகைய மாயா துவிதப் பிராந்தர்கள்: சிவம் அல்லது பிரமம் பரிபூரணமாகலின் அதனிடத்துச் சீவேச உலகம் கயிற்றிற் பாம்புபோலக் கற்பித குணமாக வன்றி வேறு வகையாக விருக்க முடியாதென்று வேதாதி பிரமாணத்துடன் கூறும் அத்வைதிகளை யிகழ்வது பெரிதும் மயக்கமாமென்க. இத்தகைய பிராந்தகர்களைப் பற்றியன்றோ

"பொருளல்லவற்றைப்பொருளென் றுணரு
மருளானாம்மாணாப்பிறப்பு"

என்று திருவள்ளுவநாயனார் அருளினர்?

"இவ்வசப்பியங்கள் போதாமல் இம் மும்முதல்களையும் சயிற்றிற் பாம்பு போல்வனவென் றுவமித்தது மசங்கதமாம்.''

என்றார். போக்தாவும், போக்தாவினா லனுபவிக்கப்படுகிற போக்கியமும், அப்போக்கியத்தைக் கால சன்ம மறிந்து போக்தாவுக்குப் புசிப்பிக்கின்ற பிரேரிதாவும் வாலும் தலையோடுங் கூடிய அரவு கயிற்றிற் கற்பிதமாயிருக்கிறதுபோல, பிரமத்தில் கற்பிதமா யிருக்கின்றனவென்று கொண்டால் என் அசங்கதமாகும்?

சிவபுராணம் ஞானசங்கிதை 18-வது அத்தியாயம்.

"குற்றியைக் கண்டு மானுடனென்றும், கயிற்றைக் கண்டு பாம்பென்றும், இப்பியைக் கண்டு வெள்ளியென்றும் சந்தேகித்து, உண்மை யுணர்ந்த பிறகு மானுடனல்ல குற்றியென்றும், பாம்பல்ல கயிறென்றும், வெள்ளியல்ல இப்பியென்றும் மனச் சந்தேக நீக்கித் திடப்படுமாறு அஞ்ஞானத்தால் சிவனுக்கிரண்டாவதாகத் தோற்றும் பிரபஞ்ச முழுதும் ஞானமுற்ற போது முக்காலத்தினும் சிவனே யென்று தெரியும்."

என்றும்,

ஆத்மபோதோபநிஷத்.

"பழுதையில் பாம்பு முதலியனபோல் (பழுதையில் பாம்பு என்கிற பிரமைக்குக் காரணம் பழுதைபோல பிரபஞ்சத்திற் காதாரரூபமாய்ப் பிரம சத்துமாத்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது"

என்றும்,

"ஆசையினால் முக்குணங்களையுடைய அந்தச் சத்தியானது என்னுடைய சேர்க்கையினால் இப்பியினிடத்து வெள்ளிபோலவும், சயிற்றினிடத்து அரவு போலவும் அதிஷ்டானமாகிய என்னிடத்திலேயே விசுவரூபமா யிருக்குந் தன்மையை யடைகிறது."

என்றும்

உள்ள பிரமாணங்களினால் கயிறு ஸ்தானத்தில் பிரமத்தையும் பாம்பு ஸ்தானத்தில் சிவேச சகத்தையும் வைத்திருத்தலை நன்குணரலாம். ஆகவே, 'இம் மும்முதல்களையும் கயிற்றில் பாம்பு போல்வனவென றுவமித்தது மசங்கதம்' என்று பூர்வபட்சியார் கூறியதே வேதாதிப் பிரமாணங்களின் பிரகாரம் அசங்கதமாய் நின்றதென்க.

"கயிற்றிற் பாம்பு ஒருவிதமா யிருக்கும். பலவிதமா யிருக்குமா? கயிறு நீளமாயிருந்தால் பாம்பு நீளமாய்த் தோன்றும். கயிறு சுருட்டிக்கொண்டிருந்தால் பாம்பு சுருட்டிக்கொண் டிருப்பதாய்த் தோன்றும் கயிறு நீளமாயிருந்தால் அந்நீளக் கயிற்றில் நீளமாயும், குட்டையாயும், சுருட்டிக்கொண்டிருப்பதாயும் பாம்பு மூன்றுவிதமாய்த் தோன்றுமா? இங்ஙனமாக, ஒரே தன்மையினதாகிய பிரமத்தினிடத்தில் போக்தா-போக்யம்-பிரேரிதா என்னும் வேறு வேறு தன்மைகளையுடைய பொருள்களைத் தோற்றமாகக் கூறியது பெருங் குழப்பமாம்."

என்றார்.

தண்டி யலங்காரம்.

"பண்புந்தொழிலும்பயனுமென்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்ந்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை"

என்னுஞ் சூத்திரப்படி பண்பு, தொழில், பயன் காரணமாகவாயினும், அல்லது வினை, பயன், மெய், உரு காரணமாகவாயினும் உவமை கூறவேண்டுமேயன்றி, முற்றும் பொருத்தமா யமைக்கப் பார்ப்பது முடியாது. முடியாதாகவே, கயிற்றரவு திருஷ்டாந்தத்தை

"அகரமுதலவெழுத்தெல்லாமாதி, பகவன்முதற்றேஉலகு"

என்னும் செய்யுளைப்போல எடுத்துக்காட்டுவமையாகவேனும், "துடியிடை" யென்பது போன்ற மெய் உவமையாகவேனுங் கொள்வதன்றி உவமை யிலக்கணத்திற்கு மாறாகக் கயிற்றரவு திருஷ்டாந்தம் முற்றும் பொருத்தமா யமைந்திருக்க வில்லையென்று குறை கூறுவோர் உவமையிலக்கண மறியா ரென்பதே திண்ணமாமென்க. உவமை கொள்வது இவ்வாறென் றுணராது உபநிஷத்துகளிலும் புராணங்களிலும் கூறிய கயிற்றரவு திருஷ்டாந்தத்தைக் குறைகூறு மிப் புத்திமானைப்போன்ற வைதக புத்திமான் ஒருவரும் இரார்! இரார்! இப்பூர்வபட்சியாரது மதநூலாகிய சிவஞானசித்தி, சிவப்பிரகாச முதலியவற்றில் சொல்லும் உவமைகளெல்லாம் ஓர் புடையொத்தலன்றி முற்று மொவ்வா திருத்தலின், அவ்வுவமைகளும் இப்புத்திமானது கண்டனைக்குட்பட்டன வென்பதற்குச் சிறிதுஞ் சங்கையின்றென்க. இவ்வுவமை விஷயமாக தப்புந்தாறுமாக அரதத்தரென்பவர் பேசி, "அத்வைதி" என்பவரால் மறுக்கப்பட்டார். அது "பஞ்சதசப்பிரகரணபாசவிளக்கச் சண்டமாருதம்" 7, 8, 9 ம் பக்கங்களில் வந்திருப்பதால் அதுபற்றி யுவமை விஷயமாக இங்கு விரிவாய்ப் பேசாது விட்டனமென்க.

கயிற்றுக்கும் பிரமத்திற்கும் ஒப்பில்லையென்பதே இவரது கூற்று. அதுபற்றி அத்வைத நிக்கிரகநூலார் அந்நூலின் 21, 22, 23, 24, 25 வது பக்கங்

களில் சுருதி யுக்தி யனுபவங்களோடு மிகு விரிவாகச் சமாதானம் எழுதி யிருப்பதற்கு யாதும் பதில் கூறுது "இந்தப் பூனையும் பால் குடிக்குமா" என்றவாறு முன்னெழுதி மறுக்கப்பட்டதையே மீண்டும் திருப்பிப்பேசுதல் உத்தமர்க் கழகன்று. இத்தகையரைப்பற்றித் தான் நாயனுர்

"நாணுமைநாடாமைநாரின்மையாதொன்றும்
பேணுமைபேதைதொழில்"

என்று கூறினுராக்கும்!

"உமது நிக்கிரகநூலில் 'மித்தை யெது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்தி லாரோபிப்பது' என்று கூறி யிருப்பதினு லறியலாம். ஆரோபம் இல்லாததை யுண்டுபோலக் கொள்ளுதல். இல்லாததை யொருபோதும் உண்டுபோலக் கொள்ள முடியாது. முயற்கோடு இல்லாதது. இதனை யெப்படியோ உண்டுபோலக் கொள்வது? இதற்கு நம்மவர் தேடிய கானற்சலம்- கிளிஞ்சல் வெள்ளி - கயிற்றரவு முதலியவைகளை ஆபாசப்படுத்திக் காட்டியிருக்கின்றுமாகையால் அவ்வுவமானங்களஸாமஞ்சஸமாகத் தக்கனவாம்"

என்ருர்.

சர்வசாரோபநிஷத்: பதார்த்தங்களை நிரூபிக்கும்பொருட்டும் பேதையர் தெளியும்பொருட்டும் "பதார்த்தங்க ளெத்தனைவிதம்?" என்கிற வினவைக் கிளப்பி, அதற்கு விடை "சத் அசத் மித்தை என மூவகைப்படும்." என்று கூறி, பின்னர் "சத் எது? பிரமம்" "அசத் எது? துச்சம் (இல்லாதது)" "மித்தை யெது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்திலாரோபிப்பது" என்று வரையறை செய்தது. இப்பூர்வபட்சியார் சத் அசத் மித்தை யென்பதில் ஒன்றுக் கொன்றுள்ள வேறுபாட்டை யறிய விரகின்றி 'முயற்கோடு இல்லது. இதனை யுண்டுபோலக் கொள்ள முடியாது.' என்கிருர். கயிற்றையே அரவாகக் கொள்வது போன்று, முயலின் காதையே கோடாகக் கொள்ளுதலின் முயலின் காதினிடத்து இல்லாத கோட்டை (கொம்பை) ஏன் கொள்ளுதல் கூடாது? கூடுமென்பது யாவருக்கும் அநுபவம். ஆகவே, இல்லாத பிரபஞ்சத்தை உள்ள பிரமத்தினிடத்தில் கொள்ளுதல் முடியுமென்பது பெற்ரும். பெறவே, முயற்கோடு உவமானத்தைத் தப்பாய்க் கிரகித்தாரென்பது திண்ணமென்க. சத்தெனற்பாலது முக்காலத்திலு முள்ளது, அசத்தெனற்பாலது முக்காலத்து மில்லாதது, மித்தையெனற்பாலது ஓர் காலத்து உள்ளதுபோற் ருேன்றி விசாரணையில் இல்லாததாக முடிவது. பிரபஞ்சத்தைச் சத்தெனக் கொள்ளின், பிரபஞ்சம் (காலபரிச்சேதமின்றி அதாவது முக்காலத்தினும் இருக்கும்) பிரமத்தைப்போ லிருக்கவேண்டும். அவ்வாறின்றி, கயிற்றில் அரவு தோன்றி நின்றழிவதுபோல, படைப்புக் காலத்திற் ருேன்றி, திதிகாலத்தில் நின்று, சங்காரகாலத்தி லழிந்துபோகின்றமையின் சத்தெனப்படாது. படாததோடு பிரபஞ்சத்திற்குக் கூறிய சத்தென்னு மிலக்கணம் பிரபஞ்சமல்லாத பிரமத்தினிடத்துஞ் சென்று வியாபித்து அதிவியாப்தி யென்னுந் தோஷத்திற் கிடனும். அசத்தென்று கூறுவோமெனின் அசத்தென்பது: ஆமை மயிர், பரிக்கோடு, விண்மலர் முதலியன போன்று முக்காலத்துமில்லாத பதார்த்தமாகலின், பிரபஞ்சத்தை யசத்தெனக் கூறுதலுங் கூடாது. கூடாததோடு ஓர் காலத்தில் தோன்றிநின்றழிந்துபோகும் பிரபஞ்சத்திற்கு ஓர்காலத்து மில்லாத அசத்தை யிலக்கணமாகக் கூறல் அசம்பவமென்னும் குற்றத்திற் கிடனும். பின்னைப் பிரபஞ்சத்திற்கு சத்தும் அசத்துமல்லாத இலக்கணம் யாதெனின், மித்தையென்

படதே அதற் கிலக்கண மென்க. பிரபஞ்சமானது தோன்றிநின் றழிதலின், அது எதனிடத்திற் ரோன்றிநின் றழிகின்றது என் றூகிக்குமிடத்து, பிரமத்தினின்றும் தோன்றிநின் றழிகின்றதென் றுரைக்கவேண்டுமே யன்றி வேறு வழியில் (மாயையில் தோன்றிய தென்பதைப் பற்றி முன்னரே "துவிதசைவரே மாயாவாதிகள்" முதலிய பல துவித கண்டன நூல்களில் மிகவிரிவாய்ப் பன்முறை மறுக்கப்பட்டுள்ளது) தோன்றுவதற் கிடனின்று. ஆனால் பரிபூரணமான பிரமத்தினின்றும் அது தோன்றுவதற் கிடனின்றேயெனின், அது பற்றித்தான் கயிறுள்ள விடத்திலேயே அரவு தோன்றி நின் றழிவதுபோல, பிரமமுள்ள விடத்திலேயே பிரபஞ்சம் தோன்றி நின் றழிகின்றதென்று கயிற்றரவு முதலிய விவர்த்த உவமானங்களை வேத வேதாந்த புராணமுதலிய பிரமாணவித்தைகள் கூறியனவென்க.

இவ்வாறு விசாரித்துப் பார்க்குமிடத்து அரவென்பதும் கோடென்பதும் இல்லாதனவாயிருந்தும் அவை கயிற்றினிடத்தும் முயலின் காதினிடத்தும் ஆரோபிக்கப்பட்டிருப்பனபோன்று, தனக்கெனச் சொரூபமின்றியிருக்கின்ற பிரபஞ்சமானது பிரமத்தினிடத்து ஆரோபிக்கப் பட்டிருக்கின்றது என்பது செவ்வனே வுணரப்படுமென்க. (ஈண்டுக் கூறிய அரவும் கோடும் சத்துமின்றி யசத்துமின்றி மித்தையாயிருக்கிறதென்பது நன்கு புலனாம்.)

மித்தையென்பதற்குரிய இலக்கண மின்னதென்றும், அவ்விலக்கணத்தைப் பெற்றிருப்பது உலகமென்றும் அறியாது 'மித்தை எது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்தி லாரோபிப்பது' என்று கூறிய சர்வசாரோபநிஷத்து வாக்கியத்தை யிகழ்ந்து கூறிய பூர்வபட்சியார் மதம் சிறிதும் மணம் பெறுது போயிற்றென்க. இத்தகைய இவர் கிளிஞ்சல் வெள்ளி முதலிய உவமானங்களைத் தவறுய்க்கிரகித்துப் பேசியதைப்பற்றி முன்னரே மறுத்து விட்டாமாகலின் அதுபற்றி மீண்டு யாதும் பேசாது விட்டன மென்க.

"உயிர்களது பருவ பேதங்களுக் கீடாகப் பொய் மெய்களை வேதஞ் சொல்லி யுபகரிப்பது குணமேயாம். வேதஞ் சொன்னுலும் யார் சொன்னுலும் சொல்வது அஸங்காத்ம வாதமாயின், அது நியாயசாஸ்திரத்தின் முன்னிற்க மாட்டாதாகையால் சுருதியானது புண்ணியபல மில்லாதவர்களுக்குச் சொல்லிய ஏகாத்துமவாத சித்தாந்தம் என்று மேற்றமடையாதென்றறியக்கடவீர்."

என்றுர்.

பிரமாணநூல்கள் உயிர்களது பருவபேதங்களுக் கீடாகக் கரும பத்தி ஞானங்களைப் போதிப்பதேயன்றி,பொய்யையும் மெய்யையும் கூறி மயங்கச் செய்வதோர் போதுமில்லை.ஆனுல் கருமத்தினுல் பத்தியும் அதனுல் ஞானமுமுண்டாமென்றும்,கருமபத்தி நிலை துவிதமென்றும்,ஞானநிலை அத்துவிதம் என்றும், துவிதம் பொய் அதாவது மாயா கற்பிதம் என்றும், அத்துவிதம் மெய் அதாவது மாயாரகிதம் என்றும் கூறுகின்றன.இதற்குப்பிரமாணம்:—

சூதசங்கிதை வேதாவிரோதம்.

வேதமு மற்றென்றினுக்குச் சேடமாகா, தெத்தகைய வுயிர்களுக்கும் தாய்போல வுண்மையையே யெடுத்தியம்பும். (கக)

ஷ வேதப்பிரமாணிய விசாரம்.

ஆதலான் மறையிற் சொலப்பட்ட அருத்தமே உண்மையானது (கo)

ஷை ஷை

பேதமும்பேதாபேதமும்சிலர்பேசுவார்க
ளாதர்கொள்பேதமித்தையாகின்றபடியினாலு
மாதரீசனுக்குவேறாய்மற்றொன்றுமில்லை. (உச)

ஷை வேதாவிரோதம்.

அறையாரணம்சத்தியமானஅத்துவிதாநற்பரமென்றும்
பறையாநின்றகற்பிக்கப்பட்டதுவிதபரமென்றும்
துறையாரிரண்டாந்துவிதப்பிரபஞ்சங்காணப்படலானுங்
குறையாப்பரத்தாரோபிதமாய்க்குலவலானுங்கற்பிதமே. (உ)

துவிதத்தையனுவாதமுன்செய்சத்துவிதமே சொல்லுமீற்றில். (எ)

என்பதனால் வேதங் கூறுவது உண்மையென்றும், துவிதம் பொய்யென்றும், அத்துவிதம் மெய்யென்றும், துவிதநிலை அத்துவித நிலைக்குச் சாதனமென்றும் பெற்றாம். பிரமாணமாயுள்ள வித்தைகளிலொன்றான சூதசங்கிதை வேதம் உண்மையையே கூறுமென்றும் துவிதம் கற்பித மென்றும், அத்துவித மெய்யென்றும் கூற, இப்பூர்வபக்ஷியார் அத்வைதம் பொய் யென்றும் துவிதம் மெய்யென்றும் சாதிக்குமாறு 'உயிர்களது பருவபேதங்களுக் கீடாகப் பொய் மெய்களை வேதஞ் சொல்லி யுபகரிப்பது குணமே யாம்' என்று கூறுதல் தென்னாலுராமன் அம்பட்டனைப் பிராமணனாக்க முயன்ற கதைக்கு இனமாமென்க.

சூதசங்கிதைவேதப்பிராமாண்ணியவிசாரம்.

மறையினால் வகுத்துணரத்தக்க சூக்குமப்பொருளி
னிறையளவையனுசரியாநெடுந்தருக்கமென்செய்யும். (ச)

என்று வேதத்திற்கு விரோதமான *தருக்கம் (நியாயம) பிரமாண மன்றென்றுகூற, இவர் 'வேதஞ்சொன்னாலும் யார் சொன்னாலும் சொல்வது அசங்காத்மவாதமாயின் நியாயசாஸ்திரத்தின்முன் னிற்க மாட்டாது'என்று கூறியது வேதபாகியத்தன்மையேயாம். இவர், உபநிஷத்துகளின்மேல் கூறிய தோஷங்கள் அறியாமையாற் கூறிய தோஷங்களென்பது ஆங்காங்கு நம்முடைய மறுப்புகளால் விளங்கியதாகலின், வேதம் பொதுத் தர்க்கத்துக்கு விரோதமாய்ச் சிறிதும் பேசாதென்பது திண்ணத்திலுந்திண்ணமாமென்க.

சூதசங்கிதை வேதப்பிராமாணிய விசாரம்.

வேதப் பொருளினைக்கேபஞ்செய்பவனரகினைச் சேரும். (கரு)

என்றுள்ள இச்செய்யுளின்படி பூர்வபட்சியார் மறுமையில் போமிடம் நரகமென்பது புராணப்பிரமாணசித்தமாமென்க.

ஆத்மா என்பது சிவம் அல்லது பிரமம் என்றும் அது ஏகமென்றும் கூறி, ஏகாத்மா என்பது சிவம் என்று பல துவித சைவ கண்டன புத்தங்களில் எழுதியிருப்பதோடுகூட இவரினத்தவரும் ஏகாத்துமவாதிகளே என்று

* ஈண்டுத் தருக்கமென்றது மததருக்கத்தை. தருக்கம் பொதுத் தருக்கம் மததருக்கம் என இருவகை. பொதுத் தருக்கம் யாவருக்கும் பிரமாணமேயாம்; மததருக்கம் நையாயிக மதஸ்தர்க்கு மாத்திரம் பிரமாணம். அதுபற்றியே இவர் மதஸ்தரான சிவஞான சுவாமிகளும் சிவசமவாதவுரை மறுப்பில் "தார்க்கிக மதகண்டனஞ்செய்த பவுஷ்கரச் சுருதியை நுணிகி ஆய்ந்திடின்" என்று கூறினரென்க.

"சித்தார்திகளும் ஏகாத்ம வாதிகளே" என்னும் புஸ்தகத்தில் குறிப்பிட்டெழுதியிருப்பதற்கும் பதிலெழுதாமல் 'சுருதியானது புண்ணிய பலமில்லாதவர்களுக்குச் சொல்லிய ஏகாத்துமவாத சித்தாந்தம் என்று மேற்றமடையாது' என்று கூறியது பயனில் கூற்றென்றொழிக. சுருதியானது புண்ணிய பலமில்லாதவர்களுக்கு ஏகாத்துமவாதங் கூறுமாயின், அது புண்ணிய பல முள்ளவர்களுக்குக் கூறியவாதம் யாண்டுள்ளதோ யாமறியோம். அது ஒரு சமயம் பைபில் கொருன் முதலிய நூல்களிலிருக்கலாம் போலும்.

"ஒன்றாயிருந்த பிரமம் தனக்கு வேறு பொருளில்லாதபோது தான் ஒன்றிலும் சம்பந்தமற்றிருப்பதும் விலட்சணமாகியிருப்பது மாகிய தன்மைகளைப் பிரஸ்தாபித்தற் காவசியமென்னை?"

என்றார். ஒன்றாயிருந்த கானல் தன்னில் வேறு பொருளில்லாது தன்னிடத்திற் கற்பிதமாகிய நீரில் சம்பந்தமற்றிருப்பதும் யதார்த்தத்தில் விலட்சணமாயிருப்பதுமாகிய தன்மைகளைப் பெற்றிருப்பதுபோல, ஒன்றாயிருக்கும் பிரமம் தன்னில் வேறுபொருளல்லாது தன்னிற் கற்பிதமாகிய சேதனாசேதனப் பிரபஞ்சங்களில் சம்பந்தமற்று விலட்சணமாயுமிருக்கிறதென்றுணர்க.

"அன்றியு மந்தப் பிரமம் சர்வாத்மாக்களாயிருப்பது யாங்ஙனம்?"

என்றார். ஒரு கானலே பலவித அலைகளையுடைய நீராய்த் தோன்றுவதுபோல, பிரமமும் பலவித தன்மைகளையுடைய சீவர்களாய் விளங்குகின்றதென்க.

"பிரமத்தைப்போல ஆத்மாக்களும் நித்தியமாயிருந்தால்அவ்வாத்மாக்களிடத் தந்தரியாமியாயிருக்கு நோக்கத்தால் சர்வாத்மாக்களா யிருக்குந் தன்மையைப் பிரசங்கிக்கலாம்."

என்றார். சூரியப்பிரகாசம் கடத்தில் வியாபித்திருக்கும் காரணத்தால் சூரியனே பல கடமா யிருக்கிறானென்று கூறுவதில் எவ்வளவு வழு வுண்டோ, அவ்வளவு வழு 'அந்தரியாமியாயிருக்கு நோக்கத்தால் சர்வாத்மாக்களாயிருக்குந் தன்மையைப் பிரசங்கிக்கலாம்.' என்பதிலுமுண்டென்பதற்கு யாதோர் தடையின்றென்க. இவரது சித்தாந்தப்படி கடவுள் நிமித்தகாரணன், ஜீவர்கள் அக்கடவுளைப்போலச் சத்தாயும் சமவியாபகமாயு முடையவர்கள்; ஒரு சத்துப் பொருளில் மற்றொரு சத்துப் பொருளிருத்தல் யாண்டுமின்மையின், சத்தாயும் சமவியாபகமாயுமுள்ள ஜீவர்களில் இவரது நிமித்த காரணக்கடவுள் அந்தரியாமியாயிருத்தல் எவ்வாற்றானும் அமையாது.

கற்பிதமாகிய அரவினிடத்துக் கயிறு அந்தரியாமியாமியா யிருத்தலும் அந்தரியாமியா யிருக்கும் நோக்கத்தால் அரவாதலும் போல, கற்பிதமாகிய ஜீவர்களில் பிரமம் அந்தரியாமியாயிருக்கலாம். அவ்வாறு அந்தரியாமியாயிருக்கும் காரணத்தால் சர்வாத்மாக்களாயிருத்தல் முடியுமேயன்றி, சத்தாயுள்ள ஜீவர்களில் பரிபூரணரான கடவுள் அந்தரியாமியாயிருத்தலும் அது காரணமாக அவ்வாத்மாக்களாயிடுதலும் ஓர்போது முடியாதென்க. இதுவிஷயமாக விரிவாயறிய விரும்புவோர் அத்வைத தூஷண பரிகாரம், அவைதிக சைவ சண்டமாருதம், துவிதாத் துவிதவாத முதலிய நூல்களில் மிகு விரிவாய்க் காணலாம்.

"பிரமமே ஆத்மாக்களாயினவெனின், பிரமம் தனது சுபாவத்தினின்றும் மாறுபட்டு யோக்கியதை குறைந்திடப்பெற்றது அசங்கதமாம். அன்றியும் எனவ்வாறாகியது என்னுமாசங்கையைப் பரிகரித்தலு மாவசியமாம்"

என்றார். கயிறு அரவாகுங்கால், கயிறு தனது சுபாவத்தினின்றும் மாறுபட்டு யோக்கியதை குறையாமல் எவ்வாறு ஆகின்றதோ, அவ்வாறே பிரமம் ஜீவர்களாய் ஆகின்றபோது தன் சுபாவத்தினின்றும் மாறுபாடடைகிறதில்லையென்க. பிரமம் ஜீவர்களாவது விவர்த்தமாகவென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுவதையும், இவர் மத கண்டனமாய் வந்த பல புஸ்தகங்களில் அதைப்பற்றி வரைந்திருப்பதையும் இவர் எந்த ஜன்மத்தில் அறிந்து சமாதானப்படுவாரோ அறிந்திலம். எந்தப் பொருளினிடத்து எந்த விசேடமுண்டோ, அது அவ்வாறாகியே தோன்றுமென்பதைத் தூணும், வீடும், மலையும், குடமும் அரவாகித்தோன்றாமல் கயிறே அரவாகித் தோன்றுமென்பதனால் அறிகிறோம். அதுபோலப் பிரமத்தினிடத்து அவாச்சியமாக சத்தியொன்றுளது. அதினால் பிரமம் சீவேச பரமாகிறது என்று 'எனவ்வாறாகியது' என்பதற்கு விடையிறுக்கின்றோமென்க.

"தோற்றமாயிருந்தாலனுபவத்துக்கு வாராமலிருக்கவேண்டும்."

என்றார். கயிற்றினிடத்து அரவு தோற்றமாயிருந்தும் அதைக் கண்டு அஞ்சிப் பயந்தோடும் அனுபவம் இருத்தலினாலும், தோற்றமாயிருக்கும் சொப்பன வுலகு சத்த பரிச ரூப ரச கந்தானுபவத்துக்கு வருதலினாலும் தோற்றமா யிருப்பது அனுபவத்திற்கு வாராமலிருக்கவேண்டு மென்பார் கேள்வி பயனற்றகேள்வியாய் நின்றதறிக.

"உலகத்தோற்றம்,ஆன்மாத்தோற்றம் என்று பிதற்றுவது சர்வாசங்கதமென்றறியக்கடவீர்" என்றார். ஆன்மாவாகிய பரிபூரண பிரமத்தினிடத்து உலகு: மனத்திற்றோன்றும் சொப்பன வுலகுபோல் தோன்றுகிறது என்பது

## சூதசங்கிதை விசேடசிருட்டி.

நிர்மல சிவன்றன் மாயையினால் கனாப்போல் நிருமிக்கப்பட்டனவெல்லாம்.()

என்பதினால் பெறப்படுதலின், 'உலகத் தோற்றம் ஆன்மாத் தோற்றம் என்று பிதற்றுவது' என்று பூர்வபட்சியார் கூறியது நூலாராய்ச்சியின்மையைக் காட்டுகின்றதென்க.

"தான் என்பது பிரமமா? சீவனா? பிரமமாயிருந்தால் தன்னைப் பிரமமென்று தெளியத்தக்க நிஷ்டை அதற்கு வேண்டுமெனல் அசங்கதமாம்."

என்றார். தான் என்பதற்குப் பொருள் விவகார தசையில் சீவனும், பாரமார்த்திக தசையில் பிரமமுமா யிருத்தலின், தன்னைப் பிரம மென்று தெளியத்தக்க நிஷ்டை பந்த தசையிலுள்ள சீவனுக்கே யன்றிப் பிரமத்திற்கன்றென்க. இது பற்றி விரிவாய்"மாயாவாதசைவசண்டமாருத" மென்னு நூலில் "பிரமத்திற்குச் சீவன் போலியாய் வேறென்பது" "பந்தமுத்தி" என்னு மகுடங்களின் கீழ்க் காண்க.

"எமது நிக்கிரக நூலில் சுருதிகளென்று காட்டியவை மூல வாக்கியங்களாயிராமல் அவற்றினர்த்தமாகவன்றோ எழுதப்பட்டிருக்கின்றன? அவ்வர்த்தம் சரியான அர்த்தமோ? தப்பர்த்தமோ? சரியான அர்த்தமாயிருந்தால், உமது ஆட்சேபத்திற்கு இடந்தராதென்று நினைக்கிறோம்" என்றத்வைதியார் கேட்டதாகவெழுதி அதற்கு விடை "அதுவும் நியாயந்தான். ஆயினும் அவ்வளவு மோசமிராது." என்றார். அத்வைத தூஷண நிக்கிரகநூலார் எடுத்தெழுதிய சுருதி வாக்கியங்கள் 'அவ்வளவு மோச மிராது' என்றெழுதியதினால் சிறிது மோசமுண் டென்று புலப்படுகின்றது. அம்மோசத்தை

இவர் என் எடுத்துக்காட்டவில்லை? எடுத்துக் காட்டாமல் "வற்றிய வோலை கலகலக்கும்' என்பதுபோல 'அவ்வளவு மோசமிராது' என்றுவீணே கூறுதல் பயனற்ற கூற்றுமென்க.

இதன்பேரில்

"மா. நல்லது இருக்கட்டும். பிரமகீதையில், முண்டகோபநிடதம் - ஐதரேயோபநிடம் கேநோபநிடதம் முதலியவைகளி னர்த்த வைபவங்கள் கேட்கப்படுகின்றன. அவற்றால் எமது அத்வைதஞானமே சித்திக்கின்றது. அது வெளியாமாறு சில பாடல்களை எமது கிக்ரகநூலா ரெழுதிக்காட்டியிருக்கின்றனர். அவைகளை நீர் பார்த்திருக்கலாம். அவைகளுக்கு என்ன சொல்லப்போகின்றீர் ?

பி. சூதசங்கிதை தமிழிற்பாடலாக அமைந்திருக்கின்றது. அதிற் பிரமகீதையடக்கம். அதில் நீர் குறிப்பிட்டபாடல்கள் காணும். தத்துவராயர் செய்த பிரமகீதையி லிருக்கலாம். யாவர் மொழிபெயர்த்ததாயினு மாகுக. அவற்றால் நீர் மெச்சிய (அத்துவிதம்) ஏகாத்ம வாதம் பெறப்படுவது எமக்கு விரோதமாகாது. மேலே யாம் சுருதிகளுக்குத் தாற்பரியஞ் சொன்னதுபோலவே இவைகளிடத்திலுங் கொள்ளக் கடவீர். அன்றியுமந்தப் பாடல்களில் பாஹ்யபூசை நிரசிக்கப்பட்டிருக்கின்றது. அது எமக்கும் சம்மதந்தான். இதை முன்னும் விரித்திருக்கின்றோம். இதிலொரு சூதிருக்கின்றது அறிந்துகொண்டீரா?

மா. தெரிவித்தல் வேண்டும். எமது அருந் துணையே.

பி. சூதசங்கிதை கூறும் வேதாந்தத்தில் சிவம் அதிஷ்டான மென்பதும், அதில் ஜகத்துக் கற்பிக்கப்பட்டதாகிய ஈலமும் வெளிப்படும். அதனால் சிவமே ஜகஜ்ஜந்மாதி காரணவஸ்து வென்றும், அதுவே எல்லாமென்றும் வேதாந்திகளு ளொருசாரர் கூறுவார். மற்றநூல்கள் கூறும் வேதாந்தத்தில், தான்=ஆத்மா அதிஷ்டானமென்பதும், அதில் ஜகத்துக் கற்பிக்கப்பட்டதாகிய விசுற்பமும் வெளிப்படும். அதனால், தானே ஜகஜ்ஜந்மாதிகாரண வஸ்துவென்றும், தானே எல்லாமென்றும் வேதாந்திகளுள் மற்றொரு சாரார் கூறுவர். இரண்டுவிதமும் அஸங்காத்ம வாதமாயினும், பிந்தியதைநோக்க முந்தியது குண முடைத்தாம். சைவசித்தாந்திகள் கூறும் சிவஸர்வோத்தம ஞானமே முடிவாகச் சூதசங்கிதையிற் பெறப்படுவதால், ஏகாத்மவாதத்திற் றலைப்படும் பிந்திய வேதாந்திகளை நோக்க முந்திய வேதாந்திகள் சிவப் பிரஸாதத்துக்கு அருகராயிதெல் சமீபிக்கின்றது."

என்று கூறினர்.

தனியே பிரமகீதையை யியற்றினவர் தத்துவராய சுவாமிகள். மொத்தமாய்ச் சூதசங்கிதையை யியற்றினவர் வல்லூர் தேவராஜ பிள்ளை அவர்கள். 'சூதசங்கிதை தமிழிற் பாடலாக வமைந்திருக்கின்றது. அதில் பிரம கீதையடக்கம். அதில் நீர் குறிப்பிட்ட பாடல்கள் காணும்' என்றிவர் கூறியதனால் தத்துவராய சுவாமிகள் சரியாய் மொழிபெயர்க்க வில்லையென்றும், தேவராஜபிள்ளை சரியாய் மொழிபெயர்த்தாரென்றும் புலப்படுகின்றன.

சம்ஸ்கிருத சூதசங்கிதைக்கு யார் இயற்றிய மொழிபெயர்ப்புச் சரியாயிருக்கிறது? யார் இயற்றிய மொழி பெயர்ப்புத் தப்பாயிருக்கிறது? சரியுா

யிருப்பது தத்துவராயர் மொழிபெயர்ப்பா? தேவராச பிள்ளை மொழிபெயர்ப்பா? என்று ஆராய்வதை விட்டு, 'தத்துவராயர் செய்த பிரமகீதையிலிருக்கலாம்' என்று சொல்வது நியாயமாமா? இனித் தத்துவராயர் இயற்றிய மொழிபெயர்ப்புக்குத் தேவராஜ பிள்ளை யியற்றிய ஷை மொழிபெயர்ப்புப் பாடல்கள் ஒத்திருக்கின்றனவென்பதை அடியில் இருவர் இயற்றிய பாடல்களைக் கொண்டு காட்டுகின்றோம்.

பிரமகீதை ரு-வது சாந்தோக்கிய உபநிடதம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

சாதனமாகும்சதுட்டயங்கள்சமைந்தஅந்தத்தன்மையர்க்கு
நீதியாகஅருமறைதானின்றேயிவர்களறியும்வணம்
பூதமாயும்புவனங்கள்பிறவுமாகியிருந்ததுவும்
ஏதமில்லாதொன்ருயபரமேயென்றேயியம்பினதால். (எ)

சூதசங்கிதை சூ-வது சாந்தோக்கிய உபநிடதம்.

தேவராஜபிள்ளை அவர்கள் பாடியது.

பேசுமந்தப்பரசிவனேபிறங்குசிரவணுதிபல
மாசில்சாதனங்களாற்றெரியத்தக்கோன்மற்றவற்குத்
தேசகாலகிருதபரிச்சேதமென்பதிலையாகும்
பாசமில்லாச்சருவவியாபகன்மற்றவனன்குணர்வீரே. (சு)

தத்துவராயசுவாமிகள் பாடியது.

எப்பொருள்களுந்தானுகியிலங்கிமேறிவாமீச
னப்படிவிளங்குகின்றதறிதலேயவன்றனக்கு
மெய்ப்படுபூசைவேறோர்செயவினைலன்றிமெய்யே
யிப்படிஞானந்தன்னுலிறைஞ்சிடப்படுவோனீசன். (அஅ)

தேவராஜபிள்ளை யவர்கள் பாடியது.

மேவவெங்கும்வியாபித்தவெளிகடாகாசாதிவிபாகத்தாலும்
பாவவவிபாகத்தாலுந்தோன்றுமெப்படியப்படியேயம்மா
தேவனுர்தோன்றுவன்றேன்றுகின்றதுதோன்ருதலெலாஞ்சிவசொரூப
மாவனவென்றுணர்ஞானஞ்சம்விதுசொரூபபரையாகுமாலோ. (கக)

ஷை சூ-வது அத்தியாயம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

நானுமந்தவரியமரர்ஞாலமொன்றுநரர்விவித
யோனியிந்தமுழுதுமதனுடெழுந்தசிறுதிவலை. (உசு)

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

துன்னுபரசிவமென்னும்பெருங்கடலுண்மறையோதுந்தொழிலியானு
மின்னுமுகின்மேனியனுமிருதிவலைத்தன்மையேமெய்ம்மையீதால். (கரு)

ஷை முண்டகோபநிடதம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது

கருமதற்பரராய்நாங்களேயெல்லாங்கற்றவரென்றிருக்கின்ற
பெருமிதமுடையார்மூடரேபிறவாநெறியையும்பெறுகிலார்பிறவிக்
குருடர்கைப்பற்றிப்போகியகுருடர்குழியிலேகூடவீழ்வதுபோல்
மருவியவினையுந்தாங்களுங்கூடமாய்வதேயன்றிமற்றிலையே. (௯)

ஷை முண்டகோபநிடதம்.

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

கருமமேயனுட்டிப்போர்கண்ணிலானொருவன்மற்றோர்கண்ணிலானை
வெருவிறுணையாக்கொடுசென்றெதிருறுகூவத்தழுந்தவிழுதலேபோற்
றறுதுயர்மோகத்தாலேபிரவிர்த்தியாய்ச்சமுசாரத்தில்வீழ்வார்
மருவதனான்ஞானமன்றிக்கருமத்தினாற்பந்தமாய்வுறுதே. (௬)

தத்துவராயசுவாமிகள் பாடியது.

மெய்ம்மைவிரதந்தவம்விழுப்பமுதலாகுஞ்
செம்மைதருநல்வினைகள்செய்தனுபவிக்கு
மிம்மைமறுமைப்பயனைத்துமிறைவன்பாற்
பொய்ம்மையறவேநிகழினுங்கனவுபோலாம். (௧௫)

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

அன்னம்பிராணன்மனஞ்சத்தியமுலகங்கருமத்தாம்பலாதி
பன்னரியநாமரூபாதிகமாமெல்லாஞ்சொப்பனப்பவஞ்சந்
தன்னைநிகராகவுண்டாமப்பரமசிவசொரூபத்தனிஞானத்தான்
மன்னுசமுசாரமெலாநிவிர்த்தியாமின்பமுத்திமருவுமாலோ. (௫)

தத்துவராயசுவாமிகள் பாடியது.

எங்குநிறைந்தபரத்தினிலோகமெழுந்தழியும்படிதா
னங்கியெழும்பொறிபோலும்அசம்புறமாயதுமாயையெனுங்
கங்குல்கடந்துயிருக்குயிராயொருகாலழிவற்றகமா
யங்கபிராணன்மனங்களறுஞ்சிவனாகியவக்கரமே. (௧௨)

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

ஆதலினாற்சிவஞானசித்திபுறக்குருபணிநன்காகச்செய்து
போதவனனுக்கிரகம்பெறவேண்டுமெழலிலெழுபுலிங்கமீட்டுஞ்
சேதமிலவ்வழலிடத்தேயிலயமாகுதல்போலச்சீவரெல்லா
மேதகுநற்சிவத்திடத்தேயிலயமாகுவரென்பர்மேன்மையோரே. (௭)

ஷை. கேநோபநிடதம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

எப்பொருளுமாயையினாலெனச்சிலவரியம்புவர்கள்
மெய்ப்பரமன்றனையொழியவேறொருமாயையுமில்லை
யொப்பரியபரனொழியவொருமாயையுண்டாகி
லப்பரமன்றன்பெருமைக்கதுநேரேயழிவன்றோ. (௨௭)

ஷ சாமசாகோபநிடதம்.

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

உத்தமவத்தகையோற்குத்தள்ளறழுவப்படுசலொன்றமில்லை
யொத்தபரசிவற்கயலாமாயையினெச்சசமுமூண்டென்றுரைப்பர்சில்லோர்
பெத்தமின்மாதேவனுடைமகத்துவத்திற்கனுபபத்திப்பிரசங்கந்தான்
சித்தமருவுறவருமாதலினவ்வாறெஞ்ஞான்றுஞ்செப்பொணுதே. (கக)

ஷ கேநோபநிடதம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

பரமாத்துவிதஞானியேபரதேவதைதானவனேயித்
திரமாமுத்தியானிங்குச்செப்பும்பொருள்செய்வினையாலும்
உரமாந்ததீசிகௌதமனுலுண்டாஞ்சாபவுரையாலுங்
கரமாமனிதர்நெஞ்சுதனிற்காதல்செய்யாதொருகாலும். (ருசு)

ஷ சாமகோபநிடதம்.

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

பரமவத்துவிதவிந்தஞானத்தாற்பகருமுத்தியுண்டாதல்
சரதமேதவஞ்சால்கௌதமன்றதீசிசாபத்தான்முன்செய்பாவத்தால்
வரமுறிவ்வருத்தந்தோன்றமாட்டாதுவளர்சிவசம்பந்தமான
புரவுசேர்விபூதிமுதலெவற்றினும்வர்தொன்றுறம்புகர்புரிவெறுப்பே.

ஷ ஐதரேய உடநிடதசேடமும் தைந்திரிய உபநிடதமும்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

யாதொருபொழுதுகாட்சிமுதலிலதாம்பரத்திற்
பேதமதறவுணர்ந்தான்அப்பொழுதபயனுகிக்
கோதிலாவமுதமெய்துங்கூடுமேற்சிறிதுபேதஞ்
சாதலும்பிறப்புமச்சம்சார்தலுஞ்சங்கையில்லை. (உ௫)

ஷ தைத்திரிய உபநிடதம்.

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

பிரமன்முதற்றுருபரமிருப்பேசாகின்றவுலகமெலாம்
பரவுமந்தப்பரசிவனேபண்பாரந்தப்பரசிவன்றன்
சொருபஞானமுள்ளோனேதுலங்குசீவன்முத்தனுங்
கருமமாதிகளாற்சீவன்முத்தனுகான்கடைப்பிடிமின். (அ)

ஷ கடவல்லியோடு சுவேதாசுவதர உபநிடதம்.

தத்துவராயசுவாமிகள் பாடியது.

ஏயபேருலகில்வினைப்பயனுகர்ந்தங்கிதயமேமருவுவாரிருவர்
சாயையாதபமாகின்றனர்சீவசங்கரரென்றிடத்தகுவா
ரோயுமாறறவேயுண்பவன்சீவனூட்டுவொன்சிவனிவர்தமக்கின்
காயபேதந்தானுபாதியால்வந்ததல்லதபேதமேயாகும். (கூ)

தேவராஜபிள்ளையவர்கள் பாடியது.

உடம்பினிருதயவெளியின்மத்தியிற்சீவேச்சுரருள்ளாரன்றரு
ளடங்கரியகன்மபலஞ்சீவனோ ஞானுமனுபவிட்டான்
மடங்கவற்றுமீச்சுரல மற்றனுபவயா னாயின் பற்றிவர்க்குத்
தொடங்குபரமார்த்தத்திற்பேதமிலையென்றுணர்வீர் தூயவானீர். (ஞ)

மேற்காட்டிய பாடல்களால் தேவராஜபிள்ளை யியற்றிய சூதசங்கிதையி லுள்ள பிரமகீதையும், தத்துவராய சுவாமிகளியற்றிய பிரமகீதையும் ஒத்துப்போயினமையின, பூர்வபட்சியார் ஆராயாதே கூறினரென்பது பசுமரத்தாணியா யுறுதிப்பட்டதென்க.

“அவசரக் காரனுக்குப் புத்திமட்டு” என்னும் பழமொழிப்படி பூர்வபட்சியார் எதையும் ஆராயாமலே மனப்போக்கின்படி பேசி அவமான மடைகின்றார். இவர் போன்றாரைப்பற்றித்தான்

“பொய்படுமொன்றோ புனைபூணுங்கையறியாப்
பேதை வினைமேற்கொளின்”

என்று குறளும்,

வாழ்நாளைப், போக்குவார்புல்லறிவினார்.”

என்று நாலடியும் கூறி இருக்கின்றனபோலும்.

இவர் மேலிடத்தில் சுருதிவாக்கியங்களுக்குச் சொன்ன தாற்பரியம் பயனில் மொழியென்பது யாம் மறுத்த மறுப்பினால் நன்கு விளங்கினமையின் ‘மேலே யாம் சுருதிகளுக்குத் தாற்பரியஞ் சொன்னதுபோலவே இவைகளிடத்துங் கொள்ளக் கடவீர்’ என்பது பயனில் மொழியென்று விடுக்க.

சுருதிவாக்கியங்களுக் கிவர் கூறிய குருட்டுத் தாற்பரியம் சூதசங்கிதையிடத்துக் கூற மார்க்கமில்லாமையினாலன்றோ ‘இவைகளிடத்துங் கொள்ளக் கடவீர்’ என்று, விளக்கிக்காட்டாது வாளா கூறி நின்றார்? இத்தகைய விவர், சூதசங்கிதையிடத்துத் தங் குருட்டுத் தாற்பரியத்தைச் சொல்லாமல் விட்டமையால் அக்குருட்டுத் தாற்பரியத்தை மறுத்தற்கு இங்கு இடனில்லாது போயிற்று. இதுபற்றி யாம் மிகு விசனமுறுகின்றோம்!

முன்னர்ப் பாகியபூசை: புனர்ஜன்மத்தையும் போகத்தையுங் கொடுக்குமேயன்றி மோட்சத்தைக் கொடாதென்று கூறிய மைத்திரேயோபநிஷத்வாக்கியத்தை மறுத்து அது பைபில் வாக்கியத்திற்கினமா யிருக்கிறதென்று கூறி நிந்தித்த பூர்வபட்சியார் ‘ஈண்டும் அதுபோலவே நிலையாயிராது, அந்நிலை தவறினதன்றி அந்தப் பாடல்களில் பாஹ்யபூசை நிரசிக்கப்பட்டிருக்கிறது. அது எமக்கும் சம்மதந்தான்’ என்று நாணமின்றிக் கூறியது மாறுகொளக் கூறியதன்றோ? முன்னுக்குப் பின்னுதைத் தக் சொல்லுமாறு பேசுமிவரது வாதம்: “கல்லாவொருவர்க்குத் தம் வாயிற் சொற்கூற்றம்” என்னும் நான்மடிக்கடிகை செய்யுளடிக் கினமா யிவர்க்கே கூற்றமாய் நின்றதென்க.

‘சூதசங்கிதை கூறும் வேதாந்தத்தில் சிவம் அதிஷ்டானமென்பதும், அதில் ஜகத்துக் கற்பிக்கப்பட்டதாகிய நலமும் வெளிப்படும். அதனால் சிவமே ஜகஜ்ஜந்மாதி காரண வஸ்துவென்றும் அதுவே எல்லாமென்றும்

வேதாந்திகளுள் ஒருசாரார் கூறுவார்' என்றும், 'மற்றநூல்கள் கூறும் வேதாந்தத்தில் தான் = ஆத்மா அதிஷ்டானமென்பதும், அதில் ஜகத்துக் கற்பிக்கப்பட்டதாகிய விகற்பமும் வெளிப்படும். அதனால் தானே ஜகஜ்ஜந்மாதி காரண வஸ்துவென்றும், தானே எல்லாமென்றும் வேதாந்திகளுள் மற்றொருசாரார் கூறுவர்' என்றும் கூறி, அதிலிருக்கிற சூதை விளக்கிய பூர்வபட்சியார்க்கு வேதாந்தத்தின் பேதத்தை விளக்கிவைத்த குரு வேதாந்த சாஸ்திரத்தில் புலியாய்த்தா னிருக்கவேண்டும். இல்லாவிட்டால் அதிலிருக்கிற சூதை விளக்கிவைக்க முடியவே முடியாதுதான். அல்லது இவரே குருமுகத்திலன்றித் தம்முடைய சுய புத்தியா லறிந்துகொண்டிருந்தால் இவரைப் பார்க்கிலும் வேதாந்த சாஸ்திரத்தில் புலியாயுள்ளவர் ஒருவரும் இரார்! இரார்!! சூதசங்கிதை கூறும் வேதாந்தத்தில் சிவத்தில் சகத்துக் கற்பிக்கப்பட்டிருக்கிறதென்று கூறியதனால் அது ஆத்மாவில் சகத்துக் கற்பிக்கப்பட்டிருக்கிறதென்று கூறவில்லையென்று பெறப்படுகின்றது. அவ்வாறாயின்

சூதசங்கிதை கூ-வது சாந்தோக்கிய உபநிடதத்தில்

அனையபரனிடத்தாரோபிதமானபவஞ்சமவற்கதீதமான
புனையொளியுண்டாயிருக்கும்பொருந்துமுடலாதிகட்குப்புசல்வேறான
வனைபுகழ்க்கேவலான்மாவையொன்றேனும்பரிசிக்கமாட்டாதம்ம
நினைதருமவ்வான்மாவேநாமரூபாதிகளைநிருமித்திட்டோன். (கூ)

என்று இச்செய்யு ளிருத்தலும், இதுபோன்ற செய்யுட்கள் பலவிடத்திருத்தலும் அநாவசியமாகின்றன. ஈங்கு ஆன்மாவென்று சூதசங்கிதை கூறியது சிவம் என்றே விளங்குதலின், இவர்: ஆன்மாவினிடத்துச் சகத்துற்பத்தியென்று சூதசங்கிதை கூறவில்லையென்றும் வேதாந்திகளுள் ஒருசாரார் ஆத்மாவினிடத்து உலகோற்பத்தி கூறுவரென்றும் கூறிய கூற்று அவிசாரக் கூற்றாய் நின்றதென்க. சூதசங்கிதை யில்லாத மற்ற நூல்களில் கூறும் வேதாந்தத்தில்ஆத்மாவில் ஜகத்துக்கற்பிக்கப்பட்டதென் றிவர் கூறியதனால், அவையிற்றில் சிவத்தில் உலகு கற்பிக்கப்பட்டிருக்கிறது என்று கூறாமல் சீவனில் உலகு கற்பிக்கப்பட்டிருக்கிறதென்று கூறியதாக ஏற்படுகின்றது அங்ஙனமாயின்,

வாசுதேவமனனம் ஆத்மானாத்மநிரூபகம்.

"ஸ்தூல சூட்சும காரண சரீரமான பஞ்சகோசங்களுக்கும் வேறிருத்தனாய் அவஸ்தாத்திரய சாக்ஷியாய் நித்தியனாய் நிருவிகாரியாய் நிஷ்கிரியனாய் நிருபாதிகனாய் நிர்லேபனாய் நிச்சம்டனாய் நிரந்தரியனாய் நிருமலனாய் அசங்கனாய் அனந்தனாய் அகர்த்தாவாய் அபோக்தாவாய் அசரீரியாய் அப்பிராணனாய் அமனசனாய் அசலனாய் அபோதசுவரூபனாய்ச் சுவயம்பிரகாசனாய்ச்சுத்தனாய்ப் புண்ணியபாவத்தினால் பரிசிக்கப்படாதவனாய்ப் பரமாநந்த சொரூபனாய் விளங்கப்பட்டவனே ஆத்துமாவென்று சொல்லப்படும்."

என்றும்,

ஞானவாசிட்டம் இட்சுவாகுகதை.

முழுதவடிவாயொன்றாமான்மாமுழுதுசத்தியினுங்
கெழுமுநதியிலுவரிகளிற்கீலாலம்போனின் றொளிரு
மொழிவினினைவின் பரப்பிலதாயொன்றாஞ்சற்பாவந்தன்னிற்
றழுவுகூறுமாத்திரமாயுணர்வாய்ச்சகலசகங்களையும். (சுகூ)

என்றுமுள்ள

சூதசங்கிதை யல்லாத நூல்களில் சொன்ன ஆன்மா சீவன் என்று சொல்லப்படுமோ? படாதன்றோ? படாதாகவே, சூதசங்கிதை கூறும் சிவம் ஆன்மாவேயென்றும், மற்ற நூல்களில் கூறும் ஆன்மா சிவமேயென்றும் பெறப்படுதலின், வேதாந்திகளுள் ஒருசாரார் சிவத்தில் உலகு கற்பிதமென்று கூறுவார்களென்பதும், மற்றொருசாரார் ஆத்மாவில் உலகு கற்பிதமென்று கூறுவார்களென்பதும் ஆபாசத்தினும் ஆபாச மொழியாமென்க. வேதாந்தத்தினுண்மை இஃதென்று அணுத்துணையும் உணராமலே வேதாந்தத்தி லிருபிரிவை யுண்டாக்கவந்தஇப்பூர்வபட்சியாருக்கு ஒப்பு "நஞ்சு நெருப்பு நரகு நிகரன்றிழிந்தோர், தஞ்சொலுக்குத் தானேநிகர்" என்னுஞ் செய்யுளின்படி ஒப்பு மற்றொருவ ரின்றென்க.

வேதாந்தத்தி லிவர் கூறிய பிரிவினை யிவ்வளவு ஆபாசமாய் நின்றமையின் 'இரண்டுவிதமும் அசங்காத்ம வாதமாயினும்' என்று சூதசங்கிதையையும் சேர்த் திகழ்ந்து பின்னர் 'பிந்தியதை நோக்க முந்தியது குணமுடைத்தாம்' என்றது யாதுபயனைக் கருதியோ?

## தாயுமானவர் மாயையை இல்பொருளென்றே கூறினரென்பது.

தாயுமானவர் அத்வைதியென்றும், அவரது மடத்தில் அத்வைதசாஸ்திரத்தைப் படிக்கின்றாரென்றும் "மாயாவாதசைவசண்டமாருத" மென்னு நூலின் 71, 72, 73,74,75,127,128,129,130,131,132,133,134,135,182, 183,184,185 வது பக்கங்களில் விரிவாய் வந்திருக்கும் விஷயங்களுக்குப் பதில் கூறாது, மீண்டும் "அடித்தாலுமடித்தாலும் அப்படித்தான் சொல்லுவேன்" என்பதற் கிணங்க, தாயுமானவர் விஷயமாக மறுக்கப்பட்ட விஷயத்திலேயே சிலவற்றை மீண்டும் பேசுகின்றார். அது

"தாயுமானவர் பாடல் 'அண்டபகிரண்டமும் மாயாவிகாரமே அம்மாயை யில்லாமையே' என்று கூறியவா றென்னை?" என்று அத்வைதியார் வினவியதாக வெழுதி, அதற்கு விடை "அண்டபகிரண்டங்கள் மாயாவிகாரமென்று சொன்னது சைவசித்தாந்தமாம். பிரமத்தின் விகாரம் அல்லது தன்னுடைய விகாரமென்று சொல்லியிருந்தால் அதை யெடுத்து நீர் கொஞ்சலாம்" என்பது.

தாயுமானவர் "அண்டபகிரண்டமும் மாயா விகாரமே அம்மாயையில்லாமையேயாம்" என்றது "எவள் வாஸ்தவத்தில் இல்லையோ, அவள்தான் மாயை" என்று கூறிய ஸர்வஸாரோப நிஷத்து வாக்கியத்தையும், "அபாவ மாமனையமாயை" என்று கூறும் சூதசங்கிதையையும் தழுவிக் கூறினரேயன்றி, இவரது அவைதிக துவித மாயா சித்தாந்தத்தைத் தழுவிக் கூறியதின்றாமென்க. இன்றாமாக, இவர் 'சைவசித்தாந்தமாம்' என்று கூறுவது: தாயுமானவர் அருளிய

"வேதமுதலாய் விளங்குஞ் சிவவடிவாம்
போதநிலையிற்பொருந்தாம—லேதமிகு
மோகாதிபல்லலிலேமூழ்கினையேநெஞ்சேயித்
தேகாதிமெய்யோதெளி."

என்றசெய்யுளால் மறுக்கப்பட்டுப்போயதென்க. மறுக்கப்பட்டுப் போய தெவ்வாறெனின், 'அது பூர்வபட்சியார் வேதத்தைப் பாட்டிச்சதை' யென்றும், 'அலக்கணுண்டுபோகும் போத'மென்றும், 'உபநிஷத்தென்று பூச்சிக்காட்டியதனுற்ருனே யாம் அஞ்சுவோமோ' என்றும் முன்னர்க் கூறியிருப்பதினுலும தாயுமானவர் வேதமுதலாய் விளங்கும் சிவபோத நிலையிற்பொருந்தவேண்டு மென்றருளியதாலும் விளங்கும்.

தாயுமானவர்: அண்டபகிரண்டங்கள் மாயாவிகாரமென்றும் அம்மாயையில்லாமையையே யிலக்கணமாகவுடையதென்றுங் கூற, இவர் 'பிரமத்தின் விகாரம் அல்லது தன்னுடைய விகாரமென்று சொல்லியிருந்ததால் அதையெடுத்து நீர் கொஞ்சலா' மென்பது பொருத்தமன்றெனக.

அப்பால் "'அம்மாயையில்லாமையே' என்றுகூறியதுஞ் சைவசித்தாந்தமோ" என்று அத்வைதி வினவியதாக வரைந்து, அதற்கு மறுமொழி

"சிவஞானபோதம் 'யாவையுஞ் சூனியஞ்சத்தெதிர்' என்று கூறுகின்றது. சத்தின் முன்னர் அசத்து முனைத்துத் தோன்ருதென்கையால், முதலில்லை யென்பது கருத் தன்ரும். அரசனது சந்நிதியில் அமைச்சன தாற்றல் சூனியம் என்பது அவனது அதிகாரம் முனைத்துத் தோன்ருதென்பதாம். அதனைலவனது அதிகாரத்துக்கு அபாவஞ் சொல்ல விசையுமோ? இவ்வாறு தெளிந்து தாயுமானவர் பாடலுக்கு உரையியற்றக் கடவீர். "பொய்கண்டார் மெய்கண்ட நூலைப் பின் பற்றினவ ரென்பது நீரறியீர். "பொன்னடியை மேவுநாளோங் காணப் புனிதமாமத் துவித-மெய்கண்டான் பொன்னடியை மேவுநா ளோ" என்ற வமுதவுரையால் அவரதுண்மையை யறிந்திடக்கடவீர்'

என்ருர் சத்தின் முன்னர் அசத் தின்றென்பதற் குவமானமாகக் கண்ட ப்பொருளாகிய அரசனையும் அமைச்சனையும் எடுத்துக் காட்டுதல் பொருத்தமன்று. எனெனில் அரசனில்லாவிடத்து அமைச்சனும் அமைச்சனுள்ள விடத்து அரசனு மில்லாதிருப்பதுபோன்று, பிரம மில்லாவிடத்து மாயையும் மாயை யில்லாவிடத்துப் பிரமமு மில்லாமலிருக்கின்றனவா? அரசனில்லாவிடத்து அமைச்சன் தன் ஆற்றலைச் செலுத்துமாப்போல, பிரம மில்லாத எவ்விடத்து மாயை தன தாற்றலைச் செலுத்துகின்றது? செலுத்துமென்பதசம்பவமன்ருே? அரசன் முன்னிருக்கும் அமைச்சன், அரசனைப்போலச்சத்தா யிருப்பதுபோன்று பிரமத்தின் முன்னர் மாயை சத்தா யிருக்குமாயின் சிவஞானபோதம் 7-ஞ் சூத்திரத்தில் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலின், சத்தேயறியாது" என்று கூறி, பின்னர் "அசத்திலது" எனப் புகன்று, 9-ஞ் சூத்திரத்தில் "ஊராத்துனைத் தேர்த்தெனப்பாசமொருவ" என்று பாசம் அல்லது மாயைக்கு உவமானம் பேய்த்தேரைக் கூறுவானேன்? கூறியதனுல் மாயை சத்தாகிய பிரமத்தின் முன்னர் அசத்து அதாவது இலதென்றே பெறப்பட்டதென்க. சிவஞானபோதமானது ஷை சூத்திரங்களின்படி மாயையை இல்பொருளென்று கூற, இவர் அரசன் அமைச்ச உதாரணங்களைக் காட்டி யுள்பொருளென்றுகூறுதல் மயசக வுணர்வென்றுணர்க. சிவஞானபோதம் 3-வது சூத்திர வுரையில் சிவஞான சுவாமிகள் சிவஞானபோதம் மூன்ருவது சூத்திரச் சிற்றுரையில் சூனியத்திற் கிலக்கணம் "சூனியமாவது உள்ளது மன்று, இல்லது மன்று, இரண்டுமாவது மன்று, வேறெனப்படும் பாழ்" என்று கூறினர். ஈண்டு அவர் சூனியத்திற்குக் கூறிய இலக்கணம்

வாசுதேவ மநநம் இராகத்துவேஷாதிப் பிரகாணம்.

(சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.)

"அஞ்ஞானத்தின் சொரூப லட்சணம் எப்படியெனின், அந்த அஞ்ஞானம் சத்துமல்ல, அசத்துமல்ல, சதசத்துமல்ல, பின்னெதுவெனின் அநிர்வாச்சியமே"

என்றுள்ளதற் கொத்திருத்தலின், சூனியமென்பது அநிர்வாச்சியமென்றேற்பட்டது; படவே, சூனியம் என்பதை அரசன் அமைச்ச வுதாரணங் காட்டிப் பூர்வபட்சியார் உள்பொருளென்றது தப்புரையினும் தப்புரையாய் நின்றதறிக. மேலும் தாயுமானவர் "ஆசையெனும்" என்பதில்

போதமென்பதேவிளக்கொவ்வும்அவித்தைபொய்யிருளாம்
நீதிலாவிளக்கெடுத்திருட்டேடவுஞ்சிக்கா
தாதலாலறிவாய்நின்றவிடத்தறியாமை
யேதுமில்லையென்றெம்பிரான் சுருதியேயியம்பும்.

என்று சுருதி நெறியைக் கடைப்பிடித்து மாயையைப் பொய்யிருளென்றுரேயன்றி, இவர்கூற்றின்படி மாயையை யுள்பொருளென்று கூறினாரில்லை; இல்லையாகவே, 'அரசனது சந்நிதியில் அமைச்சனது ஆற்றல் சூனியம் என்பது அவனது அதிகாரம் முனைத்துத் தோன்றுதென்பதாம். அதனாலவனது அதிகாரத்துக்கு அபாவஞ்சொல்ல விசையுமோ' என்றிவர் கூறியது பூர்வ பட்சமாயிற்றென்க. பரிபூரணமான பிரமத்தில் மற்றொரு பொருளிருத்தல் சிறிதுங் கூடாதாகவே பிரமபூரணத்தில் மாயை சத்தாயிருப்பது முடியாது. முடியாதாகவே, அரசனிடத்து அமைச்சனைப்போலப் பின்னமாயிருந்து மாயை தனது ஆற்றலைச்செய்வது எவ்வாறும்?

வேதசம்மதப் பிரகாரம் இன்மையையே தனக் கிலக்கணமாய்ப் பெற்ற மாயையினை யுள் பொருளென்று கூறுவோர்: இன்மையாகிய உலகத்தை யுண்மையென்று கூறும் வேதபாஹிய சார்வாக மதத்திற் சேர்ந்தவரென்பதற்கு ஆசங்கை யாதென்க. இதுபற்றி விரிவா யறியவிரும்புவோர் "துவைதாத்வைத வாதம்" என்னும் நூலின் 115 வது பக்கமுதல் 124 வது பக்கவரையிலும் காண்க.

தாயுமானவர் 'பொய்கண்டார் காணப் புனிதமெனு மத்துவித மெய்கண்டான் பொன்னடியை மேவுநாளெந்நாளோ' என்றது

வள்ளலார் சாஸ்திரம்

பதிபசுபாசவிளக்கம் பசுவிளக்கத்தில்

பாசத்தாற்பசுவெனப்பகரப்பட்டன
பாசந்தானிரிதரப்பதியெனப்படும். (க)

ஷ ஞானநநுமான்மியத்தில்

சத்தியஞ்சிவன்சங்கரனென்றே
குற்றமிலன்மறைகூறும்வகுத்தே. (உ)

ஷ மகாவாக்கிய விலக்கணத்தில்

பொன்னையன்றிப்பூணில்லைபூணையன்றிப்பொன்னில்லை
யென்னையன்றிச்சிவனில்லைசிவனையன்றியானில்லை
யின்னவண்ணமறிந்தோனேயீசன்றனையுமறிந்தோனு
மின்னவண்ணமறியாதானீசன்றனையுமறியானே. (கூ)

ஷை சித்தாந்ததரிசனம் பதியியலில்

அத்துவிதத்துக்கருத்தம்பலவென்னும்
சிற்றறிவுகொண்டுசிலகீழ். (ருக)

ஷை பாசமோசனவியலில்

சீவனத்தாற்சிவனெனல்சீவனிறந்தாலிந்தச்
சீவனேயந்தச்சிவம். (கூஉ)

ஷை சுருதிசார விளக்கம் மூன்றுய் வாக்கியத்தில்

அறிவையன்றியறியப்படும்பொருள்
சிறிதுமில்லை. (ககூ)

என்று கூறிய சிவஞானவள்ளலார்: சித்தாந்த தரிசனத்தினது பாயிரத்தில் "துவிதத்தை யனுவாத முன்பு செய்து அத்துவிதமே சொல்லும் ஈற்றில்" என்ற சூதசங்கிதைபோன்ற பிரமாணத்தைக் கைப்பற்றி, அத்துவித ஞானத்தை யடைதற்குச் சாதனமாயுள்ள நூல்களில் மெய்கண்டார் நூலும் ஒன்ருயிருப்பதுபற்றி

மெய்கண்டேன்மேற்பிறவிகாணேன்றிருவெண்ணை
மெய்கண்டானூலைவினவி. (க0)

என்று கூறியதுபோலன்றி யிவரதுசித்தாந்தத்தை யுடன்பட்டுக்கூறியதன்றென் றுணர்க. தாயுமானவர் மெய்கண்டாரைத் துதித்துவிட்டதினுலேயே சூனியம் என்பதற் கருத்தம் உள்பொருள் என்று எற்படாதென்பது அத்தாயுமானவர்: "முற்றுமில்லாமாயை" "அவித்தை பொய்யிருளாம்" "அகிலமாயை கான்முயற் கொம்பே யென்கோ கானலம் புயலே யென்கோ வான்முக முளரியென்கோ" என்று கூறியதனுல் நன்குவிளங்கும். தாயுமானவர்: மாயைபொய்யென்றும் அதற் குவமானம் முயற்கோடு, கானனீர், ஆகாயத்தாமரை யென்றுங் கூறுகின்ருர்; இப்பூர்வபட்சியாரோ அவரது அபிப்பிராயத்திற்கு மாருக மாயையை யுள்பொருள் என்று கூறி அரசனமைச்ச வுதாரணங் காட்டுகின்ருர். தாயுமானவரது அபிப்பிராயத்தை அறியாது அவரது நூலைத் தமக்குப் பிரமாணமாகக் கொள்ளுதல்: அயல் நாயகனது அபிப்பிராயத்தை அறியாது அவனைத் தனக்கு மணவாளனென்று மனப்பால் குடிக்கும் மங்கையின் செய்கைக்கு இனமென்று விடுக்க.

"ஆயின் அவர் 'பாராதியண்டமெலாம் படர்கானற்சலம்போல்" என்றவாறென்னை ? அன்றியும் 'தேன்முகம் பிலிற்றும்' என்னும் பாடலில் உலகத்தை முயற்கொம்பு-கானற்சலம்-ஆகாயத்தாமரை என் றுவமித்தவாறென்னை" என்று அத்வைதியார் வினவியதாக வெழுதி, அதற்கு விடை "ஞானிகளுக்கு உலக மனுபவத்திற்கு வராதென்பதற் கிவை யுவமையே தவிர வேறில்லை. 'அஞ்ஞானிக்கேது சிவ மப்படியே யாகுங்காண்-மெய்ஞ்ஞானிக் கிவ்வுலகம்' என்றதனுலு மறிக."

என்ருர். இவ்வாறு சுந்தரனென்பா ரொருவரும், அரக்கோண வீரபத்திரமூர்த்தி யென்பா ரொருவரும் முன்னர்ப் பேசி அத்வைதிகளால் மறுக்கப்பட்டார்கள். அம் மறுப்பு 'துவித சைவரே மாயா வாதிகள்" என்னும் நூலின் 46-வது முதல் 49-வது பக்கவரையிலும், "மாயாவாதசைவசண்டமாருதம்" என்னும் நூலின் 53-வது பக்கமுதல் 57-வது பக்கவரையிலும், ஷை நூலின்140-வது பக்கமுதல் 142-வது பக்கவரையிலும் விரிவாய் வந்

திருக்கின்றது. இவர் அதைப்பற்றி ஏதும் பேசாது மீண்டும் முன் மறுக்கப்பட்ட விஷயத்தையே பெயர்த்தும் பேசுத லறிவுடைமையன்று.

ஞானிகளுக்கு அனுபவத்திற்கு வாராமை காரணமாக வுலகு பொய்யாயின், அஞ்ஞானிகளுக்கு அனுபவத்திற்கு வாராமை காரணமாகச் சிவமும் பொய்யாக வேண்டுமே. பூர்வபட்சியார் கூற்றின்படி அனுபவத்திற்கு வருவது மெய்யாயும், அனுபவத்திற்கு வாராதது பொய்யாயும் ஆகவேண்டுதலின், கயிற்றரவும் கானனீரும் சொப்பனவுலகும் அனுபவத்திற்கு வருகின்றமைபற்றி மெய்யும் கடவுள் அனுபவத்திற்கு வாராதிருப்பதைப்பற்றிப் பொய்யுமாகவேண்டும். ஆகவே, அனுபவத்திற்கு வருவது மெய்யென்றும் வாராதது பொய்யென்றும் கூறுகின்ற நாஸ்திகமதத்தரி லிவரும் ஒருவ ரென்பதற்கு யாது தடை? உலகு பொய்யென்பதற்கு உவமானமாக வெடுத்த கானல் நீர், முயற்கொம்பு, ஆகாயத்தாமரை முதலியன அனுபவத்திற்கு வாராமை காரணமாகவா? விசாரணை காரணமாகவா? அனுபவத்திற்கு வாராமை காரணமாக வென்பதில் மேற்கூறியபடி அநேக ஆசங்கைக ளுண்டாகின்றமையின் விசாரணை காரணமாகவே என்பதற்கு யாதுந் தடையில்லை யென்க.

தாயுமானவர்

விதிக்கும்பிரபஞ்சமெல்லாம் - சுத்த
வெயில்மஞ்சளென்னவே வேதாகமங்கள் மதிக்கும்.
பாராதிபூதநீயல்லை - உன்னிப்
பாரிந்திரியங்கரணநீயல்லை
யாராயுணர்வுநீயென்றான்.
ஞாலத்தைமெய்யெனவே நம்பிநம்பிநாளுமென்றன்
காலத்தைப்போக்கி யென்னகண்டேன்பராபரமே.
சகம் பொய்யெனத் தம்பட்டமடியே.

என்று கூறியது அனுபவத்திற்கு வந்தமை காரணமாகவா? விசாரணை காரணமாகவா? அனுபவத்திற்கு வந்தமை காரணமாகவெனின், உலகைப் பொய்யெனப்படாது. விசாரணை காரணமாகவெனின் பொய்யெனக்கூடும். கூடவே, ஞானிகளுக்கு உலகம் பொய்யென்பதும் அதற் குவமானமாகக் கானனீர், முயற்கோடு, ஆகாயத்தாமரை முதலியனவற்றை யெடுப்பதும் விசாரணை காரணமாகவென் றுணர்க.

உலகம் பொய்யென்பது விசாரணையாற்றான் என்பது

மகோபநிஷத் 4-ம் அத்தியாயம்.

"பாலைநிலத்திற்றோன்றும் சலமுழுதும் பாலைநிலமேதவிர வேறில்லை; மூன்றுலகமும் சகலப்பிரபஞ்சமும் விசாரணையினால் சின்மாத்திரந்தானே."

என்றுள்ள வாக்கியத்தால் நன்குவிளங்கும்.

## துவிதாத்துவிதம்.

"துவைதாத்வைதம் என்பன சித்தாந்திகளது சொந்த சொத்தாயின. இவற்றுள் ஒவ்வொன்றினைக் களவாடித் தியங்குவாராயினர் ஏனைய சமயிகள்............அவற்றிற்குத் தனித்தனிப் பொருள் கூறுங்கால், ஒருவரோடொருவர் பிணங்கிப் பேதையராயினர்"

என்முர். தனித்தனியே தம்பியோடும் தமயனேடும் பகைக்கு மொருவ னுக்கு அவ்விருவரும் உறவாகாது நீங்குவதுபோல, துவித சித்தாந்தத்தை யும் அத்துவிதசித்தாந்தத்தையு மறுத்து, துவிதிக ளாகாமலும் அத்துவிதிக ளாகாமலும் திரிசங்குசுவர்க்கம்போல உபயப் பிரஷ்டரா யிருக்கின்றவர்களு க்குத் துவைதாத்வைதம் சொந்தமாயிடுதெல் யாங்ஙனம் ? இப்படிப்பட்டவர் ஒரு மதஸ்தராவதுதான் யாங்ஙனம் ?

'ஒவ்வொன்றினைக்களவாடித் தியங்குவார் ஏனையசமயிகள்' என்றபோது இரண்டினையும் களவாடித் தியங்குவார் இவர் சமயிகள் என்பதற்கு ஆட் சேபமென்னை? 'அவற்றிற்குத் தனித்தனிப் பொருள்கூறுங்கால் ஒருவரோ டொருவர் பிணங்கிப் பேதையராயினர்' என்றபோது அவ்விருவரோடும் பிணங்கிப் பொருள்கூறிய விவர் சமயிகள் பேதையரினும் பேதையராயின ரென்பதற்குச் சங்கையென்னை? பூர்வபட்சியார் இவ்வாறு யோசனையின்றி ப் பொருத்தமாகாத விஷயங்களை யெழுதி, ஆபாசவினுவிடையை நிரப்பி விட்டாராகலின், இவர்கூற்றின்படி இவ்வாறு எழுதிய சுவடிக்கே 'பீற்றற் சுவடி'யென்னும் பெயர் பொருந்துமென்க.

"முத்தியில் சீவேசபேத மில்லை யென்று நீவிர் கொண்டவாறு அத்து விதச் சொல்லை யாசிரயித்த சமயிகளெல்லாம் பொருள் கோட லுண்மையா யின், அத்வைத தூஷணஞ்செய்தார் நாயகர் என்ற நும்பழுரை பலிக்கும்" என்முர்.

முத்தியில் சீவேசபேச மொப்புகிறவர்கள் எவராயினும் சரி, அவர்கள் துவைதிக ளாவார்களே யன்றி யொருபோதும் அத்வைதிக ளாகார்கள். சுருதியாதிகளின் பிரமாணப்படிப் பேசுவதைவிட்டு இவர் போன்முர் சில ரைத் துணைகொண்டுவந்து வெல்லப்பார்க்கின்முர். இது திருடியகப்பட்ட வொருவன், தன்னைப்போல் திருடிய பிறரைக் காட்டிக்கொடுப்பதற்கினமா மென்க. முத்தியில் சீவேசபேதமின்றென்பதற்குப் பிரமாணம் வருமாறு:—

வாயுசங்கிதை ஞானநிலைமையில்

மலமாயும் வீந்ததற்பின், ஒவலிலப்புருடனே சிவனென்ன வுறைவன்.

ஈசுவரகீதை சாங்கியயோகத்தில்

இந்தஞானத்தை யெய்திய இன்பத்தாலந்தமில் பிரமத்துருவாயினேர்.

## காரியம் பொய்யே யென்பது.

"ஜகத்துப் பொய் யென்பதன் கருத்து அது பிரமத்தைப்போல நிலை திரியாம விராமையினுலென்க" என்று சொல்லி, அதற்குவமானம் "ஒரு சேர் பொன்னை யெடுத்து ஒரு பெரிய பாத்திரஞ் செய்கின்ருேம். அதை யழித்து மீண்டு மதனையே இரண்டு கைவளைகளாகச் செய்கிருேம். மறுபடி யும் அவைகளை மாற்றிக் கண்டசர மாக்குகிருேம். இப்படி யாகிறபோது காரியபேதத்தாற் பொய்யும் காரணமூலத்தால் மெய்யுமாயிடுதெல் சித்தம்." என்றுகூறி, அப்பால் "இதனுல் ஜகத்துப் பொய்யென்பதற்கு நீர்கொண்ட பொருள் தவறுடைத்தாம்." என்முர்.

இவர் பொன் ஸ்தானத்தில் பிரமத்தையும், பொன்னின் காரியமாகிய பாத்திரமுதலிய ஸ்தானத்தில் உலகையும்வைத்து, உலகு காரியபேதத்தாற் பொய்யும் காரணமூலத்தால் மெய்யுமெனல் மிகு ஆச்சரியமாயிருக்கின்றது!

பொன்னைத் தவிர, பணி யில்லாமைபோல, பிரமத்தைத் தவிர வுலகில்லை யென்பது இவரது சித்தாந்தமா? சித்தாந்தமாயின், இவர் குருவாய்க் கொண்டுள்ள உமாபதி சிவாசாரியர் சங்கற்ப நிராகரணத்தில் அத்வைதிகள் கூறும் பொற்பணி யுவமானத்தை மறுத்ததும், அத்வைதிகளோடு இவர் வீணே வாதிடவந்ததும் வீண் வேலையாயின வென்க. பொன்னானது மூன்று காலத்து முள்ளது; அதின் காரியமான பாத்திரம் கைவளை கண்டசரம் இவை ஒருகாலத் துள்ளன. அவ் வொருகாலத்து முள்ள பாத்திர முதலியன பொன்னைத் தவிர வேறின்றிப் பொன்னாகவே யிருக்கின்றன. இருக்கவே, பொன்னானது முக்காலத்து முள்ள தென்றும், பாத்திர முதலியன ஒருகாலத்தி லுள்ளனபோற் றோன்றினும் உண்மையி லில்லை யென்றும் ஏற்படுகின்றன. படவே, காரணமே யுள்ள தென்றும் காரிய மென்பது இல்லை யென்றும் பெறும். பெறவே இவர், பாத்திர முதலியவற்றைக் 'காரிய பேதத்தாற் பொய்யும் காரணமூலத்தால் மெய்யு மாயிடுதல் சித்தம்' என்பது கயிற்றரவு காரிய பேதத்தாற் பொய்யும் காரண மூலத்தால் மெய்யு மாயிடுதல் சித்தம் என்பதற்கு இனமாய் நின்றது. மேலும் பாத்திர முதலிய காரியம் இருந்து பொய்யா? இல்லாமல் பொய்யா? என்றாகிக்கு மிடத்து,

பிரமகீதை சாந்தோக்கிய உபநிஷத்.

காரணமதனைலன்றிக்காரியமுளவாய்த்தோன்றாக்
காரணமொழியவேறுகாரியமின்மையாலே
காரியமனைத்தினுக்குங்காரணமதுவேயுண்மை
ஏர்தரவிரண்டும்வேறென்றியம்பிடலியல்பின்றாமால். (௬௧)

என்று கூறுகின்றபடி காரியம் இல்லாமலே பொய்யா யிருக்கிறதென்றேற்படுகின்றமையின், பாத்திர முதலிய காரியம் தோன்றும் போதே பொய்யாய் விட்டது. விடவே, காரியமா யிருக்கும்போதே பொய்யா யிருக்கும் ஒன்று காரணமூலத்தால் மெய்யாயிருக்கு மென்பது முயற்கொம்பு காரிய பேதத்தாற் பொய்யும் காரணமூலத்தால் மெய்யு மென்பதற்கினமாமென்க. காரியஞ் சத்தென்றும், அது காரணமாகத் தம்மவர்க்குச் சற்காரிய வாதிகளென்னும் பேருண்டென்றும் ஞாயமின்றி வாளா கூறிக்கொள்ளும் இனத்தவரிற் சேர்ந்த பூர்வபட்சியார்: காரியத்தைப் பொய்யென்று ஒப்புக்கொண்டது ஞாய நெறிக்கு ஒத்ததாயினும் அது காரணமூலத்தாற் மெய்யாயிடுதல் சித்தம் என்பது மாத்திரம் ஆபாச மென்க. ஆபாசமாகவே காரியமா யிருக்கும் உலகு தோன்றும்போதே பொய்யென்பதும் அது காரணமூலத்தால் மெய்யாயிருக்கு மென்பதும் பிழையாமென்க. இதனால் பூர்வபட்சியார் காரண காரிய விலக்கண மறியாது வீணாய்ப் பேசிக் காலத்தைக் கழித்தாரென்பது வெள்ளிடை மலையாமென்க. பிரமத்தைப்போல நிலை திரியாமலிராமையினால் ஜகத்துப் பொய் யென்னும் விஷயம் அவைதிக சைவ சண்டமாருதம் 10, 11, 12 வது பக்கங்களில் மிகு விரிவாய் மறுக்கப்பட்டிருக்கிறது. மறுக்கப்பட்ட அப்பூர்வபக்ஷத்தினையே நாணமின்றி யிப்போதும் பேசுகின்றார். இஃதென்ன பேதமை! இதுதானா இவரது வெற்றி! இதுதானா இவரது ஆண்டன்மை! இத்தகைய தோல்வித்தானத்தைப் பெற்று வாதிப்பதினும் வாய் பேசாது மௌனஞ் சாதிப்பது நன்றாமே!

"பிரமமே ஜகத்தாயினமையால், காரணத்தால் ஜகத்து மெய்யும் காரியத்தால் ஜகத்துப் பொய்யுமாயிடுதலே நியதம். அங்ஙனமாகுகையில், ஜக

த்து அபாவ பதார்த்த மாயிடமாட்டாது. இதனால் பிரமம் காரண ஜகத்தும், மற்றது காரிய ஜகத்து மாகின்றன. காரிய ஜகத்துப் பொய்யானால் காரண சகத்தும் பொய்யாம்.'' என்றார். முன்னர் 'காரிய பேதத்தாற் பொய்யும் காரண மூலத்தால் மெய்யுமாயிடுதல் சித்தம்' என்றவர் பின்னர் அதை யனுசரித்து 'காரியத்தால் ஜகத்துப் பொய்யு மாயிடுதலே நியதம்' என்றார். அப்பால் பித்தன் போக்குப்போல் 'காரிய ஜகத்துப் பொய்யானால் காரண ஜகத்தும் பொய்யாம்' என்று கூறிய தென்னே ? முன்னர்க் காரிய ஜகத்துப் பொய்யென்று தாமே பேசி, பின்னர் அதை மறந்து காரிய ஜகத்து மெய்யென்று முன்பின் முரணப்பேசுவதென்னோ!காரியமானகடம் தோன்றி நிற்கும்போதே மண்ணாகிய காரணத்தைத் தவிர வில்லாமையாயும், பொய்யாயும் இருப்பதுபோல, காரியமான வுலகு தோன்றி இருக்கும் போதே பிரமமாகிய காரணத்தைத் தவிர வில்லாமையாயும், பொய்யாயும் இருக்கின்ற தென்று அறிந்தால் 'காரணத்தால் ஜகத்து மெய்யும் காரியத்தால் பொய்யு மாயிடுதலே நியதம்' என்னர் ! என்னர் ! காரியமாயிருக்கும் போதே இவர் கூற்றின்படி பொய்யா யிருக்கும் உலகு காரணத்தால் மெய்யா யிருப்பது யாங்ஙனம்? இது கிளிஞ்சல் வெள்ளி காரியத்தால் பொய்யும் காரணத்தால் மெய்யுமா மென்பதற் கினமா மென்க. இவ்வளவு ஆபாசமாய்ப் பேசிய இவர் : 'ஜகத்து அபாவ பதார்த்த மாயிடமாட்டாது' எனல் கயிற்றரவு அபாவ பதார்த்த மாயிடமாட்டாது என்பதற் கினமாய் நிற்ப தன்றி மற்றி யாதாய் நிற்கும்?புத்திமான்களே! இதைச் சிறிது கூர்ந்து யோசித்துப் பாருங்கள் ! பின்னும் இவர் 'காரிய ஜகத்துப் பொய்யானால் காரண ஜகத்தும் பொய்யாம்' என்கிறார். காரிய அரவும், கடமும் பொய்யானால் காரணமான கயிறும் மண்ணும் பொய்யாய்ப் போமோ ?

'' இனிப் பொய் யென்பதற்குத் திரிவு என்று பொருள் கோடலே அமைவுடைத்து'' என்றார். தருக்க சங்கிரகத்தில் '' திரிவு மித்தையினாலாயவுணர்வு; அது இப்பியை வெள்ளி யென்பது''என்றும், சர்வ சாரோபநிஷத் ''மித்தை யெது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிரமத்தில் ஆரோபிப்பது'' என்றும் உள்ள வாக்கியங்களைக் கொண் டுகிக்குமிடத்து, கிளிஞ்சலின் விவர்த்தத் திரிவு வெள்ளியா யிருப்பதுபோல, பிரமத்தின் விவர்த்தத் திரிவு உலகா யிருக்கிற தென் றேற்பட்டது. படவே, திரிவு என்பது பொய் யென்னும் அர்த்தத்தில் நின்றதென்று பெற்றாம். பெறவே, 'பொய் யென்பதற்குத் திரிவு என்று பொருள் கோடலே அமைவுடைத்து' என்பது ஈண்டு யாதாய் முடிந்தது ? பொய்யாகவன்றோ முடிந்தது? பொய்யென்பதற்குத் திரிவு என்று பொருள்கொண்டு மெய்யென்று கூறினால் அப்போது கயிற்றின் றிரிவாகிய அரவைப் பொய்யென்று கூறுவதா ? மெய்யென்று கூறுவதா ? கயிற்றின் றிரிவாகிய அரவை மெய்யென்று கூறும் புத்திமான் ஒருவ னுண்டானால் அப்போது திரிவு என்பதற்கு மெய்யென்று கூறச் சிறிதுந் தடையிரா தென்பதாம்.

## விவர்த்த பட்சத்தைக் கூறும் பிரமாணம் உண்டென்பது.

''ஜகத்துப் பிரமத்தி லுண்டாகிய தென்பதை விவர்த்தமாக வன்றோ யாமொப்பி யிருக்கிறோம் ?'' என் றத்வைதியார் வினவியதாக வெழுதிப் பின்னர் நாகைப் பிரமவாதியார் அத்வைத தூஷண நிக்ரகத்தின் 10,

11, 12-வது பக்கங்களிற் காட்டியுள்ள பிரமாணங்களில் பூர்வ பக்ஷியார் உபநிஷத்து வாக்கியங்களையும், விஷ்ணுபுராண வாக்கியத்தையுமாத்திரம் வரைந்து சீவன் சிவத்தினிடத்தில் கற்பிதமாயிருக்கிறானென்று கூறிய பிரமகீதை முண்டகோபநிடதச் செய்யுளையும்; மாயையினாலும் அவித்தையினாலும் சீவேசபேத முண்டாயிற் றென்றும், உபாதியினாலே சீவேச பேத முண்டாயிற் றென்றும் கூறிய சூதசங்கிதையின் இரண்டு செய்யுளையும், உண்பானாகிய சீவனுக்கும் ஊட்டுவானாகிய ஈசனுக்கும் காயபேதம் உபாதியால் வந்ததென்று கூறிய பிரமகீதை கடவல்லி சுவேதாசுவதர உபநிடதச் செய்யுளையும் விட்டதோடு, ஷை நூல் 3-வது 5-வது பக்கங்களிற் காட்டியுள்ள விவர்த்த பட்சத்தைக் கூறும் பிரமாணங்களில் சிலவற்றைத் தங் குருட்டு யுத்தியால் மறுத்ததை மறந்தும், ஷை நூல் 23-வது பக்கத்தில்

கூர்மபுராணம் சாங்கிய யோகம்.

ஆதலால்பிரமமொன்றேநித்தியம்அலகைத்தேரிற்
பேதுறத்தோன்றும்நீரிற்பிரபஞ்சமருண்டுதோன்று. (உரு)

என்று காட்டிய செய்யுளைக் கவனியாதும் "இவை ஆரம்ப வாதத்தைப் போதிக்கின்றனவே யன்றி உமது விவர்த்தத்தைப் பிரகாசப்படுத்தவில்லை கண்டீர்." என்றார்.

இவர் அத்வைத தூஷண நிக்கிரத்தி னின்றும் எடுத்துக்காட்டிய வாக்கியங்களுள் முதல் வாக்கியம்

"தனக்குள்ளேயே யிருக்கிற ஆத்மா (பிரமம்) வினிடத்திலிருந்து சகல பிராணன்களும், சகல வேதங்களும், சகல தேவதைகளும், சகல பூதங்களு முண்டாகின்றார்கள்" என்பது. இது மைத்திராயண்ணி யுபநிஷத் 6-வது பிரபாடகத்தி லுள்ளது. இவ்வாறு கூறிய வ்வ் வுபநிஷத்து 4-வது பிரபாடகத்தில்

"இந்திரஜாலம்போல் மாயா சுவரூபமாயும், சுவப்பனம்போல் பொய்த் தோற்றமாயும், கதளீ கருப்பம்போல் சாரமற்றதாயும், (வாழைக் குருத்துப் போல் உறுதியற்றதாயும்) வேஷக்காரனைப்போலப் பல பல வேஷ மெடுக்கிறதாயும், சுவரிலெழுதிய சித்திரம்போல் பொய்யான மனோக்கியமாயுமிருக்கிறது(எதுவோ அதுதான் பூதாத்தும சுவரூபம்)."

என்று கூறிய வாக்கியத்தைக் கொண்டு மேல் வாக்கியத்தோடு ஒட்டிப்பார்க்கு மிடத்து, பிரமத்தி னின்றுந் தோன்றிய வுலகு இந்திர ஜாலப் பொருள் போலவும், சொப்பன வுலகு போலவும், வேஷத்தைப் போலவும், சித்திரம் போலவும் பொய்யா யுள்ள தெனவும், அதிலும் இந்திர ஜாலப் பொருள் போலும், சொப்பன வுலகுபோலும் விவர்த்தமாயுள்ள தெனவும் கொள்ளக் கிடத்தலின், ஜகத் சத்தியவாதியான இவர்க்கு அம்மைத்திராயண்ணி யுபநிஷத்து வாக்கியத்தால் யாது பயனென வினவி மறுக்க. மேலும் உலகிற்குப் பிரமம் முதற் காரணமா யுள்ளதென்று கூறுஞ் சுருதி வாக்கியம்: உலகிற்குப் பிரமத்தை நிமித்த காரண மென்று கூறி, அந்தப் பிரமத்தைக் கண்டப்படுத்தி யிடர்ப்படும் பூர்வபட்சியாருக்குப் பிரமாணமாதல் யாங்ஙன மென்றுங் கூறி மறுக்க.

இன்னும் மாயைக்கும் உலகிற்கும் ஆரம்பவாத மொப்பு மிவர்: பிரமத்தி னின்றும் உலகுண்டாகின்றது என்றும் அவ்வா றுண்டாவது விவர்த்த

மாக வென்றும் கூறும் சுருதி வாக்கியத்தைத் தஞ் சித்தாந்தத்திற் கியைய அமைக்க முயலுதல் மொட்டந்தலைக்கும் முழந்தாளுக்கும் முடிபோட முயல்வோன் செய்கைக் கினமாய் நின்ற தென்க.

அத்வைத தூஷண நிக்கிரகத்தின் 10-வது 11-வது பக்கங்களிற் காட்டியுள்ள பிரமாணங்களி னிடையில் நேரே விவர்த்த சித்தாந்தத்தை ஸ்தாபிக்கும் பிரமகீதை முண்டகோபநிடதம்

தற்பரனுருவஞ்சித்தேதற்பரனிடையேயக்
கற்பிதசீவன்ருனுமதானக்காலந்த. (கூஉ)

என்றுள்ள செய்யுளை யெழுதாது மறைத்து விட்டு, 'இவை ஆரம்ப வாதத்தைப்போதிக்கின்றன' என றுகூ றுவது பகட் டொழுக்கமன்றி வேறியாதாம்! ஆரம்ப வாதம் விவர்த்த வாதத்தி லடங்கிப் போமென்பதற்குப் பலவித நியாயம் அத்வைத தூஷண பரிகாரத்தில் மிகு விரிவாய் வந்திருக்கின்றமையின் அதுபற்றி ஈண்டு யாதும் பேசாது விட்டன மென்க.

## கேவல நிமித்தகாரணவாதம் தவருமென்பது.

"பிரமத்திற்குக் கேவல நிமித்த காரணத்துவங் கூறும் உமது சித்தாந்த சைவத்துக்கு இது இடர்விளைக்காதோ?" என்று ஓர் வினவை யெழுப்பி, அதற்கு விடை "கிழங்கிலேநின்றும் பிறக்குந் தாமரையைச் சேற்றிலே நின்றும் பிறந்தது என்று பொருள்படப் பங்கஜம் என்று யாமும், நீரும், பிறருங் கூறுமா றென்னையோ? கிழங்கு மாயையும், சேறு பிரமும், தாமரை உலகமுமாம். கிழங்கிலே தாமரை பிறக்கும் என்ப துணர்ந்தார்க்கு அதுசேற்றிலேபிறந்தது என்பது நிர்விவாத கிரஸ்த மாயினவாறுபோல மாயையிலே உலகு தோன்று மென்று கூறு மெமக்கு அது பிரமத்திலே தோன்றியது என்பது நிர்விவாத கிரஸ்தமாயின துணர்வீர்"

என்ருர். சேறில்லா விடத்துக் கிழங்கும், கிழங் கில்லா விடத்துத் தாமரையு மிருப்பது போன்று, பிரமமில்லா விடத்து மாயையும், மாயையில்லா விடத்து உலகமு மிருந்தா லன்றே இவரது உவமானம் மணம்பெறும்? பிரமம் பரிபூரணமென் றுரைத்து அதனிடத்தில் மாயை யானது சேற்றின்கண் கிழங்கைப்போல வேரு யிருக்குமென் றுரைத்தல் அசம்பவ மென்க.

சர்வசாரோபநிஷத்.

எவள் வாஸ்தவத்தில் இல்லையோ அவள்தான் மாயை. அவள் சொரூபம் அஞ்ஞானம். அதுவேதான் மூலப்பிரகிருதி.

என்றும்,

நிராலம்போபநிஷத்.

ப்ரம்ம சந்நிதி மாத்திரத்தினாலே பல விசித்திரமான ஜகந்நிர்மாண சாமர்த்தியமுடைய புத்தி சொரூபமாகிய பிரமத்தினது சத்தியே பிரகிருதி.

என்றும்

பிரகிருதியாகிய மாயையைச் சத்தியென்று உபநிஷத்துகள் கூறவும்,

மேலும் இவர்க்குப் பிரமாணமாயுள்ள சிவஞானசித்தியும் மாயையை "விமலனுக் கோர் சத்தியாய்" என்று கூறவும் இவர் கிழங்கைப் போலத் திரவியமாகக் கூறுதல் பதார்த்த விலக்கணம் அறியாதார் கூற்றா மென்று விடுக்க.

கயிறு, அதன் சத்தி, அச்சத்தியின்கண் அரவு இவைபோலப் பிரமம், அதன் சத்தி (மாயை), அச்சத்தியின்கண் உலகு என்று விவர்த்த முடிவாகக் கொள்ளின் பரிபூரணமான பிரமத்திற்கு யாதோ ரிழுக்கு மின்றாய் முடிகின்றதென்க. கயிற்றி னிடத்து அரவு உற்பத்தி யென்றும், அல்லது அதன் சத்தியினிடத்து அரவு உற்பத்தி யென்றும் சொல்வதுபோல, பிரமத்தி னிடத்து உலகு உற்பத்தி யென்றும், அல்லது அதன் சத்தி (மாயை) யினிடத்து உலகு உற்பத்தி யென்றும் சொல்லலாம். கயிற்றி னின்றும் அரவைத் தோற்றுவிக்கும் விவர்த்த சத்தி கயிறாகாமலும் கயிற்றை விட்டிராமலும் தனக்கெனச் சொரூப மின்றி யிருத்தலால, கயிற்றினிடத்தில் அரவு உற்பத்தி யென்று கூறுவது போல, பிரமத்தி னிடத்தில் உலகு உற்பத்தியென்று (முன்னர்க் காட்டியுள்ள சத்பிரமாணங்களின்படி) கொள்வது சரியா மன்றி, பிரமத்திற்கு வேறாயும் சத்தாயுமுள்ள தென்று கூறி, அம் மாயையி னிடத்து உலகு உற்பத்தி யென்று கூறுதல் ஓர் போதும் அடாதென்க. இதனால் பிரமத்தைக் கேவலம் நிமித்த காரணமாகக் கூறுதல் தவறினும் தவறாமென்க. இது விஷயமாக விரிவா யறிய விரும்புவோர் அத்வைத தூஷண பரிகாரம், பதி பசு பாச வாதம், அவைதிக சைவ சண்டமாருத முதலிய நூல்களில் காண்க.

"எப்பொருளுமாயையினுலெனச்சிலவரியம்புவர்கள்
மெய்ப்பரமன்றனையொழியவேறொருமாயையுமில்லை
ஒப்பரியபரனெழியவொருமாயையுண்டாகில்
அப்பரமன்பெருமைக்கங்கதுநேரேயழிவன்றோ'

என்னு மிதற்கு மாத்திரம் பதில் கூற வேண்டுகிறோம்" என்று அத்வைதியார் கேட்டதாக வெழுதி, அதற்கு விடை சதுர்த்தச வித்வ்தைகளிற் சேராததாகியும், தான் றோன்றித் தம்பிரானால் பாடப்பட்டதாயு முள்ள சித்தாந்தபோத மென்னும் ஓர் அவைதிகச் சுவடியிலிருந்து ஓர் பாட்டை யெழுதி "என்னுமிதனால் உமது பாடல் நிரசிக்கப்பட்டது கண்டீர்" என்று கூறி, அப்பால் "உமது பாடலில் 'அப்பரமன்பெருமை' என்று கூறப் பட்டதன்றோ? அப்பரமன் என்று அவனைச் சுட்டினவர் யாவர்? பரம னல்லாதவர்களே யன்றோ? பரமனல்லாதவர்க ளிராதபோது பரமனுக் கிடமேது? அதற்குமேல் சிறுமை யிராதபோது பெருமை யேது?"

என்றார். 'எப்பொருளு மாயையினால்' என்றற் றொடக்கத்த செய்யுள்: பதினெண் புராணங்களி லொன்றான ஸ்காந்தத்தின் ஓர் பகுதியான சூதசங்கிதையிலுள்ள பிரமகீதை கேனோபநிடததாற்பரிய முரைத்ததி லுள்ளது. இச்செய்யுள் தத்துவராய சுவாமிகளால் மொழி பெயர்க்கப்பட்டது. அவர் பாடியதனால் "அந்தப் பாடல்கள் மாயாவாதிகள் பாடியவை" என்று கூறி யிகழ்ந்ததை முன்னரே மறுத்திருக்கின்றோ மன்றோ? இனித் தேவ ராஜபிள்ளை அவர்கள் பாடிய சூதசங்கிதை இதுபற்றி யாது கூறுகின்ற தென்னின்,

சூதசங்கிதை சாமசாகோபநிடதம்,

உத்தமவத்தகையோர்க்குத்தள்ளறமுவப்படுதெலொன் றுமில்லை
ஒத்தபரசிவற்கயலாமாயையினெச்சகமுமுண்டென் றுரைப்பர்சில்லோர்

பெத்தமின்மாதேவனுடைமகத்துவத்திற்கனுபபத்திப்பிரசங்கந்தான்
சித்தமருவுறவருமாதலினவ்வாறெஞ்ஞான்றுஞ்செப்பொணுதே. (கக)

ஆதலினுன்மாதேவனொருவனேபூரணமாயவிர்வானெங்கு
மேதகுமற்றவனுக்குவேருயொன்றேனுமிலே. (கஉ)

என்று கூறிற்றேயன்றித் தத்துவராயர் பாடியதற்கு ஏதும் விரோதமாய்க் கூறவில்லையென்க. இங்ஙனமாக இவர் அச்செய்யுளைப்பற்றி நிந்தித்தது ஆராய்ச்சியின்மையும், நாணயமில்லாமையும், துவேஷமுடைமையுமாமென்க.

'எப்பொருளு மாயையினுல்' என்ற தலைப்பினையுடைய செய்யுள்: உலகிற்கு மாயையை முதற்காரணங்கூறும் மாயாவாதிகளைமறுத்து மாயையென்பது பரனுக்கு அன்னியமா யில்லையென்றும், (கயிற்றினின்றும் அரவைத் தோற்றுவிக்கும் விவர்த்த சத்தி, கயிற்றிற்கு வேரு யிராமைபோல, பிரமத்தினின்றும் உலகைத் தோற்றுவிக்கும் விவர்த்த (மாயை) சத்தி பிரமத்திற்கு வேருயில்லை) இருக்குமென்று சொல்லின், பரிபூரணனை அந்தப் பரனது பெருமைக்கு அழிவாகுமல்லவா என்றுங் கூறியதற்குத் தஞ்சித்தாந்தத்திற் கேற்பப் பொருளுரைத்துத் தப்பித்துக்கொள்ளாது, தான்ருேன்றித் தம்பிரான் பாடிய அவைதிகப்பாட்டை யெழுதி 'இதனுல் உமது பாடல் நிரசிக்கப்பட்டது' எனல்: பைபில் வாக்கியத்தைக்கொண்டு வேதவாக்கியத்தை மறுத்தற்கினமாய் நின்றதென்க. அக்கேளுேபநிடதம் கச-வது செய்யுளில் "பரத்திற் கற்பிதமாயை"என்றும், உடு வது செய்யுளில்"அன்னியமாக விடுதல் பற்றுதலுண்டாகுமேற் பூரணனுகப் பன்னிய பெருமைக் கானியாம்" என்றும் முன்னர்க் கூறியதினுல், மாயை கற்பித(பொய்) மாய் உள்ளதென்றும், அப்படிக் கற்பிதமாய்ப் பிரமத்தி னிடத்திலேயே கயிற்றில் அரவுசத்திபோல இருக்கிறதென்றும், அப்பிரமம் பரிபூரணமாயுள்ளதென்றும், மாயை பிரமத்தைப்போன்ற சத்துப்பொருள் என்றுகூறின் பிரமத்திற்கு அபரிபூரண தோஷ முண்டாமென்றும் பெறப்படுதலின், மாயாகற்பிதராகிய சீவர்கள் பிரமமில்லாத விடத்தி லிருக்கவேண்டு மென்பது அனுவசியகமாகின்றது. ஆகவே 'அப்பரமன் என்று அவனைச் சுட்டினவர் யாவர்?' என்று பூர்வபட்சியார் வினவியது தகுதியன்றென்க.

மனத்தினின்றுந் தோன்றிய சொப்பனவுலகிலுள்ள சீவர்களில் ஒருவன், தனக்கும் மற்ற அசேதன உலகுக்கும் முதற்சாரணமா யுள்ளது மனமென்று சொல்வானே யாயின், அதுபற்றி அம்மனத்திற்கு அச்சீவன் சத்தாய் வேறென்று சொல்லப்படுமோ? படாதன்றே? அங்ஙனமே, பிரமத்தினின்றுந் தோன்றிய சாக்கிர வுலகிலுள்ள சீவர்களில் ஒருவன், தனக்கும் மற்ற அசேதன உலகுக்கும் முதற்காரணமா யுளளது பிரமமென்று சொல்வானேயாயின் அதுபற்றி அப்பிரமத்திற்கு இச்சீவன் சத்தாய் வேறென்று சொல்ல வேண்டுமோ?

'பரமனல்லாதவர்களிராதபோது பரமனுக்கிடமேது?' என்றிவர் கூறியதைப்பற்றி யோசிக்கின் பரமனல்லாதவர்கள் (சீவர்கள்) ஆதாரமாயும் பரமன் ஆதேயமாயு மிருக்கிருர்களென்று பெறப்படுகின்றது. கடவுளை ஆதாரமாயும் சீவர்களை ஆதேயமாயும் கூறுவதைவிட்டுத் தென்னுலுராமன் தலைகீழாக நாம மிட்டுக்கொண்டதுபோல ஆதார ஆதேயங்களைத் தலைகீழாகப் புரட்டி விட்டார்.

இது எதுபோ லிருக்கின்றதென்னின் குடம் ஆதாரமென்றும், மண் ஆதேயமென்றுஞ்சொல்லி, குடமில்லாவிடில் மண் இருத்தற்கு இடமேது? என்ற கூறும் விவேகியின் கூற்றுக் கினமாகுமென்க! நிற்க; சிறுமையிராத போது பெருமை எது? என்பதற்கும் விடையளிக்கின்றோம். மாயைக்குக்கீழ்ப்பட்டவிடத்தில் சீவேசபேத முண்மையின் இவ்விடத்து ஈசன் பெருமையுடையவனும், ஜீவன் சிறுமையுடையவனு மென்று கூறுகின்றோம். இது விஷயத்தில் எமக் கேதும் ஆக்ஷேபமின்று. மற்றொரு விதமாகவும் விடையளிக்கின்றோம். அஃதாவது சத்தான பிரமம் பெருமையுடையதும், சத்துப்போலி அநிர்வசனீயமான சேதனசேதன உலகு சிறுமை யுடையதுமா மென்பது.

## தாயுமானவர் அத்வைதியேயென்பது.

"எமது தாயுமானார் 'ஞாதுருஞான ஞேயங்களற்றவர்க்கு' என்று கூறித் திரிபுடியை மறுத்தாரேனும் 'அற்றவர்க்கற்றசிவ மாகுமென்று' திரிபுடியையே மீண்டுந் தாபித்தாராகையால், ஒரு திரிபுடி தூஷணையும், மற்றொரு திரிபுடி பூஷணையு மேற்றமை சித்தாந்த மாகியது"

என்றார். இவர் 'தாயுமானார்' என்று கூறாது 'எமது தாயுமானார்' என்றுரிமைகொண் டாடியது மறுக்கப்படல் கீழ்வருமாற்றாலறிக. சிவஞான சித்தி ௯ வது சூத்திரம் ௭ வது பாட்டினுரையில் சிவ ஞான சுவாமிகள்: "அது நானென்னு மிருபெயரும் விட்டுவிடாத வாகுபெயரெனக்கொண்டு கேவலாத்துவிதம் கூறுவாரும், அவற்றுள் ஒன்றனை மாத்திர மாகுபெயரெனக்கொண்டு விசிட்டாத்துவிதங் கூறுவாருமா யிடர்ப்படுவர்."

என்று விட்டுவிடாத வாகுபெயர் அதாவது விட்டுவிடாத லட்சணை கூறும் அத்வைதிகளை யிகழ்ந்தார். திருமூலரோ

திருமந்திரம் தத்துவமசிவாக்கியத்தில்

ஆகியவச்சோயந்தேவதத்தனிடத்
தாகியவிட்டுவிடாதவிலக்கணைத்
தாருபசாந்தமேதொந்தத்தசியென்ப
ஆகியசீவன்பரன்சிவனுமே. (௯)

என்று விட்டு விடாதலட்சணையைத் தமது சித்தாந்தமாக வொப்பினார். அத்வைத சித்தாந்தமான விட்டுவிடாத லட்சணையை யிகழ்ந்தவருபவரது வாக்கைப் பிரமாணமாகக்கொள்ளும் இப்பூர்வபட்சியார்: விட்டுவிடாத லட்சணையைத் தஞ் சித்தாந்தமாகக்கொண்ட திருமூலரைத் தமது மரபின் குருவாகக்கொண்டு மௌனகுரு வணக்கத்தில்

வேதாகமத்துணி பிரண்டில்லை யொன்றென்னவே, வந்தகுருவே வீறு சிவஞான சித்தி நெறி மௌனோபதேச குருவே மந்திர குருவே யோக தந்திர குருவே மூலன்மரபில்வரு மௌன குருவே. (௨)

என்று துதித்த தாயுமானவரை 'எமது தாயுமானார்' என்று சொந்தங் கொண்டாடுவது உதைப்பானை யுறவு கொண்டாடுவதற்கினமா மென்க.

எங்குநிறைகின்றபொருள்.

முன்னிலையொழிந்திடவகண்டிதாகாரமாய்மூதறிவுமேலுதிப்ப
முன்பின்னொடுகீழ்மேனடுப்பக்கமென்னாமல்முற்றுமாநந்தநிறைவே
யென்னிலைமையாய்நிற்கவியல்புகூரருள்வடிவமெந்நாளும்வாழிவாழி. (௧௧)

என்றும்,

தன்னையோநவர்.

எனதென்பதும் பொய் யானெனல் பொய் யெல்லா மிறந்த விடங் காட்டு, நினதென்பதும் பொய் நீயெனல் பொய் நிற்கு நிலைக்கே நேசித் தேன். (நு)

என்றும்,

ஆசையெனும்.

அத்துவிதம்பெறும்பேறென்றறியாமலியானென்னும்பேயகந்தையோடு மத்தமதியினர்போலமனங்கிடப்பவின்னமின்னம்வருந்துவேனே. (கூ)

என்றும்,

பாயப்புலி.

முன்னிலைச்சுட்டொழிநெஞ்சே (உகூ)

நீயெனநானெனவேறில்லையென்னுநிலைவருளச்
தாயெனமோனகுருவாகிவந்துதடுத்தடிமைச்
சேயெனக்காத்தனையே. (நுஅ)

என்றும் கூறிய எமது தாயுமானவர் 'அற்றவர்க்கறுத நட்புடைக் கலப்பே' என்றுகூறியதினாலேயே திரிபுடியுண்டென் றேப்பினாரெனல்கொள்ளப்படுமோ? ஈண்டுக் கலப்பு என்றது

திருமந்திரம் ஞானதுருதர்சனம்.

திரிமலந்தீர்ந்து சிவனவனாமே. (ச)

ஷை பராவத்தை.

இவனும் அவன் வடிவாமே. (கூ)

என்றவாறு ஒன்றுந் தன்மையின்மேல் நிற்றலின், அது திரிபுடி யாகாதென்க .'கலப்பு என்று கூறுது நட்புடைக் கலப்பே' என்று கூறியது என்னெனின், திருமூலரின் கொள்கையின்படி விட்டு விடாத லட்சணையைச் சித்தாந்தஞ் செய்யத்தான் 'நட்புடைக்கலப்பே'என்றார். 'ஈண்டு நட்புடைக்கலப்பு' என்பது விட்டுவிடாத லட்சணைக்கு உவமானமாகக் கூறிய கடாகாசமகாகாசக் கலப்பை யுவமையாகக் கொண்ட கூடஸ்த பிரம ஐக்கியத்தைக் குறிக்குமென்க. அவ்வாறன்றி யிரண்டு பேதப்பொருள்கள் கலத்தல் நேர்போது முடியாது. திரிபுடி யாணடாண்டோ ஆண்டாண்டுத் துக்க முண்டென்பதைப் பற்றியன்றே சிவப்பிரகாசர் பிரபுலிங்கலீலை கதலிவனகதியில்

ஞேயஞானஞாதுருவெனுமிவைபலநிற்கு
மாயின்வேறறுமுத்தியன்றுஅதுசகமாம். (கச)

என்று கூறினர்?

இதுவிஷயமாக விரிவாய் அறியவிரும்புவோர் "துவித சைவரே மாயாவாதிகள்" என்ற நூலில் 49-வது பக்க முதல் 60-வது பக்கங்கள் வரையில் காணலாம். தாயுமானார் இவர் போன்று மாயாசம்பந்தமான துவித மதஸ்தரன்று, மாயாரகித அத்துவித மதஸ்தரேயென,மாயாவாத சைவசண்ட

மாருதத்தில் பல விடங்களில் மிக விரிவாய்ப் பேசியிருக்கின்றமையின், இம்மட்டோடு இதை நிறுத்தி, மேலே யுள்ள விஷயங்களில் பிரவேசிக்கி ன்றும்.

## ஆத்மானுத்மவிசாரமே நேர்சாதனமென்பது.

“தேவிகாலோத்தரம் ‘மந்திரஞ் சபந் தியானம் பூசனை வணக்கம் வேண்டா’ என்றது என்னை” ? என்னும் வினவை யுண்டாக்கி, அதற்கு விடை அன்பில்லாம லவைகளைச் செய்வதிற் பயனில்லையென்றதாம்” என்று கூறி னுர்.

“அத்வைத தூஷண நிக்ரக” த்தில் “மந்திரஞ் செபந்தியாநம் பூசனை வணக்கம்வேண்டா, அந்தமிலாத முத்திக்குபாயமே யறியவேண்டும்” என் றெழுதி யிருப்பதில் ஓரடியை மாத்திர மெழுதி ‘அன்பில்லாம லவைகளைச் செய்வதில் பயனில்லையாம்’ என்று கூறியது விளக்கெண்ணெய் வார்த்துச் சௌசம் செய்வது போலா மென்க.

மந்திரந் செபந் தியானம் பூசனை வணக்க முதலியவைகளிலும் முத்தி க்குரிய உபாயத்தை யறிதல் விசேடமென்று தேவிகாலோத்தரச் செய் யுள் ஸ்பஷ்டமாய் விளக்கவும், அதற் கிணங்கப்

பிரபுலிங்கலீலை.

உரைசெயிற்பரமஞானமொன்றுமேமுத்திக்கேது
சரியைநற்கிரியையோகந்தாமொருமூன்றுஞான
மருவுதற்கேதுவென்றுமறைபுகன்றுரைக்குமிந்தக்
கருவியைப்பொருளென்றெண்ணிக்களிப்பவர்கயவரன்றே. (சுகூ)

என்றும்,

சிவஞானதீபம்.

சாத்திரம்புத்தகம்பூசைசமயம்மதந்தருக்கந்
தந்திரமந்திரயோகந்தவவிரதஞ்சீலம்
எத்தரியபாவனையெண்சித்திகளேமுசலா
மெய்ப்பயனுமுத்திவிலக்கெனவொருசொல்லதனுற்
தீர்த்தவன்மெய்த்தேசிகன். (க0௫)

என்றுங் கூறுகின்றமையின், அன்போடு செய்யும் மந்திரம், தியானம் முதலியவைகளிலும் முத்தியை யடைவதற்கு நேர் சாதனமாயுள்ள ஆத்மா னுத்ம விசாரமே சிறந்ததென்றும், அவ்விசாரணை காரணமாக வடைவதே முத்தியா மென்றும் பெற்ருமென்க. இந்நுட்பப் பொருளினையுணராது‘அன் பில்லாம லவைகளைச் செய்வதில் பயனில்லையாம்’ என்பது ஆராய்ச்சி யில் லாமையே யாம்.

## சரியை கிரியையோகம் சரீரத்தின் தொழில்களெனல்.

அத்வைத தூஷணநிக்ரகத்தில் “சரியையாதிகள் தேகத்தின் தொ ழில்; தேகத்தை யெவ்வாறு பயிற்சி செய்யினும் அறிவு பயிலாது; அறிவு பயிலாதபோது அதன் முதிர்ச்சியாகிய ஞானங் கிட்டுவது யாங்ஙனம்?” என்று நாகைப் பிரமவாதியார் எழுதி யிருப்பதற்கு மறுப்பு

"சரியையாதிகள் தேகத்தின் றொழிலென்றது தவறு. சரியை தேகத்தைச் சிவார்ப்பிதஞ் செய்தலும், கிரியை இந்திரியங்களைச் சிவார்ப்பிதஞ் செய்தலும், யோகம் கரணங்களைச் சிவார்ப்பிதஞ் செய்தலும், ஞானம் ஆத்மாவாகிய தன்னைச் சிவார்ப்பிதஞ் செய்தலுமாம்"

என்று வரைந்தனர் பூர்வபக்ஷியார். "சுற்றிச் சுற்றி வந்தாலும் சுங்கச்சாவடியில் நின்றாலும்" என்னும் பழமொழிக் கிணங்க, சரியை கிரியை யோகமென்னு மூன்றுக்கும் சரீர இந்திய மனங்களைச் சிவார்ப்பிதஞ் செய்தலென்று கூறினாரேயன்றிச் சரீரத்தின்தொழில் அன்றென்று கூறினாரில்லை. இங்கு இவர் கூறிய சரீரம் அன்னமயமான ஸ்தூலமாயும், இந்திரிய அந்தக்கரணங்கள் சூட்சும சரீரமாயும் இருத்தலின், பூர்வ பட்சியார் கூற்றுச் சரியை கிரியை யோகம் ஸ்தூல தேகத்தின் தொழிலாயும் சூக்கும தேகத்தின் தொழிலாயும் நின்று, ஷை நாஸைப் பிரமவாதியார் கொள்கையினை ஸ்திரப்படுத்தி விட்டது.

சரியையாதிகள் தேகத்தின் தொழிலென்றது தவறு என்று பூர்வபட்சியார் முன்னர்க் கூறியதற்கியையச் சரியை கிரியை யோகங்கள் ஆத்மாவின் தொழிலென்று கூறவேண்டி யிருக்க அங்ஙனங் கூறாது ஸ்தூல சூக்கும தேகங்களின் தொழிலாகக் கூறியது தவறாகுமே யன்றி, சரியையாதிகள் தேகத்தின் தொழிலென்பதில் யாதுந் தவறின்றென்க. இன்னும் பூர்வபட்சியார் 'ஞானம் ஆத்மாவாகிய தன்னைச் சிவார்ப்பிதஞ் செய்தல்' என்று கூறியதினாலேயே மற்றவை ஆத்மாவல்லாததின் தொழில்களென்று பெறப்படுதலின் 'சரியையாதிகள் தேகத்தின் தொழிலென்றது தவறு' என்று கூறியது பெருந் தவறாய்நின்றதென்க.

சரியையாதிகள் சரீரத்தின் தொழில்கள், ஞானம் அறிவின் பயிற்சி என்பதற்குப் பிரமாணம் :—

### பிரமகீதை ஐதரேய உபநிடதப் பொருளின் சேடமும், தைத்திரிய உபநிடத தாற்பரியமு முரைத்த அத்தியாயம்.

மையலொன்றறவிவ்வறிவினையறியின்மானுடன்முத்தனுமன்றித்,துய்ய கன்மத்தான் மைந்தரான் மற்றோர் பொருளினுலுற்பவந்துடையான். (கசு)

### திருக்குறள் மெய்யுணர்தல்.

ஐயுணர் வெய்தியக்கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு. (ூ)

மையலொன்றற விவ்வறிவினை யறிதலும், மெய்யுணர்தலும் அறிவின் பயிற்சியாயும் ஏனையவை சரீரத்தின் தொழில்களாயு மிருத்தலின், சரியை கிரியை யோகங்கள் சரீரத்தின் தொழில்க ளென்பதற்கு யாதும் ஆசங்கையின்றென்க. இன்றாக, பூர்வபட்சியார் 'சரியையாதிகள் தேகத்தின் றொழிலென்றது தவறு'எனலே தவறாய் முடிந்த தென்க. இவர்க்குப் பிரமாணமாயுள்ள சிவஞான சித்தி 8-வது சூத்திரம் 19, 20, 21வது செய்யுட்களில் சரியை கிரியை யோகம் என்னு மூன்றையும் சரீரத்தின் தொழிகளாகக் கூறி,

22-வது ஆகிய

சன்மார்க்கஞ்சகலகலைபுராணவேதசாத்திரங்கள்சமயங்கடாம்பலவுமுணர்ந்து,பன்மார்க்கப்பொருள்பலவுங்கீழாகமேலாம்பதிபசுபாசந்தெரித்துப் பரசிவனைக்காட்டி,நன்மார்க்கஞானத்தைநாடி ஞானஞேயமொடு ஞாதுருவு

நாடாவண்ணம், பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றிஞானப்பெருமையுடை யோர்சிவனைப்பெறுவர்காணே.

இச்செய்யுளில் ஞானம் அறிவின் பயிற்சி யென்று ஸ்தாபித்தலையும், சிவஞான சுவாமிகள் இச் செய்யுட்கு "புறத்தொழி லகத்தொழி லிரண்டு மின்றி அறிவுத் தொழின் மாத்திரையானே அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஞானமெனப்படு மென்பதாம்" என்றுரை கூறுதலையும் இவரறியாது போயினமையின், இவர்க்குத் தம்மத சித்தாந்தமே தெரியாதென்று விடுக்க.

பின்னர் "சட்டையைக் கட்டையென்றறிவதுபோலச் சிவத்தைச் சிவமென்றறிந்து விட்டதினாலேயே மோக்ஷம் சித்தித்துவிடுமோ? அறிந்து, அறிந்த பொருளிடத்தில் அன்பு பாராட்ட வேண்டும். அன்பினது உயர்வு தாழ்வுகளுக் கீடாகவே மேலடையத்தக்க பேறுகளினுயர்வு தாழ்வுகளுமாம்"

என்றார்.

அறிதல் இருவகை இதில் ஆற்றலாலறிவது ஒன்று, லட்சணையாலறிவது ஒன்று. ஈண்டு ஆற்றலாலறிவது ஈசுவரனையும், லட்சணையா லறிவது பிரமத்தையுமாம். ஆற்ற (வாச்சியார்த்தம்) லால் சிவத்தை யறிந்தால் அறிந்த அப்பொருளினிடத்து அவசியம் அன்பு பாராட்ட வேண்டியதும், அவ்வன்பினது உயர்வு தாழ்வுகளின்படி பேறுண்டாவதும் ந்யாயமேயாம். இது சகுணோபாசனையாகும். லட்சணை (குறிப்பு) யினால் சிவத்தை யறிந்தால் அறிந்த (அன்பு வடிவமான) புருஷன் அச்சிவமாகவே யாய்விடுதலினாலும், அவனைப்பற்றிப்

பிரமகீதை கேனோபநிடதம்

ஓது மிப்பரம் பொருளுணர்ந்தவன் செய்வது, ஏதுமில்லை. (கஎ)

என்றும்,

எப்படித்தோற்றமப்படியாகியிலங்குவதுண்மையேயோகிக், கப்படியுண்மையாகவேதெளிவுற்றறிவதேயானமவேதனந்தான், செப்புநாமத்தாலுண்மையாலெல்லாத்திசழ்வுமாதேவனேயாகி, லிப்படியறிந்தஞானிகைக்கொள்வானெத்தையன்றெனவெத்னதவிடுவான். (உச)

என்றுங் கூறுவதினாலும் அவன் அறிந்து பின்னர் அன்பு பாராட்ட வேண்டுமென்று சொல்வது எங்ஙனமாகும்? ஆற்றலாலறிவது அறிவதாகாதென்றும், லட்சணையினாலறிந்து அதுவாவதே அறிவது என்றும், ஆற்றலாலறிவது லட்சணையினாலறிவதற்குச் சாதனமாயுள்ளதென்றும் கூறும் அத்வைதிகளை நோக்கி 'அறிந்த பொருளிடத்தில் அன்பு பாராட்டவேண்டும்' என்றிவர்கூறுதல் அறியாப் பாலன் அருமறை யுணர்ந்த அந்தணனுக்கு அறிவித்தானென்பார் கூற்றிற்கினமாய் நின்றதென்க. ஈண்டுக் கூறிய லட்சணைதான் நிர்க்குணோபாசனை என்பது. இன்னும் இதைப்பற்றி விளக்குவாம்.

சிவத்தினுடைய உருவம் இரண்டு: அதில் ஒன்று மாயா சகிதம், மற்றொன்று மாயாரகிதம். இதைத்தான் சகளமென்றும் நிர்க்குணமென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. உபாசனாகாண்டத்தின் வண்ணம் அத்வைதி

கள் சகள ரூபத்தை யறிந்து அன்பு மிகுந்து உபாசனை செய்து, அவ்வுபாசனையின் பயனான பதவிமுத்தியைப் பெறுகின்றார்கள்; அவர்களே அச்சகளோபாசனையினால் வரும் பதவிமுத்தி ஆக்கத்தையும் கேட்டையும் உடையதென்றும், மாயாகாரியமான திரிபுடி வடிவாயுள்ளதென்றும், ஈண்டுள்ளார்க்குச் சுகம்போல் தோன்றுவதாயினும் உண்மையில் அது துக்கவடிவுடையதென்றும் உணர்ந்து, பின்னர் ஞானகாண்டத்தின்படி பரோட்சமாய் விசாரணை செய்து, நித்தியமும் திரிபுடிரகிதமுமான நிட்கள சிவத்தை யபரோட்சமா யறிந்தனுபவித்து முக்தி யடைகிறார்கள். இவ்வித முறைமைகளை வேதாந்தசாஸ்திரங்கள்: மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகா யோகமென்னும் ஐந்தில் அடக்கிக் கூறின. இவ்விஷயங்களையெல்லா மறியாது 'கட்டையைக் கட்டையென்றறிவதுபோலச் சிவத்தைச் சிவமென்றறிந்துவிட்டதினாலேயே மோக்ஷம் சித்தித்துவிடுமோ?' எனல் யாதாம்? யாமேற்கூறிய வண்ணம் அறிந்து அதுவானாற்றான் முத்தியாமென்க. இது பற்றியன்றோ

சூதசங்கிதை பாவபரிபாகம்.

சுயசொரூபந்தெரியாற்கேதொடருமிப்பாதகம்பலவும். (உக)

என்றும்,

பொருவிலான்ம சொரூபத்தைப் போற்றி யுணர்ந்து பொலிகின்றோன் சருமபந்தமிலாதிருப்பன் (உஅ)

என்றும் கூறியது?

"எந்த மாயாவாதியாவது தேகவர்ஜிதனா யிருந்துகொண்டு அறிவின் பயிற்சியைக்காட்டி வெளிவருவானா" என்றார். இந்தக்கேள்வி யார் கேட்க வேண்டுவது? நாஸ்திகனன்றோ? இக்கேள்வியால் இவர் நாஸ்திகரென்பதில் ஐயமில்லை. இப்படிப்பட்ட நாஸ்திகரைக் குறித்தன்றோ

உளதிலதென்றலினெனதுடலென்றலின்
ஐம்புலனொடுக்கமறிதலிற்கண்படி
லுண்டிவினையின்மையினுணர்த்தவுணர்தலின்
மாயாவியந்திரதனுவினுளான்மா. (ந.)

என்று அநுமான அளவையால் தேகவிலக்ஷணமாய் ஆன்மா உண்டென்ச் சிவஞானபோதங் கூறிற்று? இவராவது இவரைப்போன்ற எந்த மாயாவாதியாவது தேகவர்ஜ்ஜிதமாயிருந்து அறிவின் பயிற்சியைக் காட்டி வெளிவர முடியுமோ? தேகவிலட்சணமாய் அறிவுண்டென்பது தூலசூக்கும அவஸ்தையைக் கடந்து சுகமாய்த் தூங்கினேனென்ற சுழுத்தி அவஸ்தையனுபவத்தினாலும், அதன் பயிற்சி தூலசூக்கும சரீரத்தினாலும் விளங்கும். அறிவின் பயிற்சி கரணமின்றி நிகழாது. இங்ஙனமாகத் தேகவர்ஜ்ஜிதமாய் அறிவின் பயிற்சியைக் காட்டுமாறு வினவுவது நாஸ்திகத்தன்மையன்றி வேறியாதாம்!

## சிவனைப்பற்றியது.

இரண்டு பாவப் பொருளுக்கு இருமையற்ற சையோகங்கூடாதென்று அத்வைத தூஷண நிக்கிரகநூலில் விரிவாய்ப் பலமான நியாயத்தோடு பிரமவாதியார் எழுதி யிருப்பதற்குத் தக்க நியாயங்கூறாது,

"இரண்டும் பாவப்பொருள்களே. உம்மைப்போல ஒன்று பாவப் பொருள், மற்ரென்று அபாவப் பொருளென்று சொல்லிவிட்டு, அபாவப்பொருளைச் சுட்டி விதி விலக்குகளைக் கற்பித்துப் பந்தமோட்ச வியாபாரத்தி லிழிந்து, இது என்னவென்று அதட்டிக் கேட்டால் பல்லை யிளித்துப் பச பச வென்று யாம் விழிக்கமாட்டோம்"

என்று சிவ சீவர்களைப்பற்றி வரைந்ததை விசாரிப்பாம்.

அத்வைதிகள் சிவம் பாவப் பொருளென்றும் சீவன் சொப்பனப் பொருள் போன்ற அபாவப் பொருளென்றும் அதாவது அநிர்வசனீயப் பொருளென்றும் சுருதியாதி பிரமாணங்களோடு கூறி, சொப்பன வுலகப் பொருளுக்கும் மனத்திற்கு முண்டாகும் இருமையற்ற சையோகம்போலச் சீவன் முத்தியில் சிவத்தின்கண் இருமையற்ற சையோகத்தை யடைகிருனென்று சித்தாந்தஞ் செய்வதை யறிய விரகின்றி, பித்துப்பட்டோன் பேசுவது போன்று 'அபாவப் பொருளைச் சுட்டி விதி விலக்குகளைக் கற்பித்துப் பந்த மோட்ச வியாபாரத்தி லிறங்கி' என் றிவர் பரிகாசஞ் செய்வது தெரியாமையன்றி மற்றென்னும்? பரிபூரணமாயும் பாவமாயு முள்ள பிரமத்தின்கண் இவர் சித்தாந்தப்படி பரிபூரணமாயும், பாவமாயு முள்ள பல சீவர்களிருத்தல் எப்படிச் சம்பவமா மென்று அத்வைதிகள் வினவியதற்குப் பதில் கூற விடனின்றிப் பச பச வென்று விழித்துப் பதுங்கி யோடிய துவித தாந்திரிகர்கள் அத்வைதிகளை நோக்கி 'அதட்டிக் கேட்டால் பல்லை யிளித்துப் பச பச வென்று யாம் விழிக்க மாட்டோம்' என்று கூறுவது ஆச்சரியத்திலு மிகு ஆச்சரியமா யிருக்கிறதென்க !

இரண்டு பாவப் பொருள்கள் ஒன்ருதல் ஓர் போது மின்ரு மென்று "துவிதசைவரே மாயாவாதிகள்" என்னும் புத்தகத்தின் 43, 44, 45 வது பக்கங்களில் விரிவா யெழுதி யிருப்பதற்கு இவரும் இவரினத்தாரும் பதிலெழுதாமற் போயது ஏனே ?

"இரண்டு பாவப்பொருள்களும் வியாபக வியாத்திகளாக அவை யுள்ள போதே கலந்திருக்கின்றன. அவை புதுசாய்க் கலக்கவேண்டிய தில்லை. முத்தியிற் கலந்ததென்று சொல்வது தன்னேடு தானுள்ளபோதே கலந்திருந்த சிவத்தைப் பந்த காலத்தி லனுபவிக்க முடியாமல் முத்தியி லனுபவிக்க நேர்ந்தபடியினுலென்றறியக் கடவீர்." என்ருர்.

இரண்டு பாவப் (உள்) பொருள்கள் வியாபக வியாத்திகளாகக் கலத்தல், அதினும் அவை யுள்ளபோதே கலத்தல் சமவாயமாகவா? சையோகமாகவா? தாதாத்மிய மாகவா? வியாபக வியாத்தியாவது யாண்டும் வியாபகம் மிகுதியினும், வியாத்தி குறைவினும் இருப்பது. இவரது சித்தாந்தத்தில் சிவமும் பல்லாயிரங் கோடா கோடி உயிர்களும் சம வியாபகமாகக் கூறுதலின் அச் சிவமும், உயிர்களும் வியாபக வியாத்திக ளாகாவென்க. சூரிய வொளியிற் கண்ணொளிபோலச்சிவமும் உயிர்களும் வியாபகவியாத்திகளாக விருத்தல் கூடு மெனின் கண்ணுக்கொளி இயற்கையில் இன்றெனவும், உண்டெனல் பகற்காலத்தில் கண்ணுடிக் கொளி யுண்டெனல்போலெனவும், ஆதலால் சூரிய னொளியும் கண் ணொளியும் வியாபக வியாத்திகளாகவிருத்தல் ஓர்போது மின்றெனவும் "துவிதாத்துவிதவாதம்" முதலிய நூல்களில் விரிவாய்க் கூறப்பட்டிருத்தலினுனும், அதைப் பூர்வபக்கம் புரிந்து இதுகாறும் எவரும் பேசாமையானும் அது பொருந்தாதென் றறிக; அன்றிக் கண்ணுக்கொளி யுண்டென வொப்பினும் சமவியாபக முள்ள சிவ

உயிர்கட்கு வியாகபகமும் வியாத்தியுமுள்ள சூரிய கண்ணொளியுவமை யேற் காதென்றறிக.

இது நிற்க; என் ணிறந்த கோடாகோடி யுயிர்களில் ஒவ் வொரு உயிரும் சிவத்துக்குச் சமமான வியாபக முடையதாகலின் அவ்வளவு வியாபக உயிர்களின்முன் ஒரு சிவ வியாபகம் தலை யெடுத்து ஓங்குவ தெங்ஙனம்? ஓங்காதாகவே, எண்ணிறந்த கோடாகோடி உயிர்களின் வியாபகத்தின்முன்னர்ச் சிவவியாபகம் வியாத்தியாயே யிருக்குமென்க. இருக்கவே பூர்வபட்சியார் சிவம் வியாபகமென்றும், உயிர்கள் வியாத்தியென்றுங் கூறுதல் பொருத்த மின்றென்க. அத்வைதிகள் சிவம் பரிபூரண மென்றும், அச் சிவத்தின் கண் எண்ணிறந்த கோடாகோடி உயிர்கள் ஏகதேசமென்றும் அதிலும் சற்பனையாக ஏகதேசமென்றும் கூறுதலின் இவர் மதத்தில் நேரிடும் இழுக்கு அத்வைதமதத்தில் நேராதென்க.

இதுகாறும் வியாபக வியாத்தியைப்பற்றிப் பேசினும். இனிக் கலத்தலைப்பற்றி விசாரிப்பாம். கலத்தலென்பதும் சம்பந்தமென்பதும் ஒருபொருட் கிளவி. இன்மைக்கும் ஒப்புக்கும் வேறாய்ப் பிரதியோகியை யபேட்சித்து ஞானத்திற்கு விஷயமாயிருப்பது யாது அது சம்பந்தத்திற் கிலக்கணமாம். பூர்வபக்ஷியார் கலத்தலை பொருகாலத்துச் சொல்லாமல் சிவமானது உயிர்களுள்ளபோதே கலத்தல் அதாவது அநாதியே கலத்தல் எனச் சொல்லுகின்றார். அக்கலத்தல் அல்லது சம்பந்தம் முன் வினவி விட்டபடியே சமவாயமாகவெனின்,

"இனிச்சமவாயமாவது நித்தமாகிய சம்பந்தம். அது நீக்கமின்றி யிருப்பனவற்றின்கண் இருக்கும். யாவை யிரண்டினுளொன்று மற்றொன்றனைப் பற்றியே நிற்கும், அவை நீக்கமின்றி யிருப்பன. அவை சினையும் முதலும், குணமும் குணியும், வினையும் வினைமுதலும், சாதியும் வடிவு (பொருள் அல்லது வியக்தி) ம், விசேடமும் நித்தியப் பொருளுமென்பன."

என்று தருக்கநூல் சமவாய சம்பந்தத்திற்கு இலக்கணங் கூறுதலின் அது பொருந்தாது. எவ்வாறு பொருந்தாதெனின் இவ்வாறும். பூர்வபட்சியாரது மதம் சிவமும் சத்துப் பொருள், உயிரும் சத்துப்பொருள் என்று கூறுகின்றமையினானும், இரண்டும் சத்துப்பொருளென இவரும் கூறியிருக்கின்றமையானும் இரண்டு பொருள்கள் சினையும் முதலும், குணமும் குணியும், வினையும் வினைமுதலும், சாதியும் வடிவும், விசேடமும் நித்தப் பொருளுமாதல் இன்றா மென்க. ஆதலால் சமவாய சம்பந்தம் பொருந்தா தென்பதாம்.

சையோக சம்பந்தம் பொருத்தமுடையதாவெனின் அதுவும் பொருத்தமுடையதன்று. சையோகசம்பந்தம் யாண்டும் கூடியதென்னும் விவகாரத்திற் கேதுவா யிருப்பதாகலின், அதனை(காலம்பற்றிய இரண்டு பேதப்பொருளிற்குரித்தாய சையோக சம்பந்தத்தை)நித்திய சம்பந்தமென் னும் பொருள் பட 'அவை யுள்ளபோதே கலந்திருக்கின்றன. புதுசாய்க் கலக்க வேண்டியதில்லை' எனப் பூர்வ பட்சியார் கூறியது பிழையாமென்க. இரண்டு பாவப் பொருள்கள் வியாபக வியாத்தியாயேனும் மற்றெவ்வகையாயேனும் சம்பந்தமாதல் சகண்டப் பொருளில் வாய்க்குமே யன்றி அகண்டப் பொருளில் வாய்க்காது. அதுவும் இறந்தகால முதலியவற்றைப் பற்றி யிருக்குமேயன்றிக் காலாதீதமா யிராது; இரா தென்பது எப்போது ஓர் பொருளினோடு மற்றொருபொருள் கூடியதென்கிறோமோ அப்போதே அப்பொருள் கூடாதிரு

ந்தகாலம் பெறப்படுதலினுலென்க. செம்பிற் களிம்புபோலச் சிவத்திற்கும் உயிர்களும் அநாதியே சையோக மிருக்கலா மென்னின், பொன்னுங் களிம் பும் சேர்ந்தனவே செம்பாதலினுனும் இரண்டு பொருள் கூடி மற்ருென்ருய் மாற ஓர் காலம் அவசியம் வேண்டியதென்பது திண்ணமாகலினுனும் இவ் வுவமானம் பொருத்தமிலதென்பதாம். இது பிரதிபந்தி.

இனித் தாதான்மிய சம்பந்தமாகவும் விசாரிப்பாம். சிவ ஞான போதம் 2-ம் சூத்திர வுரையில் இவர் மதஸ்தரான சிவஞானசுவாமிகள்

"முதல்வ னொருவனே ஞாயிறு மொளியும் போலச் சிவமுஞ் சத்தியு மெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமை யினிற்பன்"

என்று கூறி, தாதான்மிய சம்பந்தத்திற் குதாரணம் சூரியனையும் அவ னது குணமான வொளியையும் எடுத்துக் காட்டுகின்றமையின், அச்சிவ ஞானசுவாமிகள் கருத்துப்படி அச்சம்பந்தம் குண குணியாய் நின்றதென்க. குண குணியாய்க் கொள்ளுங்கால் உயிர் அனுபவிக்கும் துன்டங்களெல்லாம் சிவ மனுபவிப்பதாக முடியும்.

இன்னும் கலப்பைப்பற்றி வேறுவிதமாயும் விசாரிப்பாம். சிவம் சுகவடி வம், உயிர் துக்க வடிவம். சுக வடிவமும் துக்க வடிவமும் கலக்குமா ? அதி னும் பழமையாய்க் கலக்குமா? அதினுங் கலந்திருக்குமா ? அதினும் பழமை யாகவே கலந்திருக்குமா? பரிபூரண சிவத்தினிடத்துச் சத்தான உயிர் இரு க்குமென்று சொல்வதும், அதினும் வியாபகமான உயிர் இருக்குமென்று சொல்வதும், அதினும் பல்லாயிரம் கோடாகோடி வியாபக உயிர்களிருக்கு மென்று சொல்வதும், அதினும் சுக சொரூபமான சிவத்தின்கண் துக்க சொரூபமான உயிர்களிருக்குமென்றுசொல்வதும், அதினும் கலக்குமென்று சொல்வதும், அதினும் பழமையாகவே கலக்குமென்று சொல்வதும் எவ் வளவு நியாயவிரோதம்?

சிவம் ஞானப்பொருள், உயிர்கள் ஞானமில்லாப் பொருள்கள். இங்ஙன மாக இருபொருள்களும் எவ்வாறு கலக்கும்? திருட்டாந்தத்தில் யோக்கிய னும் அயோக்கியனும் கலக்கின்ருர்களா? ஒளியும் இருளுங் கலக்கக் சாண்கி லேம். ஆகையால் சிவமும் உயிர்களும் கலக்கின்றனவெனக் கூறல் பொருந் தாது.

சிவமும் உயிர்களும் ஆதார ஆதேயத்தால் கலக்கின்றனவா? அங்ஙன மின்றிக் கலக்கின்றனவா? பூமியும் நீருங் கலந்திருக்கின்றன. இவ்விரண்டில் பூமி ஆதாரம், நீர் ஆதேயம். ஆகாயத்தில் பிருதிவி அணுக்களும் நீர் அணுக் களும் கலக்கின்றன. ஆயின் இவ்விரண்டும் ஒன்றை யொன்று ஆதாரமாய்ப் பெற்றுக் கலக்க வில்லை. இவ்விரண்டில் பூமியும் நீரும் போலவா, பிருதிவி அணுக்களும் நீரணுக்களும் போலவா சிவமும் உயிர்களுங் கலப்பது? பூமி யும் நீரும்போலென்னின் இவ்விரண்டும் கண்டப் பொருளாகலின் ஒன்றை யொன்று ஆதாரமாகப் பெற்றிருக்கின்றன. உவமேயத்தில் சிவமும் உயிர்க ளும் வியாபக முள்ளன வென்றும் அதினும் சமவியாபக முள்ளன வென்றும் இவர் மதங் கூறுகின்றமையின் பூமி நீர் உவமானம் பொருந்தாது. பிருதிவி அணுக்களும் நீர் அணுக்களும் ஆதார ஆதேயங்களல்ல. இவை யொன்றை யொன்று அபேட்சிக்காது தாமே சுயமாய் இருக்கின்றன. இங்ஙனமே சிவ மும் உயிர்களும் ஒன்றையொன்று அபேட்சிக்காது தாமே சுதந்தரமா யிருக்

கின்றனவென் றுகின்றது. பூமியும் நீரும், பிருதிவி அணுக்களும் நீரணுக்களும் தாமில்லாவிடத்து ஒன்றோடு மற்றொன்று கலக்கின்றன. அவ்வாறே சிவமானது தானில்லாவிடத்துள்ள உயிர்களோடு கலக்கின்றன வென்று சொல்லவேண்டும்.

ஆகாயமும் வாயுவும் கலப்பது போலச் சிவமும், உயிர்களுங் கலக்கின்றனவெனின் இதன் மறுப்பு "சங்கராசாரியர் அவதார மகிமை" 29-வது பக்கத்திலும், "சித்தாந்திகளும் ஏகாத்தும வாதிகளே" என்னும் நூலில் 14-வது 15-வது பக்கங்களிலும் "அத்வைத தூஷண பரிகாரம்' 57, 58, 59, 60, 61, 62, 63, 64, 65-வது பக்கங்களிலும், "பதி பசு பாச வாதம்" 36, 37-வது பக்கங்களிலும், "மாயாவாத சைவ சண்டமாருதம்" 148, 149, 150-வது பக்கங்களிலும், "அத்வைத உண்மை" 48, 49, 50, 51, 52, 53, 54, 55, 56-வது பக்கங்களிலும், "அவைதிக சைவ சண்டமாருதம்" 101, 102, 103, 104, 105, 106, 107, 108-வது பக்கங்களிலும் இன்னும் பலவிடங்களிலும் மிகு விரிவாய் வந்திருக்கின்ற தாகலின் இங்கு ஏதும் பேசாது விட்டனம்.

சிவத்தை யுயிர் கலந்திருந்தால் அதிலும் பழமையாய்க் கலந்திருந்தால் ஏன் அனுபவிக்க முடியவில்லை? இதனால் கலத்தலுக்கும் அனுபவித்தலுக்கும் ஏதும் பொருத்தமில்லையென் றுகின்றது. சிவத்தை யெப்படிக் கலந்தாலும் அதனால் ஏதும் பய னில்லை; அனுபவம் வேண்டும்; அது தான் பயன். அனுபவ மிருந்துவிட்டால் கலத்தல் அநாவசியக மாகும்போலும். இவர் வாக்கியப்படிச் சிவத்தை யுயிர்கலக்கினும் பந்த மிருக்கிறது. அங்ஙனமாயின் சிவத்தைக் கலத்தல் ஆவசியகமா? அனுபவம் ஆவசியகமா? கலத்தவில் பந்த மிருத்தலாலும், பந்தங் காரணமாக அஞ்ஞானம் துக்கம் இவை யிருப்பதினாலும், அனுபவம் முத்தியான தினாலும், முத்திகாரணமாக மெய்ஞ்ஞானம் சுகம் இவை யுண்டாவதினாலும் முத்தியே ஆவசியகமாம். சிவத்தைக் கலந்து அதினும் சிவ முள்ளபோதே கலந்தும் பந்தமும் துக்கமும் இருப்பதாயின் கலத்தலினால் என்ன பயன்? சிவத்தைக் கலந்தும் பந்தம் துக்கம் அஞ்ஞானம் இவை யிருப்பதானால் இதை விடக் கலவாமலே யிருந்துவிடலாமே. ஒரு உயிர் சிவத்தைக் கலந்த தென்றும், ஒரு உயிர் சிவத்தைக் கலக்கவில்லை யென்றும் வைத்துக்கொள்வோம். பந்தமும் அஞ்ஞானமும் துக்கமும் இரண்டிக்குஞ் சரியானால் கலத்தலினால் என்னலாபம்? சிவனது உலகில் செல்வதே யருமை, அதனினும் அருமை சிவனது உருவைப் பெறுதல், அதனினும் அருமை சிவத்தோடு கலத்தல், அதனினும் அருமை சிவன் என்றுளதோ அன்றே கலத்தலாம். இத்தகைய பழைய கலப்பைப் பெற்றும் பந்தத்தோடும் அஞ்ஞானத்தோடும் துக்கத்தோடும் இருக்கு மென்பது அநியாயம்! அநியாயம்! இதனால் சாயுஜ்ஜிய முத்தியும் பந்தமும் அஞ்ஞானமும் துக்கமுமாகின்றது. சிவசந்நிதானத்திலேயே அஞ்ஞானாதிகள் தலை காட்டா வென்றால் சிவத்தோடு கலந்தபிறகா அவை தலைகாட்டும்?

ஒரு சமயம் உயிர் சிவத்தோடு கலக்குங்கால் இடையில் அஞ்ஞானாதிகள் இருக்கக் கலக்கு மெனின் இது பொருந்தாது. இடையில் அஞ்ஞானாதிகள் இருக்குமேயாயின்கலத்தலென் பதேது? பொன்னுக்கும் வெள்ளிக்கும் இடையில் இரும் பிருக்குமாயின் அப்போது பொன் வெள்ளிகளுக்குக் கலப்பில்லை; பொன்னுக்கும் இரும்புக்கும், வெள்ளிக்கும் இரும்புக்கும் கலத்த லுண்டு. இவ்வாறே சிவத்துக்கும் அஞ்ஞானாதிகளுக்கும், உயிர்க்கும் அஞ்ஞானாதிகளு

க்கும் கலத்தலுண்டு. அவ்வளவே யன்றி நேரே சிவத்துக்கும் உயிர்க்குங் கலத்தலில்லை. இவ்வுவமானத்தினுல் உயிர்க்கு எப்படி அஞ்ஞானுதிகளுளவோ அப்படியே சிவத்துக்கும் அஞ்ஞானுதிகளுளவென்ருகின்றது.

சிவமோ ஞான வடிவம், உயிரும் இவர் சித்தாந்தப்படி ஆணவ மலம் பற்றுதற்குமுன் ஞானவடிவம். இவ்விரு ஞான வடிவப்பொருளுங் கலக்குங்கால் இடையில் அதற்கு விரோதமான அஞ்ஞானுதிகள் இருக்குமா ? இரு ஒளிப் பொருளின் இடையில் இருள் இருக்குமா? ஒரு ஒளி யுள்ள பொருளின் சந்நிதானத்திலேயே இருள் தலைகாட்டா தென்ருல் இரு ஒளிப் பொருள்களி னிடையிலா தலைகாட்டப் போகிறது ?

சிவத்தோடு உயிர் கலந்தது அறிந்தா ? அறியாமலா ? அறிந்து கலந்த தென்னின் அஞ்ஞானுதி பந்தமிருக்குங்கால் சிவத்தையறிவதேது? அஞ்ஞானுதிகளோடுங் கூடியே அறிந்த தென்னுங் கால் உயிர் ஞாதிருவும், சிவம் ஞேயமும், இடையில் ஞானமு மிருக்கிறதாகி, திரிபுடி தோஷத்திற் கிடனுகின்றது. எங்கே திரிபுடிதோஷ முண்டோ அங்கே அந்தச் சரணுதிகளிருக்கின்றனவாய் ஒப்பவேண்டும். ஒப்புவோமாயின் அநாதிக் கலப்பிலேயே அதாவது சிருட்டிக்கு முன்பாகவே அந்தக் சரணுதிகள் இருந்தனவென்பதற்குப் பிரமாண மில்லை. இது நிற்க; சிவம் ஞேயமாகுங்கால் அறிபடு பொருளாகி "உணருரு அசத்து" என்ற சிவ ஞான போத சூத்திரப்படி சிவம் அசத்தாய்ப்போம்; அது காரணமாக இவரது மதம் நாஸ்திசமதமாய்ப் போம்; நாஸ்திகமாய்ப் போங்கால் இவராஸ்திகராவது கனவேயாம். அநாதியிலே சிவத்தோடு உயிர் கலப்புற் றிருந்தது என விசாரணை யின்றி வாயில் வந்தபடி சொன்னதினுல் இவ்வள வநர்த்தத்திற் கிடனுயிற்று அதோடமைந்த முண்டெனச் சொல்வது எவ்வள வநர்த்தத்திற் கிடம் ?

அறியாமல் கலந்த தென்னின், அங்ஙன மாயின் கலந்த தென்பது உயிர்க்குத் தெரியா தென் ருகின்றது. ஆகின்றபோது உயிர் சடமா யிருந்து கலந்த தென்றே சொல்லவேண்டும். உயிர் யதார்த்தத்தில் சித்தாயிருந்து அறியாமற் கலந்ததா ? சடமாயிருந்து அறியாமற் கலந்ததா ? சித்தாயிருக்குமாயின் அறியாமை வரவேண்டிய ஆவசியக மின்று; சடமா யிருக்குமாயின் என்றுஞ் சித்தாகாது. ஆகாதபோது பந்த துக்கமும், மோட்ச சுகமும் உயிர்க்கு இரா. இராது போகவே கல்லுக்கும், உயிர்க்கும் பேத மில்லாது போகும். போகவே மோட்சம் அடையு நிமித்தம் கல்லுக்கு எங்ஙனம் சரியை கிரியை யோக ஞானங்கள் ஆவசியக மின்றே அங்ஙனமே உயிர்க்கும் அவை ஆவசியக மின்ரும். இதனுல் உயிரி னிலக்கணம் சடமெனல் தீர்வாம்.

இனி அனுபவத்தைப் பற்றிப் பேசுவாம். அனுபவ மென்பது யாது ? இந்திரிய அனுபவமா? மன அனுபவமா? ஆன்ம அனுபவமா? இந்திரியஅனுபவமும் மன அனுபவமு மென்பது பிறபொருள்க ளிருந்து அவை காரணமாக ஆன்மா அனுபவப்படுதல். இவ்விரண்டும் அநித்திய சட அசத்துப்பொருள்களின் அனுபவ மாகலின், சிவமும் அனுபவிக்கப்படும் பொரு ளென்று சொல்லும் பட்சத்தில் அதுவும் அநித்திய சட அசத்துப் பொருளாய்ப் போம். ஆன்ம அனுபவமெனின் ஆன்மா பிறிதொரு பொருளை அனுபவிக்க வேண்டின், இந்திரிய மனங்களின் துணைகளின்றி அனுபவித்த லாகாது. இந்திரிய மனங்கள் காரணமாக அனுபவிக்கப்படும் பொருள் அநித்திய சட அசத்துப் பொருளாகுமே யன்றி நித்திய ஞான சத்துப் பொருளாகாது.

முத்தி அடையுங் காலத்து உயிர் சிவத்தோடு கலக்குமெனின் முன்னில் லாது பின் ஞெருகாலத்திற் கலக்குங் கலப்பு அநித்தியமாய் விடுமென்றும், எது கலக்கிறதோ அது கலத்தலின்றி ஒருபோது பிரியுமென்றும், அப்போது மோட்சமும் இல்லாதுபோய்ப் பழைய பந்த முண்டாய்விடு மென்றும், அத ஞல் மோட்சம் அநித்தியமாய்ப் போமென்றும் ஆத்துவிதிகள் ஆக்ஷேபஞ் செய்கிறுர்களென்று பயந்து, சிவ மென்றுளதோ அன்றே சிவத்தோடு உயிர் கலப்புற்றதென்று கூறிஞர் இப்பூர்வபட்சியார். இது எப்படி யிருக்கிறதெ ன்னின் கொசுக்கடிக்கு அஞ்சிப் பெரும் வேங்கையின் வாய்க்கு இரையான கதைக் கிணமா மெனக. புதிதாய்ச் சொன்ஞல் அநர்த்த முண்டா மென்று பயந்து பழமையாய்க் கலப்புச் சொன்ஞலும் மற்ரெரு விஷயத்தில் சணப் பன் வீட்டுக் கோழிபோலத் தாமே வலிய வந்து அகப்பட்டுக்கொண்டார். அஃதி யாதெனின், அனுபவத்தை முத்தியில் மாத்திர முண்டென்று சொ ன்னமையே. அனுபவத்தை முத்தியில் சொன்னமையால் முத்தி யடையாத பந்தத்தின்போது அனுபவ மின்றென்பது நிச்சயமாகின்றது. எது ஒரு கால த்துண்டாகின்றதோ அது மற்ரெரு காலத்துப் பிரியும். இங்ஙனமே அனு பவம் முத்தியிலென்ருல் அது பின்ஞெருகாலத்து இல்லாது போகும். இல் லாது போகவே, முத்தியும் இல்லாது போகும். முத்தி யில்லாது போகவே, பந்தமுள்ளதாய் விடும். அப்போது முத்தி யென்பது சொல்லளவினதாகும். நீருக்கு உஷ்ணம் இடையில் வந்து போவதுபோல முத்தி யனுபவமும் இடை யில் வந்து போய்விடும். நிலையில்லாததும் அற்பகாலத்து மாத்திர மிருப் பதுமான இவரது மாயாமய முத்தி வர்தா லென் ? வராது போயினென் ? இவர் முத்தி யிலக்கண மின்னதெனத் தெரிந்திலர். அதஞல் முத்திப் போலியை யெல்லாம் முத்தி யெனக் கூறி வேதபாஹிய ராகின்ருர்.

இவர் முத்தியில் அனுபவிக்க நேர்ந்தது இன்னதெனக் கூறிஞரில்லே. இவர் மதப்படிக் கூறும் அனுபவம் நிலேயில்லாமலும் அசத்தாயும் துக்கமா யும் போமெனப் "பசு சச்சிதாநந்த முடையதா ?" என்ற நூலில் வெகு விரிவாய்ப் பேசி யிருக்கின்றமை யானும், அதற்கு எதிர் வாதிகளாய் நின்ற ம-ா-ா-ஸ்ரீ கோயமுத்தூர் வெங்கடரமணதாஸ், ம-ா-ா-ஸ்ரீ யாழ்ப்பாணம் செந்திநாதையர் ஆகிய இவ்விரு அவைதிக தாந்திரிக மாயாவாதிகளும் மற்ற மாயாவாதிகளும் வெளி வராது மறைந்து நின்றமையாலும் இன்னது அனு பவமெனக் கூற இம்மாயாவாதி யார்க்கும் வாய் வரவில்லே. இவர் கூருவிடி னும் யாம் கூறுகின்ரும். அது யாதெனின் சிவானுபவமாம். அந்தச் சிவா னுபவத்தைத் தான் முத்தியில் அனுபவிக்க நேர்வதாய்ச் சொல்லுகின்ருர். ஸ்திரீயிஞ லுண்டாகும் சிற்றின்ப அனுபவம் இடையில் வந்து இடையிற்ரு னே போய் விடுவது அனுபவம். அவ்வாறே சிவாநுபவமும் முத்தியாகிய ஒரு காலத்து வந்து பின்ஞெருகாலத்துப் போய்விடு மென்பது திண்ணம்.

இனி உயிர்க்குச் சிவானுபவம் எப்படி வருமென்ருராய்வாம். அததின் அனுபவம் அததற்கிருக்குமே யன்றி ஒன்றின் அனுபவம் மற்ரென்றினுக்கு வாராது. காக்கையின் அனுபவம் காக்கைக் கிருக்கும், மாட்டின் அனுபவம் மாட்டிற் கிருக்கும், மனிதன் அனுபவம் மனிதனுக் கிருக்கும், உயிரின் அனு பவம் உயிருக்கிருக்கும். இப்படியே சிவத்தின் அனுபவம் சிவத்துக் கிருக்கும். காக்கையின் அனுபவம் மாட்டிற் காவது, மாட்டின் அனுபவம் காக்கைக்கா வது, மனிதன் அனுபவம் காக்கை மாடுகளுக்காவது, காக்கை மாடுகளின் அனுபவம் மனிதனுக்காவது இரா. அது மாத்திரமா, ஒரு காக்கையின் அனு பவம் மற்ரெருகாக்கைக்காவது, ஒரு மாட்டின் அனுபவம் மற்ரெரு மாட்

டிற்காவது ஒரு மனிதன் அனுபவம் மற்றொரு மனிதனுக்காவதும் இரா. இவ்வாறே சிவத்தின் அனுபவம் சிவனல்லாத உயிர்க் கிருத்தல் கூடாது. அங்ஙனமாகச் சிவாநுபவத்தை யுயிரனுபவிக்குமென எங்ஙனங் கூறலாம்? சிவாநுபவத்தை யுயிர் அனுபவிப்பதாகவே வைத்துக்கொள்வோம். அங்ஙன மாயின் அப்போது உயிர்க்கு உயிரனுபவம் உண்டா? இல்லையா? உண்டெ னின் அப்போது சிவாநுபவம் எப்படி உண்டாகும்? உயிர் அநுபவமும் சிவா நுபவமும் ஒரு காலத்து எப்படி யிருக்கும்? உயிர் அனுபவ மில்லை யெனின் உயிராயிருக்குங்கால் உயி ரனுபவ மில்லாது போமா? மாடா யிருக்குங் கால த்து மனித அனுபவமும் வருகிறதாகவே வைத்துக்கொள்வோம். அப்படியா னால் மாட்டனுபவ மிலலாது போமா? தனது தன்மை தன்னிடத்து இல் லாத திரவியமு மொன்றுளதோ? திரவியத்திற்கும் சாதிக்கும் சமவாய சம்ப ந்த மென்றும், அபேதமென்றும் தருக்க நூலறிந்த எவர்தாம் அறிந்திலர்? திரவியத்தை விட்டு அதன் தன்மை அதாவது சாதி பிரியுமென இவர் கேட் டேனு மிருக்கின்றனரா? உயிரானது இருந்தே உயிர்த்தன்மை கெட்டுச் சிவானுபவம் பெறுவதாகத் தருக்க நூல் விரோதமாகவும் அனுபவ விரோத மாகவும் வைத்துக்கொள்வோம். ஆனால் இந்த நியாயம் எல்லாத் திரவியங்க ளிடத்துமா? உயிர் விஷயத்தில் மாத்திரமா? நியாயம் பொதுவானதால் எல் லாத் திரவியங்களிடத்துமென்றே சொல்லவேண்டும். அப்படிச் சொல்லும் பட்சத்தில் சிவமும் சிவமாயிருந்தே உயிரனுபவம் பெறுவதாய்ச் சொல்லலா மே. சொல்லின் உயிர் சிவாநுபவம் பெற்று மோட்ச மடையும்; சிவமோ உயிரனுபவம் பெற்றுப் பந்த மடையும். சிவத்துக்குப் பந்தஞ் சொல்லும் பொருட்டுத்தான் தம்மதத்துக்கியைய இம்மாயாவாதியார் துவிதஞ் சாதிக்க வந்தார்போலும்.

உயிரானது தனக் குரிய உயி ரனுபவத்தோ டிராது சிவாநுபவத்தை விரும்புவது யாது காரணம்? உயிரநுபவந் துக்கமா யிருப்பதாலும், சிவாநு பவஞ் சுகமா யிருப்பதாலுமாம். உயிரினிடத்துச் சுக மிருக்குமானால் சிவத் தின் சுகத்துக்கு எதிர் பார்க்கவேண்டிய ஆவசியக மின்று. சிவம் உயிரை யெதிர் பார்க்கிறதா? இல்லை. ஏனில்லை? சிவம் சுகவடிவா யிருப்பதால் இன்னொரு பொருளை எதிர்பார்ப்ப தில்லை. இதனால் உயிர் சுக மில்லாப் பொருளென்றும், சிவம் சுகமுடைப் பொருளென்றும் சித்தாந்தமாம்.

இனி உயிர் சிவத்தின் சுகத்தை அனுபவிப்பதி னுண்மையை விசாரிப் பாம். சுகமும் துக்கமும் திரவியத்தின் குணம். அதினும் விளக்குக்கு ஒளி யைப்போலச் சொரூப குணம். அது ஓர்போதும் திரவியத்தை விட்டு வில காது. விலகின் திரவியமே யில்லாது போம்; ஒளி விலகினால் விளக்கே யில் லாமற் போதல்போல. இதுபோலவே உயிர்க்குத் துக்கமும், சிவத்துக்குச் சுகமும் சொரூப குணங்களாம். உயிர் துக்கமா யிராவிடில் அதாவது சுகமா யிருக்கின் சிவத்தினது சுகத்துக்கு எதிர் பார்க்கவேண்டிய ஆவசியகமின்று. எதிர்பார்ப்பதால் உயிர் துக்கவடிவினதென்றே கொள்ளப்படுமென்க. துக்க வடிவினதாகிய வுயிர் சிவத்தினது சுகானுபவத்தைப் பெறுங்கால் முன்னி ருந்த துக்கம் இருக்கின்றதா? இல்லையா? இருக்கின்றதென்னின் சுகம்பெற வில்லை யென்றாகின்றது. இல்லை யென்னின் இருந்ததுக்கம் விலகிப்போயிரு க்க வேண்டும். குணம் அதினுஞ் சொரூப குணம் திரவியத்தைவிட்டு விலகி ப் போகாதென முன்னரே கூறினம். விலகிப் போயின், அப் போது உயி ரென்னும் திரவியமே யில்லாது போகவேண்டும். திரவியமே யில்லாதுபோ யின் சிவத்தினது சுகத்தைப் பெறுவது எது? உயிர் இல்லாது சுகத்தைப்

பெறுமென்று சொல்வது இல்லாத மலடிமகன் சிவத்தின் சுகத்தைப்பெறு மென்று சொல்வதற் கினமாம். உயிரின் துக்கம் நீங்கிப்போமென்று சொல் வதிலுள்ள இன்னொரு ஆட்சேபத்தைத் தெரிவிப்பாம். எது நீங்கிப்போகிற தோ அது திரவியத்தின் சொரூப குணமென்று சொல்லப் படாது ; கற்பித குண மென்றே சொல்ல வேண்டும். உயிர்க்குச் சுகங் கற்பித குணமாயின், சிவத் துக்குத் துக்கங் கற்பித குணமாகும். உயிருக்குத் துக்கங் கற்பிதகுண மாயின் யதார்த்தகுணம் அதாவது சொரூபகுணம் யாதென்ற வினு நிகழும். அவ்வினுவுக்கு விடை சுகமென்று சொல்லாவிடில் வேறே வழியில்லை. உயி ர்க்குச் சுகம் யதார்த்தகுண மாயின் சிவத்துக்குத் துக்கம் யதார்த்த குண மாகும். சுகத்தை யதார்த்த குணமாய்ப் பெற்ற உயிர், துக்கத்தை யதார்த்த மாய்ப்பெற்ற சிவானுபவத்தை அதாவது துக்கானுபவத்தைப் பெற முயல் வது என்னே ! இதைவிடத் துக்கத்தை யதார்த்தமாய்ப் பெற்ற சிவம், சுக த்தை யதார்த்தமாய்ப்பெற்ற உயிரனுபவத்தைப் பெற முயலலாமே.

உயிர் சுகத்தை யதார்த்தமாய்ப் பெற்றிருக்குமானுல் அச்சுகத்தில் துக் கம் எப்படித் தங்கும்? நம்மிடத்தில் துக்க முளதென்பதற்கு நாமே சாட்சி. அத் துக்கத்தை நீக்கிக்கொள்ளக் கடவுளை வழிபடவேண்டு மென்பது எல் லா ஆஸ்திகருடைய கொள்கையென நாம் அறிவோம். துக்கானுபவமுள்ள நாம் இயற்கையில் சுகசொரூபிகளெனச் சொல்வது தகுமோ ?

பந்தகாலத்து அனுபவிக்க முடியாமைக்குப் பூர்வபட்சி மற்றெரு கார ணம் சொல்லலாம். அது யாதெனின் புருஷன் ஸ்திரீயோடு கூடுங்கால் அவ னெண்ணம் வேறேரிடத் திருக்கு மாயின் அப்போது சுக முண்டாவ தில்லை. இதுபோல உயிர் சிவத்தோடு கலக்குங்கால் அஞ்ஞானஞ் சம்பந்த ப்பட் டிருக்குமாயின் சுகானுபவ முண்டாகா தென்னின், புருஷன் ஸ்திரீ யோடு கூடுங்கால் சுகத்தை அனுபவிப்பது மனம்; சரீர மல்ல. சரீரம் ஓர் துணையாக மாத்திர மிருக்கின்றது. மனம் வேறு எண்ணத்திலிருக்கும் போது அம்மனம் கலக்க வில்லை யென்றே சொல்ல வேண்டும். அவ்வாறே உயிர் சிவத்தோடு கலக்க வில்லை யென்றே சொல்ல வேண்டும். மனத்தின் ெறுழில் பற்பல விடத்துத் தாவுதல்; உயிரின் ெறுழில் அவ்வா றல்ல. மனத்தோடு கூடா விடில் உயிர் தொழிலற்றே யிருக்கும். ஆதலால் உயிர் க்கு மனதை யுவமானமாகக் கூறுவது தவறு. மனம் வேறு விஷயத்தில் செல்ல உடல் மாத்திரங் கலப்பது பிணங் கலப்பது போலாம். மனங் கலந் தால் அனுபவ மில்லாமற் போகமாட்டாது.

ஒருவரது சுகத்தை மற்றெருவர் பெற்ருரென்று கூறுவது மருளே யன்றித் தெரு ளன்று. இவ்வாறே ஸ்திரீயின் சுகத்தைப் புருஷன் அனு பவித்தா னென்பதும் மருளே யன்றித் தெரு ளன்று. முதலாவது ஸ்திரீயி னிடத்துச் சுக மிருக்கிறதா வென்று பார்க்கவேண்டும். இருக்குங்கால் தானே சுகவடிவாகின்ருள். தானே சுகவடிவானுல் அவள் சுகம் பெறும் பொருட்டுப் புருஷனை விரும்ப வேண்டிய ஆவசியக மில்லை. விரும்புதலால் அவள் சுகவடிவ மல்லள். சுகவடி வுள்ளவ ளாகவே வைத்துக் கொள்ளு வோம். அங்ஙனமாயின் சுகம் சொரூபகுண மாகலின் அவளிடத்திருக்கும் சுகம் பிறிதொரு இடத்திற்குப் போகமாட்டாது. போகமாட்டா தாகவே, அவளிடத்தி னின்றும் புருஷன் சுகம் பெறுகிரு னென்பது யதார்த்த மன்று. ஸ்திரீ புருஷ சையோகத்தில் சுகமுண்டாகின்றதே யென்னின் அது வாஸ்தவந்தான். அந்தச் சுகம் தத்தமிடத்தி னின்றே யுண்டாகின்றது. புரு ஷன் ஸ்திரீயோடு புணருங்கா லுண்டாகுஞ் சுகம் தனது இந்திரிய அந்தக்கர

ஞாதிகளின் இழப்பினாலும், தமோ ரஜோ குணங்கள் கடந்த சத்துவ குண மிகுதியினாலும் தன்னிடத்தி னின்றே தோன்றிற் றென்க; இவ்வாறே ஸ்திரீக்குமா மென்க. தம்மிடத்தி லிருக்கும் சுகம் தோன்றுவதற்கு ஸ்திரீ புருஷ வடிவங்கள் நிமித்தமாயிருக்கின்றனவேயன்றி அவையே சுகவடிவ மல்ல. நித்திரையில் சுழுத்தி சுக முண்டாகின்றது. அந்த நித்திரை யுண்டாதற்கு மெத்தை தலையணை முதலியன சாதனங்களாம். அவ்வளவேயன்றி அவையே சுகப் பொருள்க ளல்ல. அவ்வாறே ஆன்மாவின் சுக முண்டாதற்கு ஈசுரபத்தி, குருபத்தி, சிரவண மனன நிதித்தியாசனாதிகள் நிமித்தமேயன்றி அவையே சுகமல்ல. இந்த வுண்மையினை யுணர வலிமையற்ற துவிதப் பிராந்தர்கள் உயிர் சிவத்தோடு கலக்கிறதென்றும், சிவனிடத்திலிருந்தே யுயிர்க்குச் சுகம் வருகிறதென்றும் பேசி விழலராய் அவைதிகப் புஞ்சங்களாகின்றார்கள்.

இனி மேல்வரும் விஷயம் அடியில் வருவது:—

"இரண்டறக்கலத்த லென்பதனை அங்ஙனங் கலத்தலா லிரண்டி லொன்று கெட்டுப் பொருளின்றிப் போகுமென்று நீர் துணிந்ததுணிபு அஸங்கதமாம். அங்ஙனமாயின் பெறுவானும் பேறு மின்றி மோக்ஷம் என்பது சொன் மாத்திரமாய்க் கழிந்திடும் இரண்டு பாவப் பொருள்களையும் அவற்றின் தன்மை யுண்மையாலிரண்டென்றும் அவை பிரிபடாமையால் இரண்டறக் கலந்ததென்றும் பெரியோர் கூறுவர். இதனையே அத்துவிதமென்று கூறும் வேதம்"

இவ்விஷயம் எத்தனையோ முறை மறுக்கப்பட்டுப் பழங் கதையாய்ப் போயிற்று. அதையே யிப்போதும் பேசி விழலராகின்றார். இவர் இரண்டறக் கலத்தலை அங்கீகரிக்கின்றார். ஆனால் அக்கலத்தலில் இரண்டு பொருள் இருக்கின்றனவென்றும் இரண்டும் பிரிவுபடாமையால் இரண்டறக் கலந்ததென்றுங் கூறுகின்றார். இரண்டு பொருள் இரண்டறுதல் கூடுமோ? இரண்டு பிருதிவி அணுக்களை எவ்வாறு சேர்த்தாலும் இரண்டாயிருக்குமேயன்றி இரண்டறுதல் கூடுமோ? இரண்டறுந்ததாகவே வைத்துக்கொள்வோம். அப்படியானால் அங்கே இரண்டென்பதிருக்கப்படாதே. இருக்கப்படாதபோது பெறுவானும் பேறும் இருக்கவேண்டுமென்று ஏன் விரும்புகின்றார்? பெறுவானும் பேறும் இருக்கிறவிடத்தில் இரண்டறுதல் எங்கேனும் உண்டா? இராசனிடத்தில் ஒருவன் யாசகம் பெறும்போது பெறுவானும் தருவானும் இருக்கின்றார்கள். இவ்விருவரையும் இருவரல்லவென்று சொல்லலாமா? கைலாசத்தில் சாலோக சாமீப சாரூபப் பதவி முத்திகளைப் பெறுவோரும், அப்பதவியைத் தந்த பரமேசுவரனும் இருவரா? இருவரல்லரா? இரண்டு பொருள் இரண்டறுதல் எங்குமில்லை. இங்ஙனமாக வெற்றுரையால் வாய்ப்பந்தர் போடுவதில் யாது பயன்? இரண்டு பொருளில்லாமற்போனால் பெறுவானும் பேறு மின்றி மோக்ஷமென்பது சொல் மாத்திரையாய்ப் போமென்று சொன்னதால் மோக்ஷமென்பது பெறுவானும் பேறு மிருக்கவேண்டுமென்றாகின்றது. பெறுவான் உயிர், தருவான் சிவன், பேறு ஆநந்தம். ஆநந்தத்தைச் சிவன் தர உயிர் பெறுகிறது. ஆநந்தமென்பது பொருளன்று, குணம் அதினுஞ் சொருபகுணம். சொருப குணத்தைச் சிவன் எப்படித் தருவான்? உயிர் எப்படிப் பெறும்? குணம் அதினுஞ் சொருபகுணம் கொடுக்கத்தக்கதுமன்று, பெறத்தக்கது மன்றே. இவ்விஷயம் இதற்குமுன் விரிவாய்ப் பேசியிருக்கின்றோமாகலின் அதுவே இதற்கும் மறுப்பாம். இரண்டறுதல் விஷயம்

"துவித சைவரே மாயாவாதிகள்" என்ற நூலில் 43, 44, 45, 49, 50, 51, 52, 53, 54, 55, 56, 57, 58, 59, 60-வது பக்கங்களில் பேசப்பட்டிருக்கின்றமை காண்க.

சீவன் கற்பிதமான அபாவப்பொருள் என்பதற்குப் பிரமாணம்:—

பிரமகீதை முண்டகோபநிடதம்.

தற்பரனுருவஞ் சித்தேசதற்பரனிடையேயக்
கற்பித சீவன்றானுமதானக்காலந்தச். (உசு)

இலிங்கபுராணம் தியானவிதி.

விரிந்த பூதங்களினேடு விளம்பிந்தியங்கள் தத்துவங்கள்
திருந்தா அகங்காரத்தினெடுசெறிமுக்குணங்கள் மாத்திரைகள்
பொருந்துமாயை சீவ னிவைபொய்யாம் யாமே பொய்யின்றி
யிருந்தெவ்விடத்துநிலைபெறுவோ மதனல்தானுவெனஇசைப்பார். (ளுக)

## தான் என்பதின்பொருள்.

"முத்தி நிலையில் தானென்பதற்குப் பொருள் ஜீவனல்ல வெனின், பந்த நிலையில் அதற்குப் பொருள் யாது?"

என்றூர்.

திருமந்திரம் ஞானதுருதரிசனம்.

திரிமலந்தீர்ந்து சிவனவனுமே. (ச)

ஷை நின்மலாவத்தை.

தானே சிவமானதன்மைதலைப்பட. (கக)

தானவனுகும்சமாதிகை கூடினல். (கசு)

ஷை முப்பரம்.

நம்பிய சீவன் பரம் சிவனுய் நிற்கும். (ரு)

ஷை முச்சூனியம்தொந்தத்தசி.

சீவன் பரசிவனுமே. (சு)

என்று முள்ள பிரமாணங்களினுல் பந்த நிலையிலுள்ள சீவன், முத்தி நிலையில் சிவமாய் விளங்குகின்றுன்என்று கொள்ளப்படுதலின், தான் என்பதற்குப் பொருள் பந்தநிலையில் சீவன் என்றும், முத்தி நிலையில் சிவம் என்றும் பெற்றுமென்க. இஃதறியாது 'பந்த நிலையில் அதற்குப் பொருள்யாது?' எனல் என்னை? பந்தம் நீங்கி முத்தியில் சீவன் சிவனுகவே யிருந்தானென்பதற்குப் பிரமாணம் இன்றுக, இவர் 'முத்தி நிலையில் தானென்பதற்குப் பொருள் சீவனல்லவெனின்' என்று கூறுதல் பொருத்தமாமோ?

"பிரமமெனத் துணிந்த தன் சொரூபம் ஞான மாயின், அஞ்ஞானம் பழுத் தொழுகுவானேன்?"

என்றூர். தன தெதார்த்த சொரூபம் பிரம மென்று தெளிந்து சீவன் முத்தி நிலையில் நின்றபோது அஞ்ஞானம் பழுத்தொழுகுவ தின்றென்றும், நில்லாத போது அஞ்ஞானம் பழுத் தொழுகு மென்றும், சீவன் என்பது

எதார்த்த சொரூபத்தில் கற்பிதமா யிருக்கிறதென்றும், கற்பித சொரூபமா யிருக்கிற சீவனது அறிவறியாமை பிறப்பிறப்பு முதலியன எதார்த்தசொரூபத்தைப் (கானல் நீர் கானலைப் பரிசியாமைபோல) பற்றுவதின்றென்றும், அஞ்ஞானம் எதார்த்த சொரூபத்தில் கற்பிதமா யிருக்கின்றமையின், அவ்வஞ்ஞானம் பழுத்தொழுகுவதினால் அச்சொரூபத்திற்கு யாதும் பாதக மின்றென்றும் தெளிக.

"தான் சுத்த அறிவாயின், தனக்குக் கட பட வறிவு தோன்றுதற்குத் தேகேந்திரியத்துணை யேதுக்கு? கடபடவறிவு தோன்றவேண்டிய ஆவசிய கந்தா னென்னை?"

என்றார். தான் என்பதற்குப் பொருள் பந்தத்தில் சீவன் என்றும் முத்தியில் சிவம் என்றும் முன்னரே கூறியுள்ளே மாதலின், ஈண்டுச் சுத்த அறிவு என்பது சிவம் என்றாயிற்று. ஆகவே, சுத்த அறிவான சிவத்திற்குக் கடபடவறிவு தோன்றுவ தின்றென்றும், அச்சிவத்திற்குத் தேகேந்திரியங்களில்லை யென்றும், அசுத்த அறிவான சீவனுக்கே கடபட வறிவு தோன்றும் என்றும் அறிக. இஃதறியாது பயனற்ற வார்த்தைகளை யெழுதிப் பக்கத்தை நிரப்புவதினால் வரும் பயன் யாதோ? சுத்த அறிவான சிவம் அல்லது ஆத்துமா தேகேந்திரியங்களினது உதவி யின்றியே விளங்குகின்றதென்பது

பிரமகீதை ஐதரேய உபநிடதப் பொருளின் சேடமுந்
தைத்திரிய உபநிடத தாற்பரியமு முரைத்த அத்தியாயத்தில்

"தன்னதொளியாற்றான் விளங்கப் படுவா னான்மாவெனத் தருவான்"
என்றுள்ளதனால் அறிக.

இது விஷயத்தைப் பற்றி விரிவாய் "பதிபசுபாசவாதம்" என்னும் நூலின் 23, 24, 25 வது பக்கங்களிற் காண்க.

"ஆன்மாத் தனித்துநிற்கும் இயல்பின தன்று. அது பந்தத்தில் மலமாயாதிகளையும், முத்தியில் சிவத்தையும் பற்றி நிற்பது கண்டீர்" என்றார். இதைப்பற்றிச் சிறிது பேசுவாம். சிவஞானபோதம் 4 வது சூத்திரவுரையில் சிவஞானசுவாமிகள் "வியாபக வயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்" என்று கூறி யிருக்கின்றாரன்றோ? ஆணவ மலமானது அணுத்தன்மைப்படுமாறு செய்வதன்முன்னர் வியாபகவுயிர் பந்தத்தைப் பற்றி நின்றதா? சிவத்தைப் பற்றி நின்றதா? ஆணவ மலமே மூல மலமாகலின், ஆணவமலத்தின் சம்பந்தமின்றி யிருந்த வியாபக வுயிர், பந்தத்தில் ஆணவ மலத்தோடு கூடிய மல மாயாதிகளைப் பற்றுவதற்கு எது வின்று. அந்த வியாபக வுயிர் சிவத்தைப்பற்றி நின்றதெனின், ஆணவ மலம் பற்றுவதற்கு எது வின்று. பற்றுமெனின், சரியையாதிகளைச் செய்து அதனால் சித்த சுத்தியையும் சாதனசதுஷ்டயத்தையு முற்றுப் பின்னர்க் கேட்டலாதிகளைச் செய்து அதனால் சாட்சாத்காரம் வாய்த்து முத்தியில் சிவத்தைப்பற்றி நின்ற வியாபக வுயிரையும் ஆணவ மலம் அணுத்தன்மைப் படுமாறு செய்யு மாகலின் அது முத்தி யாகாது. ஆகாமற் போகவே வியாபக வுயிர், ஆணவமலம் அணுத்தன்மைப்படுமாறு செய்வதற்குமுன்னர்ப் பந்தத்தையும் சிவத்தையும் பற்றாது தனித்து நின்றதென்பது அவர் கூற்றால் நன்கு விளங்க, இவர் அஃதறியாது 'ஆன்மாத் தனித்து நிற்குமியல்பினதன்று' என்று கூறல் தெரியாமையாம். சீவான்மாவை ஆணவமலம் இடையிற் பற்றியதெ

ன்று பொருள் படமொறு ஓரிடத்திற் கூறி மற்ருேரிடத்தில் சீவான்மாவுக்கு ஆணவ மலம் அநாதியா யுண்டென்று இவரது நூல் கூறுதல் முரண்பட்ட சித்தாந்தமாமென்க. சீவாத்துமாஎன்று கூறியபோதே பந்தத்துவம் கொள்ளப்படுதலின், சீவான்மாத் தனித்து நிற்க அதைப் பந்தம் போய்ப் பற்றிய தென்பது தவறினும் தவருகும். முத்தியில் சீவான்மா சிவத்தைப்பற்றிச் சிவமாகா திருக்கிருன் என்பது அவைதிக்க் கொள்கையே யல்லாமல் வைதிகக் கொள்கை யன்ருகும். அன்ருகவே பந்தத்தி லுழலுஞ் சீவான்மா முத்தியில் திரிபுடி யற்றுச் சிவமாய் விளங்குகின்ருனென்பதே வைதிக சித்தாந்தமாமென்க.

## சிவலோகத்தைப்பற்றியது.

"சிவலோகம் அநித்தியமெனின், சிவனுர் தங்குவதற்கு இட மில்லாமற் போகும். போகவே, சிவனுரும் அநித்யப் பொருளாய் விடுவர். இப்படியும் சேரழிந்து கெடுவோருண்டோ? சிவலோகம் பிரகிருதி காரியமாயின் அழியும். அங்ஙனமின்றி அருள்வடிவமாக நிலேத்தலின், அதனிடத்தி னீவிரேற்றிய தூஷணம் நிஸ்புருஹமாம்." என்ருர்.

சிவலோகம் அநித்தியமுடைத்து என்பது பிரதிஞ்ஞை,

(ஆண்டுள்ளோர்க்கு) திரிசியமா யிருத்தலின் என்பது ஏது,

யாது யாது திரிசியமுடைத்து, அது அது அநித்தியமுடைத்து,

கடம்போல என்பது உதாரணம்

என்னும் அனுமானப் பிரமாணத்தானும்,

சூதசங்கிதை வேதாவிரோத முரைத்த அத்தியாயம்.

......துவிதப் பிரபஞ்சம் காணப்படலானும் குறையாப்பரத்தாரோபிதமாய்க் குலவலானுங் கற்பிதமே. (உ)

தேவிகாலோத்தரம்.

தோன்றுவ தெல்லாம் அசத்து.

சிவஞானபோதம்.

உணருரு அசத்து.

என்னும் சத்தப் பிரமாணங்களினுனும் இவரது மதஸ்தரான சிவாக்கிரக யோகியார் சிவஞான சித்தி 8 வது சூத்திரம் 22 வது செய்யுளுரையில் "சரியையாதி அநுஷ்டானங்களும், அதனுல் அடையும் சாலோக்கியாதி முத்திகளும் அநித்திய மாகையால் அநித்தியம்" என்று கூறுதலானும் சிவலோகம் அநித்தியமாமென்க. அநித்தியமாகவே 'சிவலோக மநித்தியமெனின் சிவனுர் தங்குவதற்கு இடமில்லாமற் போகு' மென்பது அறியாமையிலும் மிகு அறியாமையாகும். சர்வ சங்காரகாலத்தில் சிவலோகம் அழிந்துவிடுகின்றபோது சிவனுர் யாண்டுத் தங்குகிருரென்னுங் கேள்வியை மனதில் வைத்துக்கொண்டு இவ்வாறு எழுதினுரென்று ஊகிக்கின்ருேம். இவர், துரிய சிவத்தின் வியாபகத்தில் விளங்கும் சிவ லோகத்தையும், அதிலெழுந்தருளி யிருக்கிற கண்டமான சகுண சிவனுரையும் பொருளாய்க் கொண்டாரே யன்றி, பரிபூரண நிர்க்குண துரிய சிவத்தைப் பொருளாய்க் கொண்டாரில்லே. இவர் சிவம் என்பது அவயவங்களோடு கூடியதென்று கொண்டு

பெரிதும் மயங்கிப்போனார் பாவம்!! 'சிவலோக மநித்திய மெனின், சிவனார் தங்குவதற்குஇடமில்லாமற்போகும்' என்று கூறியதினாலே காலதேச வஸ்து பரிச்சேத மில்லாத சிவத்தைக் காலதேச வஸ்து பரிச்சேதமுள்ள கண்டப்பொருளாக்கிவிட்டார். இத்தகைய அஞ்ஞானம் பிடித்த அந்தகராகிய இவர் மெய்ஞ்ஞானக் கண்ணுள்ள அத்வைதிகளோடு வாதஞ்செய்ய வரல்மின்மினி சூரியனுடன் போர் செய்ய வருவதுபோலாம்.

இவர்கூறிய சிவலோகமும் சிவனாரும் மாயாசகிதத்திற்றான் என்பது

சிவபுராணம் ஞானசங்கிதை.

"துவித விஷயமான புத்திபேதம் அஞ்ஞானமாம். (அவித்தையினாலாகியதாம்) அன்னியத்திற்கு (ஜகத் விலட்சணமாகிய பிரமத்திற்கு) இரண்டாவதில்லை. தரிசனங்களெல்லா (வைசேஷிகாதி சாஸ்திரங்கள்) வற்றிலும் காணப்படுகின்ற துவிதமத புத்திபேதம் அவித்தையினா லாகியதாம்"

என்றும்,

வாயுசங்கிதை தேவர்கட்குச் சிவாகமமளித்தது.

"மன்னு மவ்வியத்தந்தன்னில் நம் சிவன்றான் முன்னைநாள் வந்தனன் வந்து." (உ)

என்றும்,

சூதசங்கிதை பஞ்சப்பிரமவிசாரம்.

"பரசிவன் மாயையினாலே யைம்பிரம வுருவானான்" (கஉ)

என்று முள்ளவாற்றால் தெளிவுற விளங்கும். விளங்கவே மாயாசகிதத்தையே பொருளென மருண்டு மாயாவாதிகளாய் நின்று வாழ்நாளை வீணாக்குகின்றனர்கள் பூர்வபட்சிக ளென்பது பசுமரத்தாணியாமென்க. சிவலோகத்தில் ஆண்டானும் அடிமையு முண்டென்பது பிரசித்தமாகலின் அது துவித வடிவமா யுள்ளதென்பதற்கு யாதுஞ் சங்கை யின்றாம். யாண்டு துவிதமுண்டோ ஆண்டு மாயா சம்பந்த முண்டென்பது 'துவிதவிஷயமான புத்திபேதம் அஞ்ஞானமாம் (அவித்தையினா லாகியதாம்) என்று சிவ புராணங் கூறுதலினாற் பெறப்படுதலின், அச்சிவலோகம் மாயா சம்பந்தமுற்றதென்றறிக. ஆகலின் இவர் சிவலோகத்தைப் பிரகிருதி காரிய மன்றென்றும் அருள்வடிவமாக நிலைத்தலின் என்றும் கூறுவது வெற்றெனத் தொடுத்தலாம். சிவலோகம் அருள் வடிவமாக நிலைத்தல் எங்ஙனம்? அருள்என்பது சிவனாரது சிற்சத்தியன்றா? அச்சிற்சத்தி சிவனாரைவிட்டுத் தனித்திராதாக லின், அது அசித்மயமான சிவலோக மாயிற்றென்பது பொருந்தாமொழியாமென்க.

## சிவசீவர்களைப்பற்றியது.

"உமதுமதம் சிவம் சீவனாயும், அந்தச்சீவன் மீண்டும் சிவமாயும், அது மீண்டுஞ் சீவனாயும் புரண்டுகொண்டுவரு மஸப்பியத்தைப் போதிப்பதென்றொதுங்கி வாழக்கடவீர்."

என்றார். இவர் சிவம் சீவனாவதை வித்து விருட்சமாவதைப்போல் வைத்துக்கொண்டு 'அந்தச்சீவன் மீண்டும் சிவமாயும், அது மீண்டும் சீவனாயும் புரண்டுகொண்டு வரும் அஸப்பியத்தைப் போதிப்ப' தென்கிறார். வேதாந்த சித்தாந்தம் சிவம் சீவனாவது வித்துவிருட்சம்போலென்று கூறினால்

அது இவரது கண்டனைக்குட்பட வேண்டியதேயாம். அவ்வாறன்றி, அது கயிறு அரவாவதுபோல் சிவம் சீவனாகின்றது என்று விவர்த்தமாகக் கூறு கின்றமையின், இவரது கண்டனை பயனற்றதும் அறியாமையுமாம். அர வென்கிற கற்பனை கழிய யதார்த்தமாய் நின்ற கயிறு மீண்டும் அர வாகா மைபோல், சீவன் என்கிற கற்பனை கழிய யதார்த்தமாய்நின்ற சிவம் மீண் டும் சீவனாவ தெங்ஙனம்? இஃதறியாது ஒன்றை யொன்றாகத் திரி புணர்ச்சிகொண்டு 'புரண்டுகொண்டுவரும்அஸப்பியத்தைப்போதிப்பதென்றொது ங்கி வாழக்கடவீர்' என்று கூறுதல் விசாரணை யில்லாமையாம்.

இவர் கூறிய குற்றம் வேதாந்த சித்தாந்தத் தின்றெனக் காட்டினும். இனி இதுபோன்ற குற்றம் இவர்மதத்திற்கு முண்டென்பதைத் தெரிவிப் பாம்.

சிவஞான சுவாமிகள் சிவஞான போதம் ச-ம் சூத்திர வுரையில் "வியா பக வுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின், ஆணவமென்னும் பெயர்த் தாய்"என்று கூறியிருக்கின்றாரன்றோ? 'வியாபக வுயிரணுத்தன்மைப்படுமாறு செய்தலின்' என்றதினால் உயிர்வியாபகமா யிருந்த தொருகாலம், அணு வாயிருந்த தொருகாலம் என்று பெறப்படுகின்றது. வியாபகமாயிருந்த உயி ரை ஆணவமலம் பற்றியதற்குக் காரண மில்லை. காரணமின்றாகவும் அந்த வியாபக வுயிரைப்பற்றி யணுத்தன்மைப் படுமாறு செய்த ஆணவமலம் இவ ரது சித்தாந்தப்படி மோட்சமடைந்த அவ் வுயிரையும் மீண்டும் பற்றியணு த்தன்மைப்படுமாறு செய்யாதென்பதற்கு ஏது வின்றாம். இன்றாகவே இவ ரதுமதத்திற்றான் உயிர் வியாபகமாயும் அணுவாயும், அதுவேமீண்டும்வியா பகமாயும் அணுவாயும், பின்னரும் அதுவே வியாபகமாயும் அணுவாயும் வருமென்பது பெறப்பட்டது. பெறவே, இவரது மதத்தில் முத்தியென்ப தொன்றின்றென்பது வெளிப்படையா மென்க

"சிவனைச் சத்துச் சித்து ஆநந்தப் பொருளென்றது (பறையன்) பொன்ன னென்பவன் தன்னைப் பொன்னப்பனென் றுயர்த்திக்கொண்டு அதுவும் போதாமல் முதலியார் - அவர்கள் - சமுகமென்று சிறப்பித்துக் கொண்டது போலாம்."

என்றார். வேதாந்த சாஸ்திரங்கள்

பஞ்சதசப்பிரகரணம் நாடகதீபிகை.

உபாதிகளிற் பிரதிபிம்பத்துச் சரீரங்களிற் பிரவேசித்து விவகரிக்கின்ற சிதாபாசன்றான் சீவன்.

என்றும்,

வேதாந்தசூளாமணி.

புன்னெறி கொள் குடும்பியாய் வலியறு மோர் சித்துப் போலியாஞ் சீவன். (கககக)

என்றும்,

ஞானவாசிஷ்டம் பாசவிபாசன்கதை.

ஆசைவன்பாசத்திரளினாற் கட்டுண்டரும்பிணியீக்கடிக்கணுங்கி
யேசுறுபோகக்கதைகளான்மொத்துண்டிச்சைமுட்சோலினுலலைந்து
காசுறு கருமச்சேற்றிலே யழுந்திக் கடுஞ்சகக்காட்டிலேசுழன்று
வீசுமாமோகத்தளிர் நிழற்றுயிலும்வீரனேசீவனமெருது. (உ)

என்றும் சீவனைப் பிரதி பிம்பனென்றும், சித்துப்போலியென்றும், துக்கியென்றும் கூற, அதற்கு மாருக இவர், சீவனைச் 'சத்துச் சித்து ஆனந்தப்பொருளென்றது.........போலாம்' என்று கூறி, வேதாந்திகளை மறுக்கப் போவது "குதிரையே யுன் கொம்பை நான் வெட்டிவிடுகிறேன் பார்" என்று கூறும் புத்திமான் கூற்றுக்கு இனமாமென்று விடுக்க.

வேதாந்த சித்தாந்தத்தி லில்லாத விஷயங்களை யெல்லாம் அதின் சித்தாந்தமாக வைத்துப் பேசும் இப்புத்திசாலியின் புத்தியே புத்தி! வேதாந்த சித்தாந்தம் சீவனைப் பிரதிபிம்பனென்றும், சித்துப்போலியென்றும், துக்கியென்றும் கூறுகின்றதென்று கூறினே மாதலின்,அதுபற்றி இவரது கண்டனம் அதில் செல்லுதல் இன்ரும். இன்ருகவே, அக்கண்டனம் யாண்டுச் செல்லுமென்னின்: அது இவர் மதத்தவரில் ஒரு சாராரான சிவசமவாதிகள் சீவனுக்கிலக்கணம் சத்துச் சித்து ஆநந்த மென்று கூறுகின்றமையின் அவர்கள்பாற் செல்லுமென்க.

## வியாபக வியாத்தியைப்பற்றித் தவருய்ப்பேசினுரென்பது.

"சைவ சித்தாந்தத்தில் வியாபக-வியாத்தி - வியாப்பியங்களைக் கூறி, அவைகளுக்குக் கடல் நீர் உப்பு என்பவைகளை யெடுத்துக் காட்டி, அதற்கு மேல் பதிபசுபாசம் என்பவைகளைத் தாபிக்கையால் கடல் என்னும் சொல்லுக்கு நீரில்லாவிட்டால் பொருளேயில்லாமற் போவது போலப் பசு வில்லாவிட்டால் பதியே யில்லாமற் போவதாக எம்மவர் கூறுகின்றனர். இதற்கேதேனுங் கதியுண்டா?"

என்று அத்வைதியார் வினவியதாக வரைந்து, அதற்கு விடை

"இப்படி யுளறிய 'அத்வைத தூஷண பரிகார' நூலாரைத் 'தினகரன்' என்பவர் நீலலோசனியில் செவ்வையாயலங்கரித்திருக்கின்ருர். அதில் விஸ்தாரமாய்ப் பார்த்தறியலாமாயினும், ஈண்டுமுக்கியமான இரண்டொரு விஷயத்தை வெளிப்படுத்தி உமது மயக்கறுத்துவோம்"

என்ருர்.

அத்வைத தூஷண பரிகார மென்னும் நூலின் மேல் தினகரன் என்பவரும், சோம-நாயகரென்பவரும் நாகைநீலலோசனியென்னும் சமாசாரப்பத்திரிகையில் சிற்சில விஷயத்தைப்பற்றி மாத்திரம் பேச, அதற்கு "அத்வைத தூஷண பரிகார" மென்னும் நூலுக் காசிரியரான "இந்து" என்பவரால் எழுதப்பட்டு "அவைதிக சைவசண்டமாருதம் அல்லது துவித சைவர் விடைகளின் மறுப்பு" என்னும் பெயரினையுடையதாய் நூற்றுத்தொண்ணூறு பக்க முள்ளதாய் இப் பூர்வ பட்சியா ரெழுதிய ஆபாச வினு விடை வெளிப்படும் சில மாதங்களின் முன்னரேயே வெளிப்பட்டதாயுள்ள புத்தகத்தைப் பற்றி யேதும் பேசாது பூர்வபட்சமாய் மறுக்கப்பட்ட விஷயத்தை 'தினகரன் நீலலோசனியில் செவ்வையா யலங்கரித் திருக்கிருர்' என்று பொய் பேசி நாணயத்தை யிழத்தல் எவ்வளவு வெட்கமான காரியம் பாருங்கள்! இவரிங்குக் கூறும் இரண்டொரு விஷயமும் அதில் செவ்வனே கண்டிக்கப்பட்டனவாகலின், அதுபற்றி யீண்டு இதற்கு மறுப்பெழுதுதல் அநாவசியகமாயினும் இப்புஸ்தகத்தைப் படிப்போரது திருப்திக்காகச் சிறிது பேசுவாம்.

"வியாபகமாதி விரிக்குங்காலை-வியாபக மேலிடு நிறைவாமென்ப-வியாத்தி சமநிறைவாகும் விளம்பின்-வியாப்பிய மொன்றின் மிடைந்த நிறைவே-வியாபகங் கடலே வியாத்தியங்நீரே-வியாப்பியமுவரென விளக்கிய நூலே' என்றார் பிரமாண நூலார். இதில் வியாபகம் மேலிடு நிறைவு என்று பெறப் பட்டது. அது நீரை யாதரிக்கு நிலைக்களமான இடமாம். அந்த இடந்தானே கடலென்னும் பெயர் பெற்றது. இந்த இட மில்லாதபோது நீர் நிற்ப தெங்கே? நீரைக் கடலென்று விபரீதப்படுத்திக்கொண்டு நீவிர் தொடுத்த வழக்கு அபஜயத்தை யடைந்தது"

என்றார். இதில் கடல் வியாபக மென்றும், நீர் வியாத்தி யென்றும், உவர் வியாப்பிய மென்றும் பெறப்பட்டன படவே கட லென்னுஞ்சொல்லுக்குப் பொருள் இடமென்று ஏற்பட்டது. கடலென்னுஞ் சொல்லுக்குப் பொருள் இடமே யாயின், யாண்டு யாண்டு இடமோ ஆண்டாண்டுக் கடலென்னும் வியாத்தி நிகழ வேண்டும். நிகழாமையின் (சிறி திடத்தி லன்றி வேறிடத்தில் நிகழாமையின்) அவ்வியாப்தி யென்னுங் குற்றத்திற்கு இடனு மென்க. இடமே கடலாயின், இடத்தை யெல்லாம் கடலெனல்வேண்டும். அவ்வா றின்மையின் கடலென்னும் சொல்லுச்குப் பொருள் நீரின்மிகுதி யேயாம் என்பது திண்ணமா மென்க. பூர்வபட்சியார் கூற்றின் வண்ணம் கடலென்னுஞ் சொல்லுக்குப் பொருள் இடமே யாயின், அப்போது

அப்பர் சுவாமிகள்

"கற்றுணைப் பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே"

என்று கூறியதில் 'கடலிற் பாய்ச்சினும் என்பதற்கு நீரிற் பாய்ச்சினும் என்னாது இடத்திற் பாய்ச்சினும் என்றும்,

ஔவையார்

"திரைகடலோடியுந் திரவியந்தேடு."

என்று கூறியதில் 'கடலோடி' என்பதற்கு நீரில் ஓடி என்னாது இடத்தில் ஓடியென்றும்,

திருக்குறள் கடவுள்வாழ்த்தில்

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்றிருப்பதில் 'கடல் நீந்துவர்' என்பதற்கு நீரை நீந்துவர் என்னாது இடத்தை நீந்துவர் என்றும், கடல் சுவர வேல்விட்டான் என்பதில் கடல் சுவர என்பதற்கு நீர் சுவர என்னாது இடஞ் சுவர வென்றும் பொருள் கொள்ளுதல் தவறாய் முடிதலினால் கடலென்னும் சொல்லுக்குப் பொருள் நீர்த் திரளின் மிகுதியே என்று கொள்ளப்படுதலின் கடல் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் இடம் என்பது தப்புரையினும் தப்புரையாமென்று கூறி மறுக்க. மறுக்கவே, பூர்வபட்சியார் கூறிய வியாபகமாதி இலக்கணம் மாறுபட்டுப் போயிற்றென்க.

"குளம் வெட்டினேன்—கிணறு எடுத்தேன்—ஏரி யுண்டாக்கினேன்-குளத்தில் நீரில்லை—ஏரியில் ஜலமில்லை—ஏரிவற்றியது—பாழ்த்த கிணறு என்னும் பிரயோகங்களால் நீரானது கடலன்றெனச் சித்தாந்தமாயிற்று. 'அற்றகுளத்தி லறு நீர்ப் பறவைபோல்' என்னு மான்றோர் வாக்கியமும் இதை நிறுத்தியது கண்டீர்"

என்றார். ஏதேனும் ஒரு சபையை யுண்டாக்கினேன் என்று ஒருவன் சொல்வானேயானால் உண்டாக்கினதற்குமுன் சபை யிருந்ததென்று பொருள்? உண்டாக்கிய பிறகு உண்டான சபையை முன்பு சொல்லுதல்போல வெட்டியபின் உண்டாகும் குளத்தை முன்பு சொல்லுதலாம். 'குளத்தில் நீரில்லை' என்றது எங்ஙனமெனின் முதல் இடை கடைச் சங்கத்தில் அவயவிகள் இல்லையென்று ஒருவன் இப்போது சொல்வானேயானால் சொல்லும் இப்போது சங்கம் இருக்கின்றதென்று பொருள்? சங்கமென்பது அவயவிகளின் கூட்டத்திற்குப் பொருள். அவயவிகளைத்தவிரச் சங்க மென்பதற்குப் பொருளில்லை; இதுபோல நீரைத்தவிரக் குளமென்னுஞ் சொல்லுக்குப்பொருளில்லை. அப்படியிருந்தாலும் அவயவிகளிருந்தபோ துண்டாகிய சற்பிதப் பேரை அவயவிகளில்லாதபோதும்சொல்வதுபோலநீரிருந்தபோதுண்டான பேரை நீரில்லாதபோதும் சொல்லுகின்றோம். இது முன்னிருந்த நிலைமையைத்தெரிவிப்பதேயன்றிப் பொருளிருந்தன்று.

"கடலினது ஆதரவில் ஜல மிருப்பது போலச் சிவத்தினது ஆதரவில் ஜீவனிருப்பதை வந்திக்கும் எம்மை நிந்தித்து ஜீவனையே சிவமென்று பொங்கி வழியு நுமக்கே நீரைத் தவிரக் கடலில்லையென்னும் அஸங்காத்மவாதம் பயன் பட்டது கண்டீர்"

என்றார். மேலெழுதியவற்றால் நீரைத் தவிரக் கட லென்னுஞ் சொல்லுக்குப் பொருளின்மை பெறப்பட்டமையின், இவர் சித்தாந்தப்படி ஜீவனைத் தவிரச் சிவத்திற்குப் பொருளின்றென்பது பெறப்பட்டது. படவே, இவர் ஜீவனையே சிவமென்று கருதிப் பெரிதும் மயங்கிப் போயதோடு நாஸ்திகராயும் நின்றார் என்பதாம்.

யாம் கடல் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் நீர்த்திரளின் மிகுதியேயென்று கொண்டு, கடல் ஸ்தானத்தில் சிவத்தையும், அதிலுள்ள அலையாதி ஸ்தானத்தில் சராசர வுலகையும் கொள்ளுதலின், எமது சித்தாந்தம் அசங்காத்ம வாதமாவது ஓர் போது மின்றென்க.

## அபேதமுத்தியைப்பற்றியது.

" மாயாவாதிகளை ஜன்ம தரித்திரரென்று யாம்பிரஸ்தாபித்தது வாஸ்தவம். தரித்திர மென்பது செல்வ மில்லாமை ! திருச்சிற்றம்பலமேய செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே என்னுந் திருவாக்கால் செல்வ மினைத்தென்றுவிளங்கியது" என்றார். அத்வைததூஷண நிக்ரக நூலானது பூர்வபட்சியார் "இன்னோர் சாலோகமாதிகளைக் குறை கூறுவது ஜன்ம தரித்திரனொருவன் குபேரனது பதவியைக் குறை கூறியதுபோலாம்" என்று கூறியதற்கு மறுப்பாக "அத்வைதிகள் ஜன்ம தரித்திரர்கள்தான். முத்தி நிலையில் ஏகபிரமத்திற்கு மற்றொரு பெயராகிய ஏகாத்துமாவாக விளங்கி, அவ்வேகாத்துமாவுக்கு அன்னியமான தன தானிய மனைவி மக்களாதி ரூபமாயுள்ள பிரபஞ்சத்தை மித்தையென்றொதுக்கி, மாயாசம்பந்தமுள்ள ஞாதருஞானஞேய துவிதப் பிரபஞ்சம் தம்மிடம் விளங்காதவாறு பிரகாசிக்கின்றவர்களாதலின்" என்று முத்திநிலையைப்பற்றிப்பேச, இவர் அம்முத்தி யுடையதற்குச் சாதக நிலையான சிவன் கழலையேத்துஞ் செல்வத்தை யெழுதி செல்வமினைத்தென்று விளங்கியது என்றுகூறல் சாதகநிலை யின்னது சாத்திய நிலை யின்னது என்று அறியாதார் கூற்றிற் சேர்ந்ததன்றி மற்றியாதாம் ? செல்வன் கழலை யேத்துஞ்செல்வமே முடிந்த செல்வமாய்த் திருஞானசம்பந்த சுவாமிகள் கூறியிருப்பாராயின், அவரே

"திகழ்ந்த மெய்ப் பரம் பொருள் சேர்வார்தாமே தானுகச் செயுமவன் உறையுமிடம்"

என்று சிவமாய் விளங்கும் அபேத நிலையைக்கூறுவரா? அதுவே செல்வமாயின்

நிராலம்போபநிஷத்.

மோட்சமாத்திரம் வேண்டுமென்கிற சங்கற்பமேபந்தம்.

என்றும்,

திருமந்திரம்.

ஆசையறுமின்களாசையறுமின்கள்
ஈசனோடாயினு மாசையறுமின்கள்.

என்றும்,

திருவள்ளுவர் குறள்.

"வேண்டாமையன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டுமஃதொப்பதில்"

என்றுங் கூறுவானேன்? இதனுல் சிவமாய் விளங்கும் அபேதமான பெரிய செல்வத்திற்கு ஆண்டான் அடிமையாய் விளங்கும் பேத மான சிறிய செல்வம் சாதகமா மென்பது திண்ணமாமென்க.

"முத்தியென்பது முத்திதருவானையும் பெறுவானையுமன்றியமையாது. பெறுவானும் பேறு மில்லாதபோது அது முத்தியாகாது"

என்ருர். இதுபற்றி முன்னர்ப்பேசியிருப்பினும் ஈண்டுஞ் சிலபேசுகின்ரும். தருவானும் பெறுவானுமாயுள்ள முத்தி

சூதசங்கிதைசாந்தோக்கிய உடநிடதம்.

எய்ப்பின் மாயையாற் பேதமாகித் தோன்றும். (ர)

என்றும்,

ஷை பஞ்சாக்கரம்.

மாயையாற் பேதநடையராகி, யியங்குறுசீவர்கள். (அ)

என்று முள்ள பிரமாணங்களின்படி மாயா சம்பந்தமுள்ள துவித நிலையாயிருத்தலின், அது பதமுத்தியாமே யன்றிப் பரமுத்தி யாகாது. மாயாசம்பந்த முள்ளதாயுந் திரிபுடி யுள்ளதாயுமுள்ள பதவி முத்தியைப் பர முத்தியென்று பெரிதும் மயங்கிப்போய துவிதப் பிராந்தர்கள் துவிதமற்ற பரமுத்தியை 'பெறுவானும் பேறுமில்லாதபோது அது முத்தியாகாது' என்று பிரமாணமின்றி வாளா கூறி யிகழ்வது முத்தியி னுண்மையை அறியாமையாம். எங்கே தருவானும் பெறுவானும் உண்டோ, அங்கே விருப்பு வெறுப்பு முதலியன குணங்களும் இவற்றை யுண்டாக்குவதற்கு ஏதுவாயுள்ள அவாவு முண்டாகலின், அவாவுள்ள விடத்தில் பிறவி யுருதென்பது பசு மரத்தாணி யுநம்.

முத்தியிலும் பேதமுண்டென்று கூறும் இத்தகையவரைப் பற்றித்தான்

பிரமகீதை முண்டகோபநிடதத்தில்

அபேதப் பொருள் கலர்கண்ணிற் றேன்றுதே. (உஎ)

என்றும்,

திருமாளிகைத்தேவரியற்றிய திருவிசைப்பாவில்

பேதவாதப், பிசுக்கரைக் காணுகண்வாய் பேசாதப் பேய்களோடே.

என்றும் இருக்கின்றனபோலும். பரமுத்தியென்பது தருவானும்பெறுவானு மில்லாது தானே தானய் (ஈண்டுத் தான் என்பது சிவம்) விளங்கும் பெற்றிய தென்பதைப் பூர்வபட்சியார் உணர்ந்தா ரில்லை பாவம்!! பரமுத்தியில் தருவானும் பெறுவானு மில்லையென்பதைப் பற்றியன்றூ

சூதசங்கிதை முண்டகோபநிடதத்தில்

நலமிகுமந்தஞானிநாமரூபாதிவிட்டுக்
குலவுவாரிதியிற்கூடுங்குரைபுனற்குடினையேபோ
விலகுறுபரசிவத்திலேகமாகுவனலன்றேன்
றலமலிகுலத்துதித்தோன்றூனுமெய்ஞ்ஞானியாவன். (உக)

என்றும்,

திருவாசகத்தில்

பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே.

என்றும் கூறப்பட் டிருக்கின்றனவென்க.

இதுநிற்க; சிவஞானசித்தி 11 ம் சூத்திரம் 11 வது செய்யுளில் "அவனுக்கிவனு மசித்தாமே' என்று சிவனை நோக்கச் சீவன் அசித்து அதாவது சடம் என்று கூறுதலின், சிவனை நோக்கச் சடமாகிய சீவன் சிவன் றருவதைப் பெறுவ தெங்ஙனம்? 'சிவன் தருவதைக் கல்முதலிய சடப் பொருள்கள் பெறு மெனின், சடமான சீவர்களும் பெறுவார்கள். கல் முசலியன பெருவென்பது அனுபவமாகவின் இவ்வாறே சீவர்களும் பெருரென்பதாம். இத்தகைய சுருதியுத்தி அனுபவமில்லா மதத்தைப் பிரமாணமாகக்கொண்ட இத்துவித சித்தாந்தி 'பெறுவானும் பேறு மில்லாத போது அது முத்தியாகாது' என்று பேசுதல் இயைபன்றென்பதாம்.

## பெண்டுபிள்ளைகள் மெய்யாகாவென்பது.

"பெண்டு பிள்ளைகள் பொய்யென்று யாம் சொல்வது நிலையாமை நோக்கியாம். பெண்டு பிள்ளை மித்தையென்றதுபோல அவர்களைக் கூடிச் சுகித்தலையும் மித்தையென்று நீவிர் புலம்புவதுண்மையாகையால்"

என்றூர். பெண்டுபிள்ளைகளென்பன பஞ்ச பூதக்கூட்டத்தா லாகிய வுடல்களையே யாம். அவை யிருந்து நிலையாமையா? இல்லாமலிருக்க நிலையாமையா? மண்ணினலாகிய கடம், மண்ணைத்தவிரத் தனக்கெனப் பொருளின்றி உபயோகத்திலிருக்கும்போதே பொய்யாய் நிற்றல்போன்று பெண்டு பிள்ளைக ளென்பனவும் தமக்கெனப் பொரு ளின்றி உபயோகத்தி லிருக்கும் போதே பொய்யா யிருக்கின்றனவாதலின், இருந்து நிலையாமையா யிருக்கின்றன வென்பது தவறும். உபயோகத்தி லிருக்கும் போதே பொய்யா யிருக்கின்றன வென்பதைப் பற்றியன்றூ தாயுமானவர்

"கடத்தை மண்ணெனல் உடைந்தபோதோ விந்தக் கருமச்சடத்தைப் பொய்யெனவிறந்தபோதோசொலத்தருமம்?"

என்று கூறியருளினார்? இதுபற்றி "அவைதிகசைவ சண்டமாருதம்" என்னும் நூலில் 11, 12 வது பக்கங்களிலும், தத்துவ வாதத்திலும், துவிதாத்துவித வாதத்திலும் மற்றும் பலவிடங்களிலும் விரிவாய்க் காண்க.

## ஆத்துமாவைப்பற்றியது.

"தேகாதிகளுக்கு வேறாக ஆத்மாவொன் றுண்டென்பது உமக்குச் சத்தப் பிரமாணத்தாலன்றி நேரனுபவத்தால் விளங்கியதோ? ஏகாத்ம வாதியாகிய உம்முடைய சகோதரன் (தேகாத்மவாதி) ஆத்மா இல் பொருளென்று வாதித்தலை நீரறியீர்போலும். தேகாத்மவாதி தேகத்தைக் காட்சிப் படுத்திச்சத்தப் பிரமாணத்தை வேண்டாமல் வெளிவருவதுபோல ஏகாத்மவாதியாகிய நீர் ஏகாத்மாவைக் காட்சிப்படுத்திச் சத்தப் பிரமாணத்தை யொதுக்கி வாழுமனுபவ நிலையுண்டேல், வெளிவந்து நில்லும் பார்ப்போம்"

என்றார். தேகாதிகளுக்கு வேறே ஆத்துமா வுண்டென்பது அத்துவிதிகளுக்குச் சத்தப் பிரமாணமானால் இவர்க் குண்டென்பது எப்பிரமாணத்தாலோ? தேகாத்துமவாதி தேகத்தைக் காட்சிப்படுத்திச் சத்தப் பிரமாணத்தை வேண்டாமல் வெளி வருவதுபோலப் பல ஆத்தும வாதியாகிய இவர் பல ஆத்துமாவைக் காட்சிப்படுத்திச் சத்தப் பிரமாணத்தை யொதுக்கிவாழுமனுபவ நிலையுண்டேல் வெளிவந்து நிற்கட்டுமே பார்ப்போம். ஏகாத்தும வாதிக்குச் சகோதரன் தேகாத்தும வாதியானால் பல ஆத்தும வாதிக்குமாத்திரம் அவன் ஏன் சகோதரனாகான்? ஏகாத்தும வாதிக்கும் தேகாத்துமவாதிக்கும் என்னசகோதரத்துவ மிருக்கிறது? ஏகாத்தமவாதி தேகத்துக்கு விலட்சணமாக ஆத்துமாவை யொப்பினவன்; தேகாத்தும வாதியோ அவ்வாறு ஒப்பாமல் தேகமே ஆத்துமாவென்பவன். இவ்விருவரும் நேர் விரோதிகள். இவ்விரோதிகளை யொற்றுமைப் படுத்தியது ஒற்றுமை யிலக்கணந் தெரியாமையாம். இவருக்கும் தேகாத்தும வாதியாகிய நாஸ்திகனுக்கும் ஒற்றுமையிருக்கிறது. அதனால் இவரும் நாஸ்திகரெனத் தாபிக்கப்பட்டிருக்கின்றனர். இவ்விஷயம் மாயாவாத சைவ சண்ட மாருதம் 174, 175 வது பக்கத்தில் வெளிவந்திருக்கின்றது. அதற்கு எதுஞ் சமாதானஞ் சொல்லாமலும், அதை நியாயத்தினால் விலக்கிக் கொள்ளாமலும் இருக்க நேர்ந்ததால் அது மனந் தாளாது பொறாமை மிகுந்து வயிறெரிந்து அத்துவிதிகளை நாஸ்திகனுக்குச் சகோதரரெனப் பொருத்தமின்றிக் கூறினார்.

ஆத்துமா வுண்டென்பவனும் ஆத்துமா வில்லை யென்பவனும் சகோதரரானால் கடவு ளுண்டென்பவனும், கடவுளில்லை யென்பவனும், மோட்ச நரகங்க ளுண்டென்பவனும், அவையில்லை யென்பவனும், பாவபுண்ணியங்க ளுண்டென்பவனும் அவை யில்லை யென்பவனும் ஏன் சகோதர ராகமாட்டார்கள்? இதனால் இவரது புத்தி உலக்கைக் கொழுந்தென விளங்குகின்றது. இவ் வொரு விஷயத்தில் மாத்திரந்தானா, ஒவ் வொரு விஷயத்திலுந் தான் இவரது புத்தி யுலக்கைக்கொழுந்தாயிருக்கின்றது.

ஆத்துமாவைக் காட்சிப் படுத்துமாறு கேட்பவர் யாவர்? ஆஸ்திகரா? நாஸ்திகரா? நாஸ்திகரன்றோ? இப்படிப்பட்ட பரம நாஸ்திகரைக் குறித்தன்றோ சிவஞானபோதம்

"உளதிலதென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புல னொடுக்கமறிதலின் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா." (௩)

என ஆன்மாவை அநுமானப் பிரமாணத்தினுல் அறியற்பாலதெனக் கூறியது? இத்தகைய கேள்வி கேட்கலாம், இத்தகைய கேள்வி கேட்கப் படாதென, இவ்வளவு தெரியாத இவரை அத்துவிதிகள் ஓர் சிறு துரும் பாகவும் மதிப்பரா?

## பிரமம் நானென்பது லட்சியார்த்தமான முத்திநிலையிலென்பது.

"பிரமம் என்ப தொன் றுண்டெனப் பெரியோர் கூறியவிடத்தில் நான்றான் அந்தப் பிரமம் என்று அஞ்சாது கூறிப் பிரமத் துவேஷிகளாய் வெளிப்பட்ட நம்மவர் பிரமஞானிகளாயிதெல் யாண்டுமெமையாதுகண்டீர்"

என்றார். எந்தப் பெரியோர் பிரமமென்பதொன்று உண்டெனக்கூறி னரோ அவரே முத்திநிலையில்

### கைவல்லியோபநிஷத்.

சூட்சுமத்திலும் அதிசூட்சுமமாயும் நித்தியமாயும் இருக்கிற பரப்ரம்மம் எதுவோ அது நீ; நீயே அது......சாக்ஷியாயும் சின்மாத்திரமாயு மிருக்கிற சதாசிவன் நான்.

### அமிர்தபிந்தூபநிஷத்.

அந்த ப்ரம்மமே நானென்றறிந்தால் ப்ரம்மமே யாகிறான் நிச்சயம்.

### மைத்திரேயோபநிஷத் ௩-வது அத்தியாயம்.

நித்தியனும் சுத்தனும் சதாசிவனுமிருக்கிறேன்......அவன் நானுக இருக்கிறேன்......பரமாத்துமாவாயுஞ் சிவனுமிருக்கிறேன்......நாச மற்ற பிரமமாயிருக்கிறேன்.

### சூதசங்கிதை பஞ்சாக்கரமந்திரம்.

மாயையாற்பேத நடையராகி,யியங்குறு சீவர்கள் சிவனேடபேத பாவனை செய்வதென்பர் தக்கோர். (௬)

### கூர்மபுராணம் சாங்கிய யோகம்.

பிரமம் யானேயென மறைவிளம்புமன்றே. (உ௬)

### வாயுசங்கிதை ஞானநிலைமை.

ஆன்மாவை, முறையிலந்த மாயைதான் மூடு மலமாயைகெட, வுறை வதுவே சிவமென்ன வுரைப்பராலெனவுரைத்தான். (௧0)

மலமாயும் வீந்ததற்பின், ஒவவில் அப்புருடனே சிவனென்ன வுறை வன். (௧அ)

### சிவஞானபோதம்.

அவனேதானேயாகியவந்நெறி
யேகனுகி யிறைபணிநிற்க
மலமாயைதன்னேடு வல்வினையின்றே. (௧0)

தேவிகாலோத்தரம்.

இப்படியே பாவித்துச் சலியாதான் யாவனவன்
அப்பிரம மாதலாலமுதமா மழகியாய். (சஅ)

அறிவாகிச்சுத்தனு யறிவானுய்வேருகிக்
குறியாது கொளல்வீடு கூடாதுகூறுங்கால்
அறிவார்தாமிலராகிச் சோகாதியடையானுய்ப்
பிறியாத பரப்பிரமமென நிற்பன்பெண்ணணங்கே. (சூ0)

திருவாசகம்.

சிவமேபெறுந்திருவெய்திற்றிலேன்,
பேசினேனேர் பேதமின்மை,
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி,
சித்தமலமறுவித்துச்சிவமாக்கி.

திருமந்திரம் சுடுஞ்சுத்தசைவம்.

நானென்றுந் தானென்று நாடிநான்சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவநல்கலாற்
ருனென்று நானென்றுஞ் சாற்றகில்லேனே. (சு)

ஷ பராவத்தை.

இவனும் அவன் வடிவாமே. (கூ)

ஷ நின்மலாவத்தை.

தானே சிவமான தன்மைதலைப்பட. (கக)

தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே. (கஉ)

ஷ முப்பதம்.

தொம்பதம்தற்பதந் தோன்றுமசிபதம்
நம்பிய சீவன்பரஞ் சிவனுய் நிற்கும். (ஙூ)

தாயுமானவர்.

தன்னையறிந்தவர் தம்மைத்தானுகச்செய்தருளுஞ்சமர்த்தை,
தன்மயமாய்நின்றநிலை தானேதானுகிநின்ருல்
நின்மயமாய்எல்லாம் நிகழும் பராபரமே,
என்னைத்தானுக்கிக்கொண்ட சமர்த்தைப்பார்தோழி,
அதுவானுலதுவாவர் அதுவேசொல்லும்.

என்று கூறினுராகலின், அப்பெரியோர் கூற்றுப்படியே அத்துவிதிகள் கூறுகின்ருரென்க. அப்பெரியோர் கூற்றின் ஒருபாகத்தைக் கைக்கொண்டு மற்ருெரு பாகத்தை யிகழ்பவர் அத்துவிதிகளன்று, துவிதிகளேயாம். இதனுல் நான் என்பதின் பொருள் வாச்சியார்த்தத்தில் சீவன் என்றும் இலக்கியார்த்தத்தில் பிரமம் என்றும் விளங்கின. இஃதறியாது 'பிரமத்துவேஷிகளாய் வெளிப்பட்ட நும்மவர் பிரம ஞானிகளாயிடுதல் யாண்டுமமையாது' என்று பூர்வபட்சியார் கூறியது போலிக் கூற்றென்று விடுக்க.

## சீவேசபேதத்தைப்பற்றியது.

"மகாராணியார் நம்மையாளுகிற பெருமாட்டி யென்று கேட்டவொரு மூடநங்கை நான்றான் அந்த மகாராணி யென்று புலம்பி வெளிவந்தால் உடனே தண்டிக்கப்படாமற் போவளோ?"

என்றார். இஃது உண்மையே. நம்மையாளுகிற மகாராணியை யொருத்தி நான்றான் அந்த மகாராணி யென்று கூறின், அது காரணமாக அவள் தண்டிக்கப்படுவதுபோல,

### சூதசங்கிதை பரமவிஞ்ஞானம்.

"முன்னுமவித்தையாற் பசுபேதமும் மொய்வலிய மாயையினால் பன்னு பரதத்துவ பேதமுங் கற்பிக்கப்பட்டது. (ச)

என்று கூறியபடி மாயோபாதிகனான ஈசுவரனை அவித்தையோபாதிகனாகிய சீவன், நான்றான் அந்தஈசுவரனென்றுகூறின், அதுகாரணமாக அந்தச்சீவன் தண்டிக்கப் படுவன். சீவன் ஈசுரனாவதும் ஈசுரன் சீவனாவதும் ஓர் போதுமின்று. சீவன் சீவனே, ஈசுரன் ஈசுரனேயாம். இவ்விஷயம் வேதாந்த சாஸ்திரத்திற்கு முடன்பாடென்பது

### கைவல்லியம் சந்தேகந்தெளிதற்படலம்.

அச்சுவத்தமென்றொருமரமதிலிரண்டரும்பறவைகள்வாழும்
நச்சுமங்கொருபறவையம்மரக்கனிநன்றுநன்றெனத்தின்னும்
மெச்சுமங்கொருபறவைதின்னாதெனவியங்கியப்பொருளாக
வைச்சுமாமறைசீவனையீசனைவகுத்தவாறறிவாயே. (கூஅ)

இந்தச்சீவனால்வருமறுபகையெலாமிவன்செயலல்லாமல்
அந்தத்தேவனால்வருமென்றமூடர்களதோகதியடைவார்கள்
இந்தச்சீவனால்வருமறுபகையெலாமிவன்செயலல்லாமல்
அந்தத்தேவனாலன்றெனும்விவேகிகளமலவீடடைவாரே. (கூகூ)

நலமெய்யையனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன் பொதுவானால்
சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதேனென்றாயேல்
குலவுமக்களைத்தந்தைபோற்சிட்டரைக்குளிர்ந்துதுட்டரைக்காய்வன்
கலைகணல்வழிவரச்செயுந்தண்டமுங்கருணையென்றறிவாயே. (சு௦)

### ஷை தத்துவவிளக்கப்படலம்.

பேதமானதுவுங்கேளாய்பெயராலுமிடங்களாலும்
ஓதருமுபாதியாலுமுடலாலுமுணர்வினாலும்
பாதலம்விசும்புபோலப்பலதூரமகன்றுநிற்பர்
ஆதலாலிவர்(ஜீவேசுரர்)க்கெந்நாளுமைக்கியமென்பதகூடாதே. (எஎ)

என்பதினால் நன்கு விளங்கும். ஆளுகிறவன் ஆளப்படுகிறவன் என்னும் பேதம் மாயாகாரியத்தி னாகலினாற்றான் சீவனுக்கும் ஈசுரவனுக்கும் ஒன்றாந் தன்மையை வேதாந்த சாஸ்திரங்கள் கூறாதுவிட்டனவென்க.

இப்படிச் சொல்லிவிட்டால் "ஏகமேவாத்துவைதம்" என்ற சுருதிவாக்கியத்திற்குக் கதி யென்னை எனின், மாயைக் கதீதமானவிடத்தில் ஒன்றே, இரண்டில்லையென்பதாம். சொப்பன வுலகு பல பேதங்களோடு கூடி யிருந்தாலும் அதற்கு மூலகாரணமாயுள்ள மனம் ஒன்றுதானே; அவ்வாறே மாயா

காரியமான ஜீவேச ஜகத்தில் பலபேதங்க ளிருந்தாலும் அவற்றினுக்கு மூல மான பிரமம் ஒன்றுதான். இந்த வித்தியாசத்தை யுணராது "எல்ல செட்டி லக்க ஏகலக்க" என்றவாறு ஒன்றுபடுத்திக் கலக்குவது உணர்ச்சியன்று.

இதுபோன்ற கேள்வி யொன்று அரக்கோணவாசி யென்பவர் கேட்டு உத்தரம் பெற்றிருக்கிறார். அது மாயாவாத சைவசண்டமாருதம் முதற் பாகம் 69, 70 வது பக்கங்களிற் காண்க.

## ஆகாயத்தின் நீலவர்ணத்தைப்பற்றியது.

"ஆகாயத்தில் நீலம் சட்டி கூடாரங்களை அத்தியாசமென்று நீவிர் கூறியதையே யாம் மறுத்தோம்........." என்றார். 'மறுத்தோம்' என்று கூறினரேயன்றி அத்வைத தூஷண நிக்கிரகத்தில் இதுவிஷயமாக இவரை மறுத்தெழுதி யிருப்பதைப்பற்றிச் சிறிதும் அனுவதித்துப் பேசினு ரில்லை. பேசாது மறுத்ததையே மீண்டும் மறுப்பாக எழுதுவார்க்கு முன் மறுத்த தையே மீண்டும் ஈண்டெழுதிக் காட்டல் அநாவசியக மென்று விடுத்தா மென்க. இது விஷயமாக அறியவேண்டுமாயின் அத்வைத தூஷண நிக்கிர கம் 19, 20 வது பக்கங்களிலும், "பஞ்சதசப்பிரகரணுபாச விளக்கச் சண்ட மாருதம்" 14 வது பக்கத்திலும் காண்க.

## மனதைப்பற்றியது.

தாயுமானவர் சச்சிதாநந்த சிவத்தில் தமது மரபின் குருவாகிய திரு மூலரது திருமந்திரத்தில்

"மனமாயைமாயைமாயைமயக்கம்
மனமாயைதான்மாயமற்றென்றுமில்லை
பிணமாயவேண்டாம்பிதற்றவும்வேண்டாம்
தனையாய்ந்திருப்பதுதத்துவந்தானே"

என்று கூறியபடி

"இமையளவு போதை யொரு கற்பகாலம் பண்ணு மிவ்வுலகமெவ்வுலக மோவென்றெண்ணம்வருவிக்குமா தர்சிற்றின்பமோவென்னின் மகமேருவா க்கிச், சுமை யெடுமினென்று தான் சும்மாடுமா யெமைச் சுமையாளுமாக்கி நாளுந் தர்ப்புத்திபண்ணி யுளநற்புத்தி யாவையுஞ் சூறையிட் டிந்திரசால, மமையவொருகூத்துஞ் சமைந்தாடுமனமாயையம்மம்மவெல்லவெளிதோ"

என்று மனத்தை மாயையாகக் கூறினர். (மனமாயையென்பது ஈண்டு ப் பண்புத் தொகை) பூர்வபட்சியார் இஃதுணராது "தாயுமான சுவாமிகள் இமையளவுபோது, அணுவளவுபோது என்றது காலத்தின் சுருக்கத்தையும் கற்பகாலம் என்றது காலத்தின் பெருக்கத்தையுமாம்"

என்றும்,

"காலத்தை மன முண்டாக்கியதென்றுபெறப்பட்டதின்று. காலமோ மாயையிற் காரியப்பட்டது. இப்படியே மனமும் மாயையிற்காரியப்பட்டது. இப்படியே மனமும் மாயையிற் காரியப்பட்டது. இதனால் காலமும் மனமும் காரியமாயைகளென் றுபசரிக்கப் பட்டன"

என்றுங் கூறினர்.

காலமென்பது ஒருபொருளன்று. உலகவிவகாரம் நடக்கும் பொருட்டு ச்சூரியனுதியர்களால் கற்பித்துக் கொள்ளப்பட்டது. ஒரு பொருளுண்டா

யின் உண்டாதற்கு முன்னிலைமையை யிறந்த காலமென்றும், பின்னிலை மையை எதிர் காலமென்றும், அப்போதைய நிலைமையை எதிர்கால மென்றும் கற்பித்துக் கொள்கிறோம். இப்படி மன முண்டாயின் அதை வைத்தும் முக்காலம் சொல்லுகின்றோம். இப்படிச் சொல்லும் போது மன முண்டாவதற்கு முன்னே கால முண்டானதாகக் கற்பித்துக்கொள்ள வேண்டிய தாவசியகமாகின்றது. இதனால் மாயைக்குப் பின்னும் மனதுக்கு முன்னும் காலத்தைக் கற்பனையாக அங்கீகரிக்கின்றோம். இதனால் மனதைப் போலக் காலத்தை யுண்மையாகச்சொல்லப்படாதென்பது பெறப்பட்டது. மனதை மாயையாகக் கூறியதற்குக் காரணம் இரண்டினது ஒற்றுமையை நோக்கியேயா மென்க. மனது இமை யளவு போதை யொரு கற்ப காலம் பண்ணுகின்றதென்பதற்குச் சாட்சி சொப்பனமேயாம். சாக்கிரத்தில் ஒரு நாழிகை நித்திரையிலுண்டான சொப்பனத்தை யெத்தனையோ வருஷங்க ளாக மனம் கற்பித்து விடுகின்றது. மனமானது மாயையினு லுண்டாக்கப் பட்டாலும் அது அம்மாயையினையே சிரவண மனன நிதித்தியாசனங்களால் நாசப்படுத்தி விடுகின்றது; இரும்பின் காரியமான அரம் இரும்பினையே அறுத்து விடுவதுபோலாம். இதனால் மனம்வியாவகாரிக சத்தியமென்றும், காலம் வியாவகாரிக கற்பனை யென்றும்பெற்றுமென்க.

"பிரமத்துக் கிரண்டாவது வஸ்துவே யில்லை. இங்ஙனமாக, மனம் என்பதேது? இது பிரமத்துக்குப் பின்னமா? அபின்னமா? சுஜாதியா?விஜாதி யா? சுவகதமா?"

என்கிறார். இவ்வுண்மையை யெத்தனைகோடி ஜன்மம் எடுத்தாலும் உணர மாட்டார்; அதிலும் பிறர் சொன்னாலும் உணர மாட்டார்; அதிலும் எத்தனை முறைசொன்னாலும் உணரமாட்டார். பிரமத்துக்கு இரண்டாவது வஸ்துவே யில்லையென்பது யதார்த்தமே. ஆனால் அதன் பொருள் சத்தாக இல்லை யென்பதேயாம்; இதனால் சதசத் விலட்சண அநிர்வசனீயமா யுண் டென்று அறிவாராக. சதசத்விலட்சணமான அரவும், சொப்பனவுலகும் கயி ற்றுக்கும் மனதுக்கும் பின்னமா? அபின்னமா? சுஜாதியா? விஜாதியா? சுவகதமா? இதை யெவ்வாறு அமைக்கின்றாரோ அவ்வாறே பிரமத்துக்கும் மனதுக்கும் அமைத்துக் கொள்வாராக.

தரிசனோபநிஷத் பத்தாவதுகண்டம்.

ஆகையால் ஜகத்தானது மனதைத் (மனோகற்பனை) தவிரவேறேயில்லை; மாயையுமில்லை.

வராகோபநிஷத் ஸஹநாவவது சாந்தி 2-ம் அத்தியாயம்.

ஜகத் முழுதும் சங்கற்ப (மனத் தோற்றம் அல்லது எண்ணம்) மாத் திரத்தினாலேயே யுண்டாகின்றன. சங்கற்ப மாத்திரத்தினாலேயே ஜகத் தோற்றம். சங்கற்பமாத்திரமா யிருக்கிற ஜகத்தை விட்டு நிர்விகற்பத்தை யாசிரயித்து.

மாண்டூக்கியஉபநிஷத்கௌடபாதகாரிகை அத்வைதப்பிரகரணம்.

யாதொரு சராசரப் பிரபஞ்சமாகிற இந்தத் துவைதமானது மனத்தோ ற்றமே; மனோ நாசமானால் துவைதம் விளங்குகிற தில்லை.

தேஜோபிந்தூபநிஷத் ஐந்தாமத்தியாயம்.

சித்தந்தான் பிரபஞ்சமென்று சொல்லுகிறார்கள்.

யோகசிகோபநிஷத் ஆறம்அத்தியாயம்.

சித்தமானது விஷயங்களுக்குக் காரணமாயிருக்கிறது. அது நசித்தால் ஜகத்தும் நசிக்கிறது. அதைப் பிரயத்தனத்தினாலேயே பரிசுத்தஞ் செய்ய வேண்டியது.

திரிபுரதாபினி உபநிஷத் பத்தாவது காண்டம்.

ஜகத்தானது மனதைத் (மனோகற்பனை) தவிர வேறேயில்லை.

என்றுள்ளவற்றால் மனத்தின் நிலைமையைச் சுருதிப் பிரமாணப்படியும் அறிந்துகொள்வாராக. இதைப்பற்றி அதிகமாய்த் தெரிந்துகொள்ள விரும்புவோர் தத்துவவாதத்தில் "அறிவுமுன்னா? அறிபடுபொருள்முன்னா?" "அறிவே உலகு" "சொப்பனம் சத்தியமென்பதை மறுத்து அறிவே யுலகமென உரைத்தல்" என்ற விஷயங்களால் யுக்தி அனுபவ மூலமாகவுந் தெரிந்துகொள்வாராக.

"உள்ளதை யில்லதாகவும், இல்லதை யுள்ளதாகவும் தோற்றுவிக்கும் மனதை இல்பொருளாகக் கூறுகின்றனர் பெரியோர் என வொன்றுகூறினீரன்றோ! உம்முடைய சித்தாந்தப்படி உள்ளது பிரமம். இல்லது மாயையாம். பொய்யை மெய்யென்றும், மெய்யைப் பொய்யென்றும் சாதிக்கும் வல்லபமுடைய வொரு புருடன் இருந்ததாகக் கொள்வோம். அவனிரண்டுவித சக்திகளையும் வகித்தலால் அவனை யில் பொருளென்று தீர்மானிப்பாருண்டா! இல்லது முள்ளது மாகிய பொருள்களை உள்ளது மில்லதுமாகத் தோன்றச் செய்யும் ஸாமர்த்தியமுடைய மனதை இல்பொருளென்று பெரியோர் கூறத் துணிந்த காரணத்தை நீரும் விளக்கா தொழிந்தீர். எமக்கும் அது புலப்பட வில்லை. இல்லாத வொரு மனது உள்ள தாகிய பிரமத்தை இல்லதாகச் செய்வதெப்படியோ? அப்படியே இல்லாத வொருமனது இல்லதாகிய மாயையை உள்ளதாகச் செய்வ தெப்படியோ?"

என்றார்.

இதற்கு வரும் சமாதானத்தை யுற்று நோக்குவாராக. உள்ளது கயிறு, இல்லதுஅரவு. இந்த அரவானது மருள்காலத்து உள்ளதாகவும் தெருள் காலத்து இல்லதாகவும் காணப்பட்டு, யதார்த்தத்தில் அது இல்ல தாவே யிருக்கின்றது. கயிற்றின்கண் அரவாய்த் தோற்றும் சத்தி யொன்றிருக்கின்றது. எவ்விதக் காரியமும் உண்டாதற்குக் காரணத்தின்கண் அதற்கியைந்த சத்தியிருக்க வேண்டுவது ஆவசியகம். மண்ணின்கண் கடசத்தி யிராவிடில் கடமுண்டாத தில்லை யென்பது எவரும் அறிந்த விஷயம். அவ்வாறே கயிற்றின் கண் அரவு தோற்றுதற் கியைந்த சத்தி யிராவிடின் அரவு தோன்றாது. அந்தச் சத்திக்கு அரவை யுள்ளதாகவும் இல்லாதாகவுந் தோற்றுவிக்கச் செய்யும் வல்லமை யுண்டு. விசாரணை யில்லாக் காலத்துக் கட முள்ளதாகவும், விசாரணை யுள்ள காலத்து இல்லதாகவும் தோற்றுகின்றது. இவ்வித மாயஞ் செய்யுஞ் சத்தி யுள்ளதா, இல்லதா வென ஆராயின், கயிற்றின்கண்

ணுள்ள சத்தியை நாம் என்றுங் கண்டதில்லை; அனுமானத்தின லுண்டெ ன்று கணிக்கின்றோம். அனுமானத்திற்குப் பிரத்தியட்சம் வேண்டும்; அநுமா னித்தற்குப் பிரத்தியட்சமா யுள்ளது புகை. புகை சத்தா யிருந்தாற்றான் நெருப்புண்டென அது மானித்தற்கிடனும். உள்ளதாய்க்காணப்பட்ட புகை பனியாகி அது காரணமாக அப்புகை அசத்தென்று துணியப்படும்பட்சத்து நெருப்பென்ப தேது? அதுபோலப் பிரத்தியட்சஸ்தானத்திலிருக்கும் அரவு விசாரணையில் அசத்தாய்ப் போகுங்கால் அது காரணமாகத் துணியப்பட்ட (கயிற்றின்கண் ணிருப்பதாய்க் கொண்ட) சத்தியென்ப தேது? இவ்விசார ணையில் அசத்தென்று துணியப்பட்ட சத்தியானது அரவை மெய்யாக வும், பொய்யாகவும் செய்விக்கும் வல்லபத்தைப் பெற்றிருக்க வில்லையா? 'இல்லாத வொரு மனது உள்ளதாகிய பிரமத்தை இல்லதாகச் செய்வ தெப்படியோ?' என்றிவர் வினவியதற்கு விடை இல்லதாகிய வொரு அரவு உள்ளதாகிய கயிற்றை யில்லதாகச் செய்வது போலா மென்க. 'இல்லாத வொருமனது இல்லதாகிய மாயையை உள்ளதாகச் செய்வதெப்படியோ?' என்னும்ஆட்சேபத்திற்குச்சமாதானம்இல்லதாகிய கயிற்றரவு, இல்லதாகிய வால் தலை பட முதலியவற்றை யுள்ளதாகச் செய்வதுபோலாமென் றறியக் கடவர். இவ்விஷயத்தை நீரும் விளக்காதொழிந்தீர் என்கிறார். இவ்விஷயம் தத்துவ வாதத்தில் முற்றும் விளக்கப்பட்டிருக்கின்றது. அன்றி அத்வைத தூஷணபரிகாரத்தில் 48, 49 ம் பக்கங்களிலும், அவைதிக சைவசண்டமா ருதம் அல்லது துவித சைவர் விடைகளின் மறுப்பு என்ற நூலில் 123 வது முதல் 141 வது பக்கங்கள் வரையிலும், இன்னும் பல விடங்களிலும் விள க்கப்பட்டிருக்கின்றது. குருட்டு வேஷம் செவிட்டு வேஷம் போட்டிருக்கிற வரையில் இருக்கிற விடம் இவர்க்கு அகப்படமாட்டாது. இதுகாறும்பேசி யுள்ளதை யுவமானமாகக் கொண்டு பார்த்தால் உவமேயங் கண்ணாடிபோல் தெளிவாய் விளங்கும்.

## கவலைவிடல் துவிதத்தி லின்றென்பது.

"எனது கவலை யெல்லாம் விட்டொழிந்தன. தேவரீரது அனுக்கிரகத் தால் யான் க்ஷேமமடைந்தேன். 'பசுநூல்கற்கும் பிச்சரைக்காணுகண் வாய் பேசா தப்பேய்களோடே' என்று சைவத்திருவாளர் கூறிய அமுதவாக்கின் திறத்தை யின் றுணர்ந்தேன்" என்று இதுகாறும் இவரால் கற்பித்துக் கொள்ளப்பட்ட அத்தியாச அத்வைதியார் கூறியதாக எழுதியதின் மறுப்பு வருமாறு:—

துவிதமுள்ளளவும் கவலையும் மாயையும நீங்குதல் என்றொன்று மின் றாதலின், இவரடைந்த க்ஷேமம் ஐயாயிர மயில் தூரத்திலிருந்து இங்கு வந்து இரட்சிப்படைந்தோம், இரட்சிப்படைந்தோம் என்று பிரசங்கிக்கும் இரட்சண்யசேனையார் அடைந்த க்ஷேமமேயாம். யாண்டு யாண்டுத் துவித முண்டோ, ஆண்டாண்டுத் துக்கமே காணப்படுதலின் இவரது துவிதமதத் தில் துக்கம் நீங்கி க்ஷேமம் பெறுவது கனவேயாம்.

'பசுநூல்கற்கும் பிச்சரைக்காணுகண் வாய்பேசாதுஅப்பேய்களோடே'

என்பது திருமாளிகைத் தேவரியற்றிய "இணங்கிலாவீசன்" என்னும் பதிகத்தில் ஒன்பதாவது செய்யுளி லிருக்கிறது. ஒன்பதாவது செய்யுளி

னுள்ள பசு நூல்கற்கும் என்ற தொடரைத் தேவேந்திரனு யிருந்து கண்ட இவர், அப்பதிகத்தின் ஐந்தாவது செய்யுளில்

''பேதவாதப்பிசுக்கரைக் காணுகண் வாய் பேசாது அப்பேய்களோடே''

என்றிருத்தலைக் காணத் திருதராஷ்டிரரானார்போலும். திருமாளிகைத் தேவர் 'பசுநூல்கற்கும் பிசுக்கரைக் காணுகண் வாய் போசாது அப்பேய்க ளோடே' என்று கூறியது ஐந்தாவது செய்யுளிற் கூறிய 'பேதவாதப் பிசுக் கரை' யேயாம். பேதவாதப் பிசுக்கருக்குப் பிறப்பறுதென்பது

சூதசங்கிதை பிரகதாரணியதாற்பரியத்தில்

''விராவிய பேதபுத்தியே சன்மம் விளைசமுசாரமாம்'' (சு)

என்றிருத்தலினால் நன்கு விளங்கும். பேதம் யாண்டும் துக்கத்திற்கு எதுவா யிருத்தலினாற்றான் அத்திருமாளிகைத் தேவர் 'பேத வாதப் பிசுக் கரைக் காணுகண் வாய் பேசாது அப்பேய்களோடே' என்றுகூறி, முத்தி யிலும் பேதம் கூறும் இவரினத்தாரையும், இவரினத்தார் போன்றாரையும் விலக்கினா ரென்க. அவர் இவரையும் இவரினத்தாரையும் இவர்போன்றாரை யும் 'பேய்கள்' என்று கூறி விலக்க, பூர்வபட்சியார் அவரைத் தம்மினத் தவரென்று மருண்டு வேதபாஹியசித்தாந்தியாக்க முயலுதல் என்னேயோ! பூர்வபட்சியார் திருமாளிகைத் தேவர் 'பசுநூல்கற்கும்பிச்சரை' என்றுகூறி யதுகொண்டு, தாம் வேதத்தைப் பசுநூல் என்று கூறுவதுபோல் அவருங் கூறினாரென்று பிரமித்தாராக்கும். அத்திருமாளிகைத் தேவர்

''வைதிகத்தேரேறிய வேறு சேவகனே''

என்றும்,

''பெருவளர்முத்தீநான்மறைத்தொழில் சாலெழின் மிகு பெரும்பற்றப் புலியூர்''

என்றும்,

''வேதாந்தக்குறியே''

என்றும் கூறி; வைதிகத்தையும், வேள்வியையும், வேதாந்தத்தையும் சிறப்பா யெடுத்ததுடன்

''வேதவென்றிமாறுத மூவாயிரவரையு மெனையும் மகிழ்ந்தாளவல்லாய்''

என்றுங் கூறியதனால், வேதம் பசுநூ லன்றென்பது திருமாளிகைத் தேவரது சித்தாந்தமாயிற்று. பின்னை, அவர் 'பசுநூல்' என்றது எதை யெனின், சிவனுக்கு அபரிபூரண தோஷமுண்டாகுமாறு சீவான்மாவுக்குச் சத்தியத்துவங் கூறுவதும், அதினும் முத்திதசையிலுங் கூறுவதும், அதி னும் சிவனுக்கே தாம்பூலம் பிடிக்குமாறு வியாபகங் கூறுவதும், அதினும் சிவனைப்போல வியாபகங் கூறுவதுமான இவரது அவைதிக நூலினையேயா மென்க. பூர்வ பட்சியார் வேதத்தைப் பாட்டிக்கதையென்பதாதியாகத் தூஷித்து, வேதசம்மதம் பெறாத ஆகம பட்சத்தைத் தஞ் சித்தாந்தமாகக் கொண்டாராகலின், அவ்வாகம நூலே பசு நூலாமென்க. திருமாளிகைத்

தேவர் முத்தியிலும் பேதங்கூறும் பேதப் பிசுக்கரைக் கண்கள் பார்க்கப்படா வென்றும் வாய் அவரோடு பேசப்படாது என்றுங் கூறினர்; பிரமகீதையின் ஐதரேய உபநிஷத்தோ அன்னேரோடு கூடின்

கனவிற்கண்டபொருள்நனவிற்காணும்பொருளைக்காட்டலால்
நினையிற்சமயநெறிவேதநெறிக்குநிமித்தமாகினைமின்
வினவிற்சமயநெறிவிட்டுமேலாம்வேதநெறிநின்றேன்
பினையச்சமயத்தவன்குறுகிற்பிராயச்சித்தஞ்செயல்வேண்டும். (௧௪)

தண்ணிபசமயிகள்தங்கள்பந்தியில்
உண்ணுதல்அவர்களோடுறவுபண்ணுதல்
புண்ணியமறிந்திடப்புகுதல்செய்திடில்
பண்ணுகசாந்திராயணம்பகர்ந்தவா. (௧௫)

என்றவாறு பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டுமென்றும், சாந்திராயண விரதத்தை யனுசரிக்க வேண்டுமென்றும் கூறிற்று.

## வியாவகாரிகம் மெய்யன்றென்பது.

அத்வைத தூஷண நிக்கிரகநூலின் இறுதியில் இவரும் இவரினத்தவரும் பாஷாண்டிகளென்பதை நிரூபிக்கும் பொருட்டு, பிரம கீதை ஐதரேய உபநிடதத்தில் மூன்று செய்யுளும், ஷை கேனோபநிடதத்தில் ஒரு செய்யுளும், சிவரகசியம் ரிபுகீதையில் இரண்டு செய்யுளும், சூத சங்கிதை சூத கீதையில் ஒரு செய்யுளும் காட்டப்பட்டிருக்கின்றன. அதனை நன்குணருமாற்றலைத் தீயூழ் வசத்தாலிழந்த இப்பூர்வபட்சியார், அச்செய்யுட்களேழில் ஐந்தினைவிட்டு இரண்டைமாத்திர மெடுத்துப்பேசி, அதனை விளக்குமாறு

"சிவபெருமானுக்குத் திருவடிகள்—திருமுடி முதலிய ஏனை யங்கங்களை யொப்புவது சித்தாந்திகளுக்குப் பரமார்த்தம். மாயா வாதிகள் ஈசுவர சொரூபத்தை மிச்சை யென்பார்கள். மிச்சாவாதப் பிரசின்ன பௌத்தர்களாகிய அன்னோர்க்குத் திருவடிக் கமலத்தியானம் சத்தியமாவ தெங்கே? சிவனரது சொரூபத்தையும், அவரது இருபாதப் போதுகளையும், அவற்றின் தியானத்தையும் பரமார்த்தத்திற் பொய்யெனப் பொங்கிவழியும் தூஷகர்களையே பாஷாண்டிகளென்று அவர் தேடிய பாடல் திரஸ்கரித்தபடியாம்"

என்றார். சிவபெருமானுக்குத் திருவடி முதலிய அங்கங்களைப் பரமார்த்தமாகக் கூறுவதற்கு ஏது ஒன்றும் கூறினரில்லை. ஏது கூறாமல் கிறிஸ்தவர்கள் பிரசங்கிப்பதுபோல வாய்ப்பந்தர்போடுவதினால் வரும் பயன் ஒன்றும் இன்று. சிவபெருமானுக்குத் திருவடி முதலிய அங்கங்களே இயல்பாயின் அச்சிவத்தை நிரவயவமென்று கூறுதல் பழுதாம். சிவபெருமானுக்குத் திருவடி முதலிய அங்கங்கள் பரமார்த்தமாயின், அவர் அவ்வச்சமயங்களில் எடுத்த சித்தர், வேதியர், பன்றி, பட்சி முதலிய அவதாரங்களின் அவயவங்களையும் பரமார்த்தமென்று கொள்ளவேண்டும். ஏது பரமார்த்தமோ, அது முக்காலத்தினு மிருக்கவேண்டும். அவ்வாறின்றி யொவ்வோர் காலங்களில் அவயவங்கள் சிவபெருமானுக்கு இருத்தலால் அவை பரமார்த்தமென்று

கூறுதல் தவரும். பின்னே யாது கூறவேண்டுமெனின், அவயவங்கள் சிவ பெருமானுக்கு வியவகாரிகமா யிருக்கின்றனவென்று கூறவேண்டுமென்க.

அப்பய்யதீட்சிதரியற்றிய சிவதத்துவவிவேகத்தில்

(சிவஞான சுவாமியின் மொழிபெயர்ப்பு)

குணங்களைக்கடந்தோயெனினுமாயையினைத்தோய்தலாற்குணமுடையவன்
அணங்கொருபாலுங்கறைமிடற்றழகுமம்பகமூன்றுமாமுருக்கொண் [போல்
டிணங்குறுநாமஞ்சிவனபவன்முதலாவியைந்தயனரியரன்முன்னு
முணங்கிடாவுலகைநடத்துவோனுகியோங்கினைநீங்கரும்பொருளே. (கக)

என்ற செய்யுளின்படி சிவபெருமான் மாயையோடுகூடினுல் அவயவங்க ளுண்டென்றும் கூடாவிட்டால் இல்லையென்றும் பெறப்பட்டன; படவே, சிவபெருமானுக்குத் திருவடி முதலிய அவயவங்க ளிருத்தல் மாயையோடு கூடிய வியவகாரிகதசையிலென்றும், அவை யில்லாமற்போதல் பரமார்த்த தசையி லென்றும் பெற்ரும்;பெறவே, சிவ பெருமானுக்குப் பரமார்த்த மாகத் திருவடி முதலிய அங்கங்க ளுண்டென்று கூறுதல் அவைதிக அவ சித்தாந்தமாமென்க.

சிவபெருமானுக்குத் திருவடி முதலிய அங்கங்களிருத்தல் வியவகாரிக தசையினன்றிப் பரமார்த்தத்திலின்றென்பதற்குச் சுருதியாதிப் பிரமாணம் வருமாறு:—

மைத்திராயணீணியுபநிஷத்து 6-வது பிரபாடகம்.

பிரமத்திற்கு மூர்த்தம், அமூர்த்தம் என இரண்டு ரூபங்க ளுள்ளன. எது மூர்த்தமோ (உருவமோ) அது அசத்தியமானது; அமூர்த்த மெதுவோ, அது சத்தியமானது; இதுதான் பிரமம்.

சூதசங்கிதை பஞ்சாக்கரம்.

வாசக வாச்சிய பாவமிலச்கிய நல்லிணக்கண பாவங்கண் முன்னுப்
பேசவருபவை யாவும் விவகார தசையினன்றிப் பிறங்காநின்ற
மாசகன்ற பரமார்த்த நிருபணத்திலில்லை. (கஉ)

## தோல்வியையே வெற்றியாகப் பேசுதல்.

பிரசின்ன பௌத்தரென்பார் இவரினத்துவரேயெனத் தக்க காரண த்தோடு மாயாவாதசைவசண்டமாருத மென்னு நூலில் 174,175,176,177, 178,179, 180-வது பக்கங்களில் விரிவாயெழுதியிருப்பதைப் பற்றியொன் றும் பேசாது "சொன்னதையே சொல்வானும்,சோமபேறிக்குப்பன்' என்ப தற்கிணங்க மீண்டும் அத்வைதிகளை 'பிரசின்ன பௌத்தராகிய அன்னேரு க்கு' எனக்கூறுகின்ருர். இதுவெற்றியை விரும்பும் யோக்கியர்க் கழகன்று!

இதுநிற்க; வேதமார்க்கத்தைவிட்டு வேறு மார்க்கத்திற் சென்றவரைப் பற்றியன்றியன்ரு

பிரமகீதை ஐதரேயஉபநிடதம்.

வேதஞ்சொனபடி யொழிய வேறுசில கலைகளினை
யோதுந் திறமருவி மறையோதுஞ் சிவனிருகமலப்
பாதந்தொழ நினைவிலர்கள் பாசண்டிகளெனவறிக. (கக)

என்று கூறிற்று? இங்ஙனமாக, வேதமார்க்கத்தினில்லாது வேதபாஹிய மார்க்கத்தினின்று வேதமார்க்கத்தை யிகழும் பூர்வபட்சியார், வேதமார்க்கத்தினிற்கும் வேதாந்திகளைப்பாஷாண்டிக ளெனக்கூறுதல் நியாயமாமோ! இது எப்படியிருக்கின்ற தென்றால் குருடன் கண்ணுள்ளவனைநோக்கிக் குருடனே என்று கூப்பிட்டதற் கினமா யிருக்கின்ற தென்க.

பின்னர் "நல்லது இந்தத் தர்மதம் முதலி லெப்படி யுண்டாயிற்று?" என வினவைக் கிளப்பி அதற்கு விடை "சூரபத்பனுக்குச் சுக்கிரபகவானிதனை யுபதேசித்தனர் கண்டாய்" என்று தொடங்கி, இதே விஷயமாகச் சில வெழுதினர். இவ்வாறு முன்னர் இவரினத்தவர் பேசி மாயாவாத சைவ சண்டமாருத மென்னும் நூலில் 157 - வது பக்கமுதல் 172 - வது பக்கங்கள் வரையிலும் மறுக்கப்பட்டனர். அதனை யோராது இவர் மறுக்கப்பட்ட அவ்விஷயத்தினையே மீண்டெழுதுதல் நன்மதியுள்ளார் செய்கையன்று.

மாணிக்கவாசகர் "மிண்டிய மாயாவாதமென்னும் சண்டமாருதம் சுழித்தடித்தாஅர்த்து" என்று கூறி, மாயாவாதிகளை நிஷேதித்தா ரென்றார். மாயாவாதிக ளென்பார் இவரும் இவ ரினத்தவருமேயென இப்புத்தகம் 5,6,7, 8-வது பக்கங்களில் நன்கு விளக்கப்பட்டிருக்கப்பட்டிருக்கின்றமையினானும், மாணிக்கவாசகர் நிஷேதித்தது இவரினத்தவரையே யென்று "துவிதசைவரே மாயாவாதிகள்" என்னும் நூலின் 23 வது பக்கத்திற் பேசப்பட் டிருக்கின்றமையினானும் மாணிக்கவாசகர் மாயாவாதியென்று கூறியது வேதபாஹியரான இப்பூர்வபட்சியின் இனத்தாரையே யென்க. இவ்வாறு ஒவ்வொரு விஷயத்திலும் பன்முறை சமாதானம் பெற்ற பழைய ஆசங்கைகளையே செய்வது மானமுள்ளார்க்கு அழகன்று.

அப்பால் விஷய முடிவில் இவரது கற்பனா அத்வைதியார் "இதுவரையில் அவர்கள் வெளியிட்டதும், வெளியிடப் போவதுமாகிய யாவும் எனக்கே வெகு துச்சமா" மென்று கூறியதாக வெழுதினர்.

முன்னர் வெளியிட்ட துவிதசைவ கண்டனங்களாலும், இப்போது வெளியாய இவ்வத்துவித விளக்கத்தாலும் இவரது மதமும் இவரெழுதிய ஆபாச வினாவிடையும் அக்கினி மலையிற்பட்ட பஞ்சுத்துய்போல் இருந்த விடந் தெரியாது போயினமையின் பூர்வபட்சியாரது கூற்றே அச்சத்திலும் மிகு துச்சமாயிற் றென்க. பூர்வபட்சியார் 'வெளியிடப் போவதுமாகிய யாவும் எனக்கே வெகு துச்சமாம்' என்று வரைந்ததை நோக்குமிடத்து அது ஆபாச வினாவிடைக்கு மறுப்பு அவசியம் வந்துவிடுமென்பதைக் குறிக்கின்றது. அவரெண்ணத்தின்படியே மறுப்பும் வந்துவிட்டது. இம்மறுப்புக்குப் பதி லெழுதுந் திறமில்லாதவ ரென்பது 'வெளியிடப் போவதுமாகிய யாவும் எனக்கே வெகு துச்சமாம்' என் றிவர் கூறியதினால் நன்கு விளக்கமாம். ஆகவே, இனி இதுபற்றிப் பேசுதல் யாதுமின்மையின் இதோடு இவ்வாதத்தை நிறுத்திக்கொண்டாம்.

## அத்வைததூஷண நிக்ரக மர்த்தனமர்த்தனம்.

ம-௱-௱-ஸ்ரீ மதுரை ம. ஷ. சாமிநாதபிள்ளை யென்பாரொருவர் ஷை அத்வைத தூஷண நிக்ரகமென்னும் நூலுக்கு மறுப்பாக "அத்வைத தூஷண நிக்ரகமர்த்தனம்" என்ற பெயரோடு ஷை சதாசிவப்பிள்ளைக்குச் சகபாடியாக நின்று ஓர் சிறு புத்தகம் வெளியிட்டனர். அப்புத்தகமும் முன்னொடு பின் முரணுவதாயும் ஷை சதாசிவப்பிள்ளை வெளியிட்ட ஆபாசவினு விடையை யனுசரித்ததாயும் அதிற் பேசாத (முக்கிய) விஷயம் யாதுமின்றியும் இருத்தலின். அதற்கென ஓர்மறுப்பெழுதுதல் (அவ்வாபாச வினுவிடையின் மறுப்பே இதற்கும் மறுப்பாக வமைதலின்) எற்றிற்கென விடுத்தாம். விடவே, 'அத்வைததூஷண நிக்ரகமர்த்தனம்' என்னும் நூலையும் இவ்வத்துவித விளக்கமென்னும் நூல் மர்த்தனம் செய்ததென்பது பசு மரத்தாணியாமென்க.

## முடிவுரை.

துட்டருமார்க்கர்நூலிற்றுவக்குணுப்பெரியராகிச்
சிட்டராய்த்தீரராகிச்சிவனருளுடையரானூர்
கட்டமாம்பிறவிதீரக்காதலால்வேதஞ்சொல்லப்
பட்டதேசெய்யாநிற்பர்பரமமாம்பதத்தையுன்னி. (உ௬)

என்று பிரமகீதை ஐதரேய உபநிடதார்த்தத்திற் கூறியதை ஆபாச வினுவிடையின் ஆசிரியரான சதாசிவப்பிள்ளையும், அவரது சகபாடியாய் வந்த சாமிநாதபிள்ளையும், இவ்விருவருக்கும் இவ்விஷயத்தில் முக்கியத்தலைவரா யிருக்கும் சோ. நாயகரும், அவரைச் சேர்ந்தாரும், அவர்போன்ற பிறரும் சிந்தித்து நன்னடையை மேற்கொள்ளாததினுற்றுன், வேதப்பிரதிபாதகமான வேதாந்தத்தை யிகழுந் தொழிலை விலைகொடுத்து வாங்கி யிழுக்கடைந்தார்கள். அந்தோ! இவர்கள் நன்மாக்கத்திற் பிரவேசிப்பது என்னாளோ? இனிமேலாகிலும் இவர்கள் இவ் வத்துவித விளக்கத்தை நல்லுணர்வோடிருந்து படித்துச் சிந்தித்து மனவொருமையடைந்து, வேதநெறியே மெய்ந்நெறி யென்றும், வேறு நெறியெல்லாம் வீண் நெறியென்றும், சாதன சதுஷ்டயத்தை யடைவதற்குச் சரியையாதிகள் சாதனமென்றும் உணர்ந்து, வேத விரோதமின்றிய சிவபூசையாதிகளைச் செய்து, அதன் முதிர்ச்சியினலாய ஆத்மாநாத்ம விசாரணையினுல் ஞானத்தைப் பெற்று வாழுமாறு கிருபை செய்யச் சச்சிதானந்த சொரூபனுயுள்ள ஜகதீசனை சதா பிரார்த்திக்கின்றனம். சுபமுண்டாகுக.

முற்றிற்று.



# துவிதசைவ கண்டனநூல்கள்.

(தபால்கூலி முதலியன பிரத்தியேகம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | தத்துவவாதம் ... ... ... | 0 | 4 | 0 |
| 2 | சங்கராசாரியர் அவதாரமகிமை ... ... | 0 | 4 | 0 |
| 3 | வேதாந்தசங்கை நிவாரணம் ... ... ... | 0 | 4 | 0 |
| 4 | சித்தாந்திகளும் ஏகாத்துமவாதிகளே ... ... | 0 | 1 | 0 |
| 5 | அத்வைததூஷணபரிகாரம் ... ... ... | 0 | 8 | 0 |
| 6,7 | பதிபசுபாசவாதம், துவிதசைவரே மாயாவாதிகள் ... | 0 | 12 | 0 |
| 8 | மாயாவாதசைவ சண்டமாருதம் ... ... | 1 | 0 | 0 |
| 9 | திருவள்ளுவர் முதற்குறள் ... ... ... | 0 | 0 | 6 |
| 10 | அத்வைதவுண்மை ... ... ... | 0 | 4 | 0 |
| 11 | பசு சச்சிதானந்த முடையதா? ... ... | 0 | 1 | 6 |
| 12 | அவைதிகசைவ சண்டமாருதம் ... ... | 1 | 0 | 0 |
| 13 | முடிவுரைச் சூறுவளி ... ... ... | 0 | 0 | 6 |
| 14 | பஞ்சதசப்பிரகரணுபாசவிளக்கச்சண்டமாருதம் ... | 0 | 2 | 0 |
| 15 | துவிதாத்துவிதவாதம் ... ... ... | 0 | 10 | 0 |
| 16 | துவிதசைவ மறுப்பு ... ... ... | 0 | 6 | 0 |
| | ☞ தத்துவவாதம் முதல் துவித சைவ மறுப்பு ஈருகப் புஸ்தகம் 16-க்கு வாலியம் 1 (ஒரேகட்டடம்) ... | 4 | 0 | 0 |
| 17 | அத்வைததூஷண நிக்கிரகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 18 | முதற்குறள்வாதம் ... ... ... | 0 | 1 | 0 |
| 19 | பேதவாத திரஸ்காரம் ... ... ... | 0 | 8 | 0 |
| 20 | திருமந்திரவிசாரணை ... ... ... | 0 | 4 | 0 |
| 21 | ஜீவான்மாவின் பரிமாணம் ... ... ... | 0 | 0 | 6 |
| 22 | அத்வைத விளக்கம் ... ... ... | 0 | 12 | 0 |

இப்புத்தகங்கள் சென்னை ரிப்பன் அச்சியந்திர சாலையில் விற்கப்படுகின்றன.

---

முதற்குறள்வாத நிராகரணத்தின் மறுப்பும், வேதாந்த தீபிகையும் இனி வெளிப்படும்.